21/2

ௐ

# ப்ரஹ்ம ஸூத்ரம்

## சங்கர பாஷ்யம்

(இரண்டாவது அத்யாயம்)




தமிழ் உரைஆசிரியர்.

ஸ்ரீலஸ்ரீ சுவாமி யோகானந்தகிரி அவர்கள்.

வேதாந்த ஆச்சாரியாள்,

தலைவர்,

ஸ்ரீலஸ்ரீ பிரஹ்மானந்த சுவாமிகள் மடாலயம்

அவனியாபுரஞ்சாலை தெற்குவாசல்,

மதுரை

ௐ

# ப்ரஹ்ம ஸூத்ரம்

## சங்கர பாஷ்யம்

(இரண்டாவது அத்யாயம்)





தமிழ் உரைஆசிரியர்.

ஸ்ரீலஸ்ரீ சுவாமி யோகானந்தகிரி அவர்கள்.

வேதாந்த ஆச்சாரியாள்,

தலைவர்,

ஸ்ரீலஸ்ரீ பிரஹ்மானந்த சுவாமிகள் மடாலயம்

அவனியாபுரஞ்சாலை தெற்குவாசல்,

மதுரை

---



1982

விலை 5-50

ௐ

# குரு மங்கள ஸ்துதி

ஓம் நமோ ப்[3]ரஹ்மாதி[3]ப்[4]யோ

ப்[3]ரஹ்ம வித்[3]யா ஸம்ப்[4]ரதாய கர்த்ருப்[4]யோ

வம்ச ரிஷிப்[4]யோ மஹத்[3]ப்[4]யோ நமோ

கு[3]ருப்[4]ய:

## பொருள்:-

பிரஹ்ம வித்தை எனப்படும் உபநிஷத் ஞானத்தை இவ்வுலகில் பரப்பிய பிரஹ்மா முதலான (வசிஷ்டர், வியாஸர், சுகர், கௌடபாதர், கோவிந்தபாதர், சங்கரர்) அனைவரையும், வழிவழியாக வந்த ரிஷிமஹான்களான குருவரர்களையும் வணங்குகிறோம்.

# பகவான் சங்கரர்



## சங்கர ஸ்துதி

கு[3]ருபுங்க[3]வ ! புங்க[3]வ கேதன ! தே

ஸமதாமயதாம் நஹி கோபி ஸுதீ[4]

சரணாக[3]த வத்ஸல ! தத்வ நிதே[4] !

ப[4]வ சங்கர ! தே[3]சிக ! மே சரணம்

பொருள் :-

குரு சிரேஷ்டரே ! உயர் குருநாதரே !
உமக்கு சமமான ஞானிகள் எவருமிலர்.
சரணடைந்தோர்க்கு அருள்பவரே !
தத்வஞானக் களஞ்சியமே !
ஹே சங்கர ! ஹே தேசிக ! எனக்கு
சரணமளிப்பீர்களாக,

21/2

பவ சங்கரதேசிகமே சரணம்

## இந்நூல் உரையாசிரியர்



ஸ்ரீலஸ்ரீ சுவாமி யோகானந்தகிரி அவர்கள்

யோக வேதாந்த ஆச்சாரியாள்.

ஸ்ரீ பிரஹ்மானந்த சுவாமிகள் மடாலயம்.

அவனியாபுரஞ்சாலை,

தெற்கு வாசல்

மதுரை.



தங்கமணி அம்மையார்

# பிரஹ்ம சூத்திரத்தின் இரண்டாவது அத்தியாயம்.

## பரிந்துரை.

சங்கரம் சங்கராசாரியம் கேசவம் பாதராயணம்!
சூத்திரபாஷ்ய கிருதௌவந்தே பகவந்தௌ புந: புந:.

பாரத நாட்டின் கலாசாரங்களுக்கு மூலகாரணம் வேதமென்பது யாவராலும் ஒப்புக்கொள்ளப்பட்ட விஷயம். இதைத்தான் முதல் நூலென்று முனிவர்கள் மொழிகின்றனர். பாரதநாட்டின் பழைமை யான நூல்களுக்கு இதுவே பிராணன் எனப்படும். முக்கியமென்பதுக் குறிப்பு. வேதத்தை ஞான அர்ணவமென்றும் நவில்வர். நவில்தல்—சொல்லுதல். அர்ணவம்—கடல். கடலில் கரையிலாத நீர் நிறைந்திருக்கிறது. வேதத்தில் ஞானம் நிறைந்திருக்கிறது. கடல்நீரை மேகம் எடுத்துத் தூய்மை செய்து நிலத்தில் பெய்கிறது. நிலத்திலுள்ள வெப்பமனைத்தும் தணிகிறது. அதுபோல வேதமென்னும் கடலில் உள்ள ஞானமென்னும் நீரை நமது ஆசாரிய சங்கரர் மக்கள் உள்ள மென்னும் நிலத்தில்பெய்து பிறவிப்பெறும் பிணியென்னும் பெரும் வெப்பத்தைத் தணியச் செய்கின்றார்.

அவ்வகைப்பட்ட வேதம் நான்கு எனப்படும். ரிக்வேதம், யஜுர்வேதம், சாமவேதம், அதர்வணவேதம். விஷயதிருஷ்டியால் வேதம் மூன்றுகாண்டமாக மொழியப்படுகிறது. அவை—கருமகாண்டம் உபாசனகாண்டம், ஞானகாண்டம். ஞானகாண்டம் வேதாந்த-மென்றும், உபநிஷத்தென்றும் பிரஹ்ம வித்தையென்றும் சொல்லப் படும். உபநிஷத்திற்குப் பொருள். உப, நி இவையிரண்டும் உப சர்க்கம்-அடைமொழி. சத் என்பது ஒருபகுதி. அதற்கு மூன்றுபொருள். அவை - விசரணம், கதி, அவசாதனம். முறையே நாசம், அடைவு, நெகிழ்த்துதல் என்பது பொருள். சம்சாரகட்டை நெகிழ்த்தி, அவித்-தையும் அதன்காரிய சம்சாரத்தையும நாசஞ் செய்து பிரஹ்மத்தை அடையச்செய்வது உப நிஷத்திற்குத் திரண்டபொருள்.

சுருக்க எழுத்துக்களால் பொருளை விளக்குவதால் சூத்திரமெனப் படும். உபநிஷத்தின் சுருக்க வாக்கியங்களால் பிரஹ்மத்தை விளக்கு வதால் இது பிரஹ்ம சூத்திரமெனப்படும். இதை வேதாந்த தர்சனம், வியாச சூத்திரம் இன்னும் பற்பல நாமங்களால் விளம்புவர் வேதாந்திகள். இந்த இரண்டாவது அத்யாயத்திற்கு அவிரோத

அத்யாயமென்று பெயர். இந்த அத்யாயத்தில் (47) அதிகரணம் உள. சூத்திரம் (157) நூற்றிஐம்பத்தேழு இதில் அடங்கியிருக்கின்றன. சூத்திரம் முழுவதும் முதல் அத்யாயத்தில் கொடுக்கப் பெற்றிருக்கிறது. ஆங்கு கண்டுகொள்க. இதைக் குருவாயிலாக முறைப்படிக் கற்று உணர்ந்து நற்கதியை அடையும்பொருட்டு எமது குருபரனை வேண்டுகிறேன்.

வியாசரால் விளம்புமிந்த விமல வேதாந்தமென்னும்
நியமமாம் பிரமசூத்ரம் நிறை குருவினிடங்கேட்டு
தியாக மெய்யுணர்வுப் பெற்று தினகரன்போல் விளங்கி
வியாதி யாதிகளில்லாத விரிந்த வீடடைவீர் நீரே.

இந்நூல் உரையாசிரியர்.
ஸ்ரீ. சுவாமி யோகானந்தகிரி. அவர்கள் வேதாந்த ஆசாரியாள்.
ஸ்ரீ பிரஹ்மானந்த சுவாமிகள் மடத்தின் அதிபர்.

ஸ்ரீ. பிரஹமானந்த சுவாமிகள் மடம்,
அவனியாபுரஞ்சாலை,
தெற்கு வாசல்,
மதுரை-12.

# சூத்திர அடக்கம்



# பிரஹ்ம சூத்திரத்தின் இரண்டாவது பாகம்

## அணிந்துரை

மெய்யன்பர்களே! பாரமில்லாத பவத்தைக் கடப்பதற்கு (வேதாந்த தரிசனமென்னும்) பிரஹ்ம சூத்திரத்தை பகவான் வியாசர் வரைந்துதந்தார். பாரம்—எல்லை. பவம்—சம்சாரம். இந்த பிரஹ்ம சூத்திரமென்னும் ஞானக் கப்பலில் ஏறியவன் ஊனமுள்ளப் பிறவிப் பெருங்கடலை ஞானமுள்ளவனைப் போன்று நனிக்கடப்பன் என்பதில் எட்டுணையும் ஐயமின்று.

இந்த பிரஹ்ம சூத்திரத்தில் இனிய நான்கு அத்தியாயமுள்ளன. ஒவ்வொரு அத்தியாயத்திலும் நான்கு பாதங்கள் உண்டு. இந்த பிரஹ்ம சூத்திரத்தைப் படிப்பவர் நலனுக்காக நான்கு பாகமாக அதாவது (நான்கு வால்யுமாகச்) செய்யத் துணிந்துள்ளேன். முதற்பாகம் (முதல் அத்தியாயம்) சங்கரபாஷ்ய உரையுடன் எனது குலதெய்வமாகிய ஸ்ரீ சங்கரர் கிருபையால் வெளியிட்டிருக்கிறேன். இப்போது இது இரண்டாவது பாகமாகிய இரண்டாவது அத்தியாயம் ஸ்ரீ சங்கரபாஷ்ய உரையுடன் வெளிவருகிறது. இன்னும் ஏனைய பாகங்கள் எளிதில் வெளிவர இனிய சங்கரர் அருள் புரிவாரென்று நம்புகிறேன். பிரஹ்ம சூத்திரப் பெருமையை விரிவாக அறிய வேண்டின் முதல் அத்தியாய முன்னுரையில் மொழிந்திருக்கிறேன் ஆண்டு கண்டுகொள்க.

## நூற்பயன்

### அகவல்

பிரம சூத்திரம் என்னும் இப்பெருநூல்
இரக்கமும் ஈகையும் இனிய ஞானமும்
தந்திடும் என்பதில் சந்தேகம் இல்லையே
பந்தத்தைப் போக்கி துவந்தத்தை நீக்கி
மறைப்பையும் பிறப்பையும் மாற்றிநல் இன்பத்தைப்
படிப்பவர் தமக்குப் பரிந்தளித் திடுமே.

சங்கர ! சங்கர ! ஜெய ஜெயசங்கர.

## அவிரோதமென்னும் இரண்டாவது அத்யாயம்

### ஸ்மிருதி அதிகரணம்

அவதாரிகை (முதல் பாதம்)

முதலாவது அத்யாயத்தில் எல்லாவேதாந்த வாக்யங்களும் ஒரு முகமாகப் பரம்பொருளை உலகிற்குக் காரணமாக ஒப்புக்கொண்டிருக்கின்றன. இங்கு காரணமென்பதால் உபாதானத்தையும் நிமித்தத்தையும் சேர்த்துக்கொள்ள வேண்டும். இதனுல் முந்திய அத்யாயத்திற்கு ச ம ன் வ ய அத்யாயமென்று மொழியப்பட்டிருக்கிறது. பிரஹ்மம் நிகில உலகிற்குக்காரணம். இந்த விஷயத்தில் சுருதியில் ஒரு விரோதமும் அன்று. ஜடப்பொருள்களை ஜகத்திற்குக் காரணமாகக் கூறும் சாங்கிய முதலிய வாதங்களை சப்தப் பிரமாண சூன்யமாகக் கூறி வேறுபல ஹேதுக்களால் நிராகரிக்கப்பட்டிருக்கின்றன. இனி சுருதி ஸ்மிருதிகளில் வருகின்ற விரோதங்களை விலக்கும் பொருட்டு அவிரோத மென்னும் அத்யாயந் தொடக்கப் படுகின்றது. ஸ்மிருதி விரோத பரிகாரமாகச் சூத்திரம் வருமாறு.

### சூ. ஸ்மிருதி அனவகாச தோஷ[3] பிரசங்க[3] இதிசேன் ந அந்ய ஸ்மிருதி அனவகாச தோஷ[3] பிரசங்காத்[3] 1.

ஸ்மிருதி அநவகாச தோஷபிரசங்க:= பிரதானத்தை புவிக்குக் காரணமாக ஒப்புக் கொள்ளாது போனுல் சாங்கிய ஸ்மிருதிக்கு அநவகாசம் — இடங்கொடுக்காதிருத்தல் என்னுந்தோஷம் — குற்ற முண்டாகும். இதி=என்று சொல்லுமிடத்து ந=அது பொருந்தாது. ஏனெனின்! அந்ய ஸ்மிருதி — வேதாந்த பரமாக மொழியும் ஸ்மிருதி களுக்கும், அநவகாசம்=இடங்கொடாதத்தன்மை வந்து பொருந்தும். அநவகாசம் — மதிப்பு இல்லாத்தன்மை, அவகாசம்—மதிப்பு. இதற்கு எதிர்மறை அநவகாசம். பிரசங்கம்—சம்பந்தம்.

வேதாந்த முறைப்படி பிரஹ்மத்தை யுலகிற்குக் காரணமாக ஏற்றுக் கொண்டால் முற்றறிவு பெற்றிருக்கின்ற பழமையான ரிஷிகள் கபிலர் கணுதர் முதலிய மகான்கள், சுருதி அர்த்தத்தை அறிய முடியாத

அன்பர்களுக்கு ஸ்மிருதியை யெடுத்து விளக்கியிருக்கின்றனர்கள் அதைத் தள்ள இயலாதல்லவா; ஆகையால் ஸ்மிருதியை அநுசரித்துப் பொருள் கொள்ள வேண்டும் என்பது பூர்வபட்சம். அவர்கள் கூறுவதாவது ஸ்மிருதியில் இயல்பாகவே பிரதானம் அவனிக்குக் காரணம் என்றும், மநுஆதி ஸ்மிருதிகளில் யக்ஞயாகாதிகளால் தருமகாரியங்களைச் செய்ய வேண்டும் என்றும், இந்த வருணத்தார், இந்த காலத்தில் இந்த முறைப்படி வினைகளை யியற்றவேண்டுமென்று மொழிந்து, அவகாசம் — மதிப்புக் கொடுத்திருக்கிறார்கள். மேலும் இவ்விதம் பிரசாரம், இந்த முறையில் வேதம் ஓதுதல் இவ்வாறு குருகுலத்தி-லிருந்து திரும்புதல், இன்னென்ன முறையாக பாரியையோடுக் கூடுதல் என்றெல்லாம் ஸ்மிருதிகள் உரைக்கின்றன. அவைகளுக்கு மதிப்பு—மரியாதை தர வேண்டுமல்லவா என்பது பூர்வ பட்சியின் வாதம். அதற்குச் சமாதானம் — நான்ய ஸ்மிருத் யனவகாச தோஷப்பிரசங்காத் இதி—சாங்கிய ஸ்மிருதி அனவகாச தோஷத்தினால் ஈசுவர காரணவாதம் குற்றமென்று சொன்னால், ஈசுவரனைக் காரண-மென்னும் ஸ்மிருதிகளுக்குக் குற்றம் வருந்தானே. அதற்குப் பரி-ஹாரம் யாது? வேதாந்த ஸ்மிருதிகள் வருமாறு—'யத்தத்சூட்சுமம்' என்று பர பிரஹ்மத்தைக் கூறிவிட்டு ''சஹி அந்தராத்மா பூதானாம்'' ''க்ஷேத்ரக்ஞேதிகத்யதே'' இவ்வாறு மொழிந்து, ''அவ்யக்தம் புருஷே பிரஹ்மன் நிர்குணே சம்பிரலீயதே'' என்ற ஸ்மிருதிவாக்கிய-மெல்லாம் ஒரு முகமாக ஓலமிடுகின்றன. மேலும் கீதையில் பகவான் ''அஹம் கிருத்ஸ்நஸ்ய ஜகத: பிரபவ: பிரலயஸ்ததா'' அருஜுனா! அஹம் = நான். ஜகத: = உலகிற்கு, பிரபவ: = உண்டாவதற்கும்: பிரலய ஒடுங்குவதற்கும் காரணம். ததா = உவமை யுருபு. போல என்பது பொருள். ஸ்வார்த்தே வேதம் பிராமாண்யம். எதையும் விரும்பாமல் ரவி பொருளை விளக்குவதுபோல, ஸ்மிருதி பரத: பிரமாணம், கண்-ணொளி போன்று. ஆகையால் வேத விருத்தமான விஷயத்தில் ஸ்மிருதியை ஒப்புக்கொள்ளவில்லை யென்னுந் தோஷம் வரமாட்டாது என்பது திண்ணம்.

### அவதாரிகை

ஸ்மிருதி அனவகாச தோஷம்வராது என்பதற்கு மேலுங் கூறுகின்றார்.

## சூ. இதரேஷாம்ச அநுபலப்தே: 2.

இதரேஷாம்ச=பிரதானத்திற்கு வேருகவும் பிரதானக் காரண-வாதங்களைக் குறிக்கும் வாக்கியங்கள் மநு முதலிய அந்ய ஸ்மிருதி-களிலும்; வேதங்களிலும், ச உலகத்திலும் காணப்படவில்லை. (அநுப-லப்தே: = லோகத்திலும், வேதஸ்மிருதிகளிலும் காணப்படாததால்).

பூதங்களும் இந்திரியங்களும் உலகத்திலும் வேதத்திலும் நினைக்கப்படுகின்றன, காணப்படுகின்றன. பிரதான காரணவாதம் அவ்வாறன்று. சில இடங்களில் ''தத்பரம் இவ'' கேட்கப்படுகிறது. அதுவும் அதத் பரம்வியாக் யாத்=அதத்பரம் என்று கூறப்பட்டிருக்கிறது. எங்கேயோவெனின்? ஆநுமானிக்கம் என்னும் சூத்திர உரையில் காண்க காரிய ஸ்மிருதிகளை பிரமாணமாகக் கொள்ளாததால் காரண ஸ்மிருதிகளும் பிரமாணமல்ல என்பது உறுதி. ஆகையினுல் ஸ்மிருதி அநவகாசம் என்னும் தோஷம் பொருந்துவதற்கு நியாய-மில்லை. சுருதியை நோக்கும்பொழுது ஸ்மிருதி வாக்கியங்கள் பிரமாணம் ஆகா என்பது குறிப்பு. வெய்யிலவன் ஒளியும், மின்மினி ஒளியும் போல. ஆகையினுல் கபிலர் மொழியாகிய ஸ்மிருதிகளை ஒப்புக்-கொள்ளாது போனுல், சுருதிக்கு அநவகாச தோஷம் வருமென்று கூறுவது பொருத்தமல்ல.

**அவதாரிகை**

சாங்கிய மதத்தில் படைப்பைப்பற்றிய முறைகளை பதஞ்சலி மகரிஷி-யோகதர்சனத்தில் கூறியிருக்கின்ருரே அதை ஒப்புக்கொள்ளத் தானே வேண்டும் என்பதற்குப் பதில் சூத்திரம் வருமாறு.

## ஸூ. ஏதேந யோக ப்ரத்யுக்த 3.

ஏதேன=சாங்கிய ஸ்மிருதி வியாக்யானேந. யோக:=யோக-ஸ்மிருதியும் கண்டிக்கப்பட்டிருக்கிறதென்று அறிய வேண்டும். யோக நூல்களிலும் சாங்கிய நூல்களில் கூறியிருப்பதுபோல பிரகிருதியை சுவதந்திரமாக உலகிற்குக் காரணமென்று மொழிந்திருக்கிறது. ஆகையால் யோகத்தையும் விலக்கும்படி நேர்ந்தது. சிலர் யோக நூல்களில் கூறப்பட்ட நியம முதலிய சாதனங்கள் பிரஹ்ம ஞானத்-திற்கு உறுதுணையாக இருக்கின்றன என்று சொல்கின்ருர்கள். யோகங்களும் வேதத்தில் விதித்திருக்கின்றதால் பிரமாணமென்றுங்

கூறுகின்றார்கள், அவர்கள் மேலும் கூறுவதாவது உபநிஷத்துக்களிலும் பல இடங்களில் இயமங்களையும், சில இடங்களில் ஆசனங்களையும், சில இடங்களில் இந்திரிய தாரணங்களையுங் கூறியிருக்கிறது. ஆகையால் யோகங்களும் தத்வஞானத்திற்குச் சாதனமென்பது அவர்களுடைய கருத்து. எனவே அவர்களுடைய எண்ணத்தை விலக்கும் பொருட்டு ''யோக: ப்ரத்யுக்த:'' என்று பகவான் வியாசர் உரைத்தார்.

சாங்கிய ஞானத்தினாலேயோ அல்லது யோகஞானத்தினாலேயோ தத்வ ஞானமுண்டாகிறதில்லை. பின்னை பிரஹ்ம விக்ஞானேன = பிரஹ்ம விக்ஞானத்தினால் ஜீவ பிரஹ்ம ஐக்கியமுண்டாகிறது. வேறு ஞானத்தினால் உண்டாகிறதில்லையென்பது வேதாந்தத்தின் குறிப்பு. யோகங்களில் கூறியிருக்கும் சாதனங்கள் அனைத்தும் சித்த சுத்தியின் பொருட்டும் மனஉறுதியும் பொருட்டேயாம். ''யோகஸ்-சித்தவிருத்தி நிரோத:'' என்பது யோகசூத்திரம். சித்தமானது விருத்தியாகி விஷயங்களை நோக்கிச் செல்லுகின்றது. அதையங்குச் செல்ல வொட்டாமல் தடுப்பது என்பது சூத்திரத்தின் பொருள். பிரஹ்மஞானத்திற்கு அநுகூல சாதனங்கள் வேதாந்தத்திற்குடன்பாடு. யோகஞானம் வேறு, வேதாந்தஞானம் வேறு தத்வஞானம் வேதாந்த வாக்கிய மூலமாக உண்டாகிறது, வேதாந்த வாக்யம் – தத்வமஸ்யாதி மகாவாக்யம். ''நாவேதவின் மநுதே தம் பிருஹந்தம்'' எங்கும் நிறைந்த பிரஹ்மத்தை ஆன்மாவை யுணராத மனிதன் அறிகிறதில்லையென்பது கருத்து. ''தம்து ஔபநிஷதம் புருஷம் பிருச்சாமி'' உபநிஷத்தில் வருணித்திருக்கின்ற ஆன்மாவை குருநாதராகிய தங்களிடம் கேட்கின்றோம் என்பது சுருதிவாக்யம். இந்த வாக்யங்கள் எல்லாம் தத்வஞானத்தைத் தருகின்றன. வேதாந்த வாக்யத்தால் ஞானம் உண்டாகின்றது என்பதையும் யுணர்த்துகின்றன. பகவானும் அதையநு மோதிக்கின்றார். ''அத்யாத்மஞான நித்யத்வம் தத்வஞானார்த்த தர்சனம்'' கீதை. இதுவும் ஆத்மாவை யறிவிக்கின்றது. அத்யாத்ம அறிவே என்றுமுள்ளதென்று அச்சுதன் அறைகிறார். ஆகையால் வேதாந்த விருத்த யோக ஸ்மிருதிகள் நிராகரிக்கப் படுகின்றன.

## 4
## விலட்சணத்வாதிகரணம்:

### அவதாரிகை

முந்திய பிரகரணத்தில் வேத உடன்பாடு உள்ள சாங்கிய யோக ஸ்மிருதிகள் பிரமாணம் மற்றவை யன்றென்று கூறப்பெற்றது. அதற்காக பூர்வபட்சி சாங்கிய ஸ்மிருதியை வேதத்திற்கு அநுகூலமாக்க சூத்திரத்தை யுரைக்கின்றார்.

## ந விலட்சணத்வாத் அஸ்ய ததாத்வஞ்ச சப்தாத் 4.

சேதனரூப பிரஹ்மம் ஜகத்திற்குக் காரணம் அன்று. இதை ந, என்பது அறிவிக்கிறது. ஏனெனின்? அஸ்ய விலட்சணத்வாத்=அஸ்ய சேதனவடிவ ஆத்மாவிற்கு உலகம் விலட்சணம் = வேற்றுத்தன்மை. ஆன்மா சேதனம், உலகம் ஜடம். இவை ஒன்றுக்கொன்று வேறுபாடு உடையவை. ச=மேலும், ததாத்வம்=உலகப் பொருள் அனைத்தும் ஜடவடிவமே. எவ்வாறறிவதெனின்? சப்தாத்=சுருதியைக் கொண்டு என்பது துணிபு.

பிரஹ்மத்தைப் புவிக்கு உபாதான நிமித்த காரணமாக மொழிந்ததை பூர்வபட்சி மறுக்கிறன். பிரஹ்மம் தரணிக்குக் காரணமாகாது. உலகம் ஜடப்பொருள் ஆன்மாவோ சேதனப்பொருள் இருளும் ஒளியும் போல, குலமகளும் விலைமகளும்போல, நெருப்பும் நீரும்போல, விதவையும் சதவையும்போல, பச்சமண்ணும் சுட்ட-மண்ணும்போல, விருத்த தருமமாக இருப்பதால் ஜகத்திற்கு காரணம் ஆன்மா எவ்வாறு ஆகக்கூடும் என்பது ஆட்சேபம். மண்ணும் குடமும் காரண காரியமாக இருந்தாலும் இரண்டும் ஒரு சொரூபமே, அரிய பொன்னும் அணியும் காரணகாரியமாக இருந்தாலும் இரண்டுக்கும் சொரூபம் ஒன்றுகவே யிருக்கிறது. அவ்வாறு உலகமும் பிரஹ்மமும் அன்று. ஜகத்து அசேதனம் இணையற்ற இன்பதுன்பமும் சோக-மோகமும் உடையது. ஜடச் சேதனமிரண்டையும் காரிய காரண-பாவமாக ஒப்புக்கொண்டால் உபகாரிய உபகாரபாவம் வரும். அது பொருந்தாது. உபகாரம் — உதவி செய்தல்; உபகாரியம்—உதவி பெறுதல். இரண்டும் சேதனமாக இருப்பதால் அது எவ்வாறு பொருந்-தும். இருதீபம் ஒன்றுக்கொன்று உபகாரம் கண்டதில்லை. ஆகையால் சுத்தி யசுத்தி ரூப சேதனமும் ஜகத்தும் ஒருபோதும் காரண காரியங்-களாக இருக்க முடியாது. சுருதியும் அவ்வாறு அறிவிக்கிறது. விக்ஞானம்சம் அவிக்ஞானம்சம். விக்ஞானம்=சேதனம். அவிக்ஞானம் ஜடம். எனவே பிரஹ்மம் ஜகத்திற்குக் காரணமாக மாட்டாது என்பது பூர்வபட்சம். சித்தாந்தி—அசேதனங்களையும் சேதனமாக சில இடங்-களில் கூறியிருக்கிறதே எனின்?மண் கூறியது, நீர் கூறியது, அக்னி சொல்லிற்று. மனம் இந்திரியங்களோடு பிரஹ்மாவிடம் சென்று விவாதஞ் செய்தது என்றெல்லாம் மொழிந்திருக்கிறதே யென்பதற்குப் பதில் சூத்திரம்.

## ஸூ. அபிமானி வ்யபதேசஸ்து விசேஷ அனுகதிப்யாம் 5

து = மேலே அசேதனத்தை சேதனமென்று சொன்னது அபிமானி வியபதேச: = அந்த அந்த பொருள்களுடைய அபிமானி தேவதையைக் குறித்து சொன்னதேயல்லாமல் ஜடத்தைக் குறித்து சொன்னதன்று. விசேஷ அனுகதிப்யாம் = இன்ப துன்பங்களை நுகர்கின்ற சீவர்களை சேதனம் என்றும், பூதங்களையும், இந்திரியங்களையும் புலன்களையும், அசேதனமென்றும் அதாவது ஜடமென்றும் பிரித்துக் கூறப்பட்டிருக்கின்றன இதுவே விசேஷம். எல்லாம் சேதனமாக இருந்தால், சேதனம் வேறு அசேதனம் வேறு என்பதற்குப் பொருளற்றுப்போகும். மேலும் கௌஷீதகி உபநிஷத்தில் மகரிஷிகள் பிராண சம்வாதத்தில் காரணம் மாத்திரமான சங்கையை நிவர்த்தி பண்ணும் பொருட்டு, சேதனமல்லாததையும் சேதனமென்று பிராணுதிகளைக் கூறியிருக்கின்றனர். அங்கு அவைகளுக்குரிய தேவதையை சேதனமென்று ஒப்புக்கொள்ள வேண்டும். ஆகையால் தான் "தாவா ஏதா: சர்வாதேவதா பிராணே நிச்ரேயசம் விஜித்வா" என்றும் கூறியிருக்கிறது. அப்பேற்பட்ட இந்த எல்லா தேவதைகளும் பிராணனை சிரேஷ்டமாக அறிந்திருக்கின்றன என்பது கருத்து. அனுகதிப்யாம் = கதி கமனம் (செல்லும் தன்மை) அனுகதி – அனுகமனம் (பின்தொடர்ந்து செல்லும் தன்மை), நெருப்பு வாக்கு வடிவமாகி முகத்தில் பிரவேசித்திக்கிறது என்றும், சூரியன் கண் வடிவமாகி நேத்திரத்தில் நுழைந்திருக்கிறுன் என்றும், வாயு பிராணவடிவமாகி மூக்கில் பிரவேசித்திருக்கிறுன் என்றும் கூறப்பட்டிருக்கிறது. இவையெல்லாம் தேவதையின் அனுகமனம் என்று சுருதிகள் கூறுகின்றன. பிராண சம்வாதத்திலேயும் முக்கியப் பிராணன் அமுக்கியப் பிராணனுமாகிய பிராணன்களும், பொறிகளும் பிராணனுக்கு உயர்வை அளிக்கும் பொருட்டு பிரஜாபதியை அடைந்து விவாதம் செய்தன என்பது கருத்து. ஆகையால் எல்லாம் சேதனமென்று இசைப்பது முறையன்று ஆதலின் ஜகத் பிரம்மத்திற்கு வேறும் ஜடமுமாம். ஆகையால் ஜடவடிவ ஜகத்திற்கு சேதனவடிவ பிரம்மம் காரணம் ஆகாது என்பது இதுவரை பூர்வபட்சம்.

### அவதாரிகை

மேலே இரண்டு சூத்திரங்கள் மூலமாக ஜகத் பிரஹ்மத்திற்கு வேற்றுத் தன்மை உடையதாக இருப்பதால் பிரமம் அதற்குக்

காரணமாகாது என்னும் சங்கையை நீக்கும் பொருட்டு அடுத்த சூத்திரம் வருமாறு:-

## த்³ருஶ்யதே து 6

து = பூர்வபட்சியின் சங்கையை நிவாரணம் பண்ணும் பொருட்டு. த்ருஷ்யதே = (சுருதியில் உபாதான காரணத்திற்கு வேருக காரியரூப பொருள்கள் உண்டாயிருப்பதாக) காணப்படுகிறது.

ஆகையினுல் பிரம்மத்தை சகத்திற்குக் காரணமாக கூறுவதில் யாதொரு ஐயமும் அன்று சேதன காரணத்திலிருந்து அசேதன-காரியம் எங்கே காணப்படுகிறது எனின்? உயிரோடு கூடியிருக்கிற மனிதனிலிருந்து, உயிரில்லாத உரோமங்களும், நகங்களும் உண்டா-கின்றன. அதுபோல உயிர் இல்லாத சாணம் முதலிய பொருள்-களிலிருந்து தேள், புழு, கொசு முதலியன உற்பத்தியாகின்றன. ஆகையினுல் சேதனத்திலிருந்து சேதனமே உற்பத்தியாகவேண்டும். ஜடத்திலிருந்து ஜடமே உற்பத்தியாக வேண்டும் என்ற நியமம் அன்று. அதுபோல சேதனவடிவ பிரம்மத்திலிருந்து உண்டான சகத்தும் சேதனமாக இருக்கவேண்டும் என்பது நியமமல்ல. பிரம்மம் சகத்-திற்குக் காரணம் அல்லது காரணமல்ல என்ற விஷயத்தில் தர்க்க வாதமோ அல்லது யுக்தி வாதமோ பொருந்தாது. ஏனெனின்? பிரம்மம் எப்பிரமாணங்களுக்கும் எட்டாதவஸ்து. பொறிகளைக் கொண்டு அறிய வேண்டுமானுல் அதற்கு உருவம் இருக்கவேண்டும். அனுமானத்தை கொண்டு அறிய வேண்டுமானுல் குறிகள் இருக்கவேண்டும். தர்க்-கத்தைக் கொண்டு அறிய வேண்டுமானுல் தர்க்கத்திற்கு முடிவில்லை. பின்னை எவ்வாறு அறிவதெனின்? சுருதியைக் கொண்டுதான் அறிய வேண்டும். புண்ணிய பாபத்தைப்போல அந்த பிரம்மம் இவ்வாறி-ருக்கிறது என்று யாரால் அறியமுடியும் என்பது வேதவாக்கு. அர்ச்சுனு என்னுடைய மகிமையை சுரர்களோ ரிஷிகளோ அறிய மாட்டார்கள் என்பது பகவத்வாக்கியம். சாக்கிர சொப்பனங்கள் ஒன்று இருக்கின்ற போது ஒன்றில்லை. அவை இரண்டிலும் ஆத்மா இருக்கிறது. சுஷுப்தி-யில் பிரபஞ்சம் இல்லை. ஆனுல் சத்வடிவ ஆத்மா இருக்கிறது. அந்த ஆத்மாவிலிருந்து பிரபஞ்சம் தோற்றியிருப்பதால் அந்தக் காரியரூப பிரபஞ்சமும் காரணரூப பிரம்மத்திற்கு வேறல்ல என்பது சித்தம். பிரமத்திலிருந்து சகத்தை யாரும் வேறு பிரிக்கமுடியாது. ஏனெனின்? சர்வம் பிரம்மமயம் சகத் என்பது சுருதிவாக்கியம். ஆகையால் சேதன வடிவ பிரம்மம் சகத்திற்குக் காரணம் என்பது திண்ணம்.

## அவதாரிகை

இந்த விஷயத்தில் இன்னொரு வினவை வினவி அதற்கு விடை பகர்தல்

# ஸூ. அஸதிதிசேன் ந ப்ரதிஷேத மாத்ரத்வாத் 7.

அசத் இதி = இந்தக் காரியரூபப் பிரபஞ்சம் உற்பத்திக்கு முன்னமே இல்லாதிருந்தது என்னும் தோஷம் உண்டாகும் என்பாயாகில் ந = அந்ததோஷம் வரமாட்டாது. ஏனெனின்? ப்ரதிஷேத மாத்ரத்வாத் = அங்கு கூறப்பட்ட அசத் சப்தம் அபாவத்திற்கு அதாவது இன்மைக்கு வாசகமாகும்.

சேதனமாகவும் தூய்மையாகவும் பொறி புலன்கள் அற்றதாகவும் இருப்பது பிரம்மம். இதற்கு மாருக ஜடமாயும் தூய்மையின்றியதாயும் பொறி புலன்கள் உடையதாயும், காரியமாயும் இருப்பது ஜகத். இந்த முறையான ஜகத்திற்கு பிரம்மத்தைக் காரணம் என்கின்றபோது, நிரவயவ பிரம்மத்தில் அவயவங்களோடு கூடிய ஜகத் இன்மையாகும். இது உங்களுக்கு ஒவ்வாது. ஏனெனின்? நீங்களோ சத்காரியவாதிகள் என்று பூர்வபட்சி சொல்வாயாகில் அது பொருந்தாது. ஏனெனின்? ப்ரதிஷேத மாத்ரத்வாத் = வேதத்தில் காரணத்திலிருந்து காரியத்திற்கு தோற்றம் இல்லையென்பது அர்த்தமல்ல பின்னை அசத்திலிருந்து சத்திற்கு உற்பத்தியில்லை என்பதே அந்த வாக்கியத்தின் கருத்து. ஆனால் நிறை அறிவுடைய பிரம்மத்திலிருந்து காரியரூப உலகம் உண்டாகவில்லை என்பது தாத்பரியமல்ல. இங்கு அசத் சப்தத்திற்கு அர்த்தம் நாமரூப ஜகத் வடிவமாக இல்லாமல் சச்சிதானந்த வடிவ பிரம்மாக இருந்தது என்பது கருத்து. இப்பொழுதும் இந்த காரியரூப ஜகத் காரணவடிவமாக சத்து அது போல முன்னும் பின்னும் என்று தெரியவேண்டும். உலகிற்கு காரியரூபமாக இருப்பு இல்லை. எவன் ஒருவன் எல்லாப் பொருளையும் தனக்குப் புறம்பாகப் பார்க்கிருனே, அப்பொருள் அனைத்தும் அவனை அவமதிக்கின்றன என்பது சுருதியின் பொருள். ஆகையினுல் அசத் என்னும் சொல்லுக்கு காரியம் தோன்றுவதற்கு முன்பதாக நாமரூபமாக வெளிப்படாமல் சத்ரூபமாக இருந்தது என்பது பொருள். ஆகையினுல் பிரமத்திலிருந்து சகத் தோன்றியிருக்கிறது என்பதனுல் அசத்திலிருந்து சகத் உண்டாயிருக்கிறது என்று அர்த்தமல்ல.

**அவதாரிகை**

இந்த விஷயத்தில் பூர்வபட்சி இன்னும் வினவை கிளப்புகின்ருன்.

## ஸூ. அபிதௌ தத்வத் ப்ரஸங்காத் அசமஞ்ஜசம் 8.

அபிதௌ = பிரளய காலத்தில். தத்வத் பிரசங்காத் = முன்னையப் போல பிரம்மத்திற்கு பிரசங்கம் உண்டாகும். அதாவது சகத்தைப் போல பிரம்மமும் அசத்து சடம், துக்காதி தர்மங்களோடு கூடியதாக இருக்கின்றது என்று கொள்ளும்படியாக ஏற்படும். அசமஞ்ஜசம் = அது பொருந்தாது.

(அபிதௌ)—இந்த உலகமானது பருமனையுடையதாகவும், அவயவங்களோடு கூடியதாயும், சடமாயும், பரிச்சின்னமாயும். அசுத்தமாயும், காரியமாயும், இருக்கின்றது. அப்படியிருக்க அதற்கு பிரம்மத்தைக் காரணமாக ஒப்புக்கொண்டால் அது பொருந்தாது. ஏனெனின்?அபிதௌ பிரளயத்தில் காரியரூப உலகமனைத்தும் காரண வடிவாக இருக்கின்றது வேதத்தில் காரிய காரணம் ஒன்றென்று கூறப்பட்டிருக்கின்றது. ஆகையால் காரியத்திற்குரிய அசத், சட' துக்கத்வாதி தர்மங்கள் வந்து பொருந்தும். அப்படி இருக்க சர்வக்ஞம் பிரம்மம் சகத் காரணமென்று சொல்லும் உபநிஷத் வாக்கியம் அசமஞ்ஜசம் அதாவது பொருந்தாது. மேலும் பிரளயத்தில் எல்லாம் ஒன்ருக இருப்பதால், மீண்டும் தோற்றுவதற்கு உரிய காரணங்கள் இல்லாததால் போக்தா, போக்கியம், சடசேதனம், சுகதுக்கம் என்பவைகள் உண்டாகமாட்டா. உண்டாகின்றது என்பதும் பொருந்தாது. மேலும் போக்தா போக்கியம் இவையெல்லாம் பிரம்மத்தோடு கலந்து ஒன்ருகி இருக்க காரணமில்லாமல் மீண்டும் உற்பத்தியாகின்றது என்ருல் முக்தப் புருஷர்களும் மீண்டும் உற்பத்தியாகிருர்கள் என்னும் பிரசங்கம் வரும். அதுவும் பொருந்தாது. ஆகையினுல் இந்த சகத் பிரளயத்திலும் பரமனோடு கலவாமல் வேருகவே இருக்கிறது என்று சொல்லவேண்டும். அதுவும் பொருந்தாது. காரணத்திற்கு வேருகக் காரியம் இருக்க முடியாது என்பதால் வேதாந்த தர்சனம் அசமஞ்ஜசம். இதுவரை பூர்வபட்சியின் ஆட்சேபம். இதற்கு சமாதானமாக சூத்திரம் வருமாறு.

## ஸூ. நது த்ருஷ்டாந்த பாவாத் 9.

மேலே (அதாவது வேத சம்பந்த சித்தாந்தத்தில்) து = ஐய-மின்றி, ந முன்மொழிந்த சூத்திரத்தில் கூறிய தோஷம் இன்று. ஏனெனின்? திருஷ்டாந்தபாவாத் = காரணத்தில் காரியங்கள் அனைத்தும் ஒடுங்கின போதிலும் யாதொரு தோஷமும் அன்று. அதற்குரிய திருஷ்டாந்தங்கள் பல உள்ளன.

எங்களுடைய வேதாந்த தரிசனத்தில் சிறிது குற்றமும் இல்லை. குற்றமில்லாததால் காரணத்தில் காரியம் ஒடுங்குவதால் தோஷ-மென்று கூறியது தவறு. குலாலனின் குடம், சட்டி, கலசம், முதலிய மட்கலங்கள் மண்ணின் காரியமாக இருந்தாலும் வேறு வேருக விவகாரத்திற்கு யோக்கியமாகக் காணப்படினும், மீண்டும் முடிவில் மண் வடிவமாக ஆகின்றன. அப்படியிருப்பினும் அவைகள் தனது காரணமாகிய மண்ணை தனது சொரூபமாகவோ அல்லது அது வேருக படைக்கவோ முடிகிறதில்லை. பூமியில் விகாரமான நான்கு வித பூதங்களும் பூமியில் லீனமானுலும் (லீனம் = ஒடுங்குவது) அந்த பூமியைத் தனக்கு சொரூபமாக ஆக்கவோ அல்லது வேருகவோ ஆக்குவது இல்லை. உன்னுடைய மதத்தில் திருஷ்டாந்தம் நாஸ்தி (ச. பாஷ்யம்) ஒரு ஹேதுக்களும் கிடையாது. எங்களுடைய மதத்தில் (அதாவது வேதாந்தத்தில்) திருஷ்டாந்தங்கள் பல உள. தங்கத்தில் விகாரமான அரிய பெரிய அணிகள் பலவாக இருந்தாலும் அவை தனது காரண-மாகிய சுவர்ணத்தை தனது வடிவமாக செய்வதன்று. காரணத்தில் காரிய ரூபப்பொருள் தனது சொரூபத்தை விடாமல் நிற்குமானுல் பிரளயம் உண்டாகமாட்டாது. வேதாந்த தரிசனத்தில் காரியமும், காரணமும் ஒன்ருக இருப்பினும் காரியம் காரண வடிவமாக இருக்குமே ஒழிய, காரணம் காரிய வடிவமாக இராது. இதைப்பற்றி விரிவாக பின் மொழியப்படும். இவ்வாறு ஸ்திதியிலும் தெரிந்து கொள்ள வேண்டும். ''இதம் சர்வம் யதயம் ஆத்மா'' இந்த எல்லாம் அயம் ஆத்மாவே. அயம் — பிரத்யக்ஷம், ஆத்மைவேதம் சர்வம் - இவை அனைத்தும் ஆத்மாவே.

ஈதனைத்தும் பிரம்மமே என்ற சுருதிகள் அனைத்தும் முக்காலத்-திலும் காரியம் காரணமாகவே இருக்கின்றது என்பதைத் தெளிவு படுத்துகின்றன. காரியங்களும் அதனது தர்மங்களும் அவித்தையினுல் ஆரோபிக்கப் பட்டிருப்பதால் அவைகள் தனது காரணமான மண் முதலியவைகளை முடிவில் வேறு படுத்துவதில்லை என்பது கருத்து.

வேறொரு திருஷ்டாந்தமும் வருமாறு. மாயாவி தன்னால் உண்டு பண்ணிய இந்திரஜாலம் பிறர் பார்வையில் வேருகத் தோற்றினும் அவை முக்காலத்திலும் அவனைப் பிணிப்பதுஇல்லை ஏனெனில் 'அவஸ்துத்வாத் – கல்பிதப் பொருளாக இருப்பதால்.' இந்த மாதிரி பரமாத்மாவும் தனது மாயையால்(ஸ்பர்ஸிக்கவோ), சம்பந்தப்படவோ இல்லை. மேலும் ஸ்வப்னத்தில் தோன்றும் பொருள்கள் ஸ்வப்பன புருஷனைத் தீண்டுவதில்லை. ஏனெனின்? விழிப்பிலும், உறக்கத்திலும் இல்லாததால், இந்த மாதிரி மூன்று அவஸ்தைகளுக்கும் அன்னியமாயும், அவைகளை அறிபவனும் இருக்கும் ஆத்மாவை அவைகள் தொடுவதில்லை. மேலும் கயிற்றில் காணப்படுகின்ற பாம்பு கயிற்றை தூஷிக்க முடியாது என்பதால். அதுபோல இந்த அவித்யா கல்பித பிரபஞ்சமும் சத்திய வடிவ ஆத்மாவைத் தழுவ முடியாது. காரியமும் காரணமும் ஒன்ருகக் கலந்த பிறகு வேருக முடியாது' என்று நீ விளம்பிய தோஷமும் வேதாந்தத்தில் பொருந்தாது. ஏனெனின்? சமாதியிலும் உறக்கத்திலும்(உறக்கம் – சுஷுப்தி). இவை இரண்டிலும் எல்லாம் ஒன்ருக இருப்பினும் சமாதியும், உறக்கமும் கழிந்த பிறகு அவை அனைத்தும் வெவ்வேருகவே ஆகின்றன. பொய்யான போதம் கழிந்த பிறகு (போதம்—அறிவு) காரிய காரணங்களுக்கு விபாகம் (வேற்றுத்தன்மை) காணப்படுகின்றது.

இந்த விஷயத்தில் சுருதி வருமாறு. "இமா: சர்வா: பிரஜா: சதிசம்பத்ய ந விது: சதிசம்பத்யாமஹே இதி" இந்தக் காணப் படுகின்ற பிரஜைகள் அனைத்தும் சத்ரூப பிரஹ்மத்தை அடைந்தும் 'நாம் அடைந்திருக்கின்ருேம்' என்று அறிவதில்லை. இதன் மூலமாகவும் விபாகம் காணப்படுகின்றது. சுழுப்தியில் பிரஹ்மத்தில் ஒன்ருகக் கலந்திருந்தும் 'நான் கலக்கவில்லை' என்பது அக்ஞானத்தால் கூறியவை. சுழுப்தியில் எந்த ஜாதியர்கள் ஒன்ருக இருந்தாலும் விழித்த பிறகு வெவ்வேருகவே காணப்படுகின்ருர்கள். (விபாக உக்தி) இதன் மூலமாக முக்தர்களும் மீண்டும் உத்பத்தி ஆவார்களே என்ற தோஷம் விலக்கப்படுகின்றது. ஆகையால் "சமஞ்ஜசம் இதம் ஔபநிஷதம் தர்சனம்" — (ச.பாஷ்யம்) வேதாந்த தர்சனம் குற்றமற்றது என்பது தெற்றெனத் தெரிகின்றது என்பது கருத்து.

அவதாரிகை

ஆகம மூலமாக அறிகின்ற பொருளை, அதாவது பிரஹ்மத்தை கேவல தர்க்கத்தால் எவ்வாறறிய முடியும்? அறிய முடியாதல்லவா. இதை விளக்கும் பொருட்டு சூத்திரம் வருமாறு.

## ஸூ. ஸ்வபக்ஷ தோஷாச்ச 10

ப.உ. ஸ்வபக்ஷ தோஷாத் = தன்னுடைய மதத்திலும் குற்றம் இருக்கிறது. ச = மேலும்.

வி.உ. சாங்கிய மதவாதிகள் வேதாந்தத்தில் எந்தக்குற்றத்தை கற்பிக்கிறார்களோ அந்தக்குற்றம் அவர்கள் மதத்திற்கும் பொருந்தும். ஆகையால் தோஷப்பரிகாரம் இருவர் மதத்திலும் செய்யவேண்டியது அவஸ்யம்.

சாங்கிய வாதிகள்—வேதாந்தத்தில் பிரஹ்மம் சேதனம் என்றும் ஜகத்து ஜடமென்றும் கூறியிருக்கிறது. இரண்டும் விலக்ஷணமாயிருப்பதால், அதாவது வேற்றுத் தன்மையால் ஜடவடிவ உலகிற்கு சேதன வடிவ பிரஹ்மம் காரணமாகாது என்பது அவர்கள் மதம். அவர்கள் – சாங்கியவாதிகள். சி. – அங்ஙனமாயின், இந்தக் குற்றம் சாங்கிய மதத்திற்கும் பொருந்தும். அவர்களுடைய மதத்தில் பிரதானம் ஜகத்திற்குக்காரணம். ஆனால் பிரகிருதியில் சப்தமுதலிய குணங்கள் இல்லை யென்பது அவர்கள் மதம். ஜகத்தில் சப்த முதலியகுணங்கள் இருப்பதாகச் சொல்லுகிறார்கள். அவர்களைத் திருப்பிகேட்கிறோம் சப்த முதலிய குணங்கள் இன்றிய பிரதானத்திலிருந்து சப்தமுதலிய குணங்களோடு பொருந்திய ஜகத்து எவ்வாறு வந்தது? இங்கும் விலக்ஷணத்வதோஷம் உண்டாகிறது.

வேற்றுத் தன்மையான காரணத்திலிருந்து வேற்றுவடிவமான உலகம் வந்ததற்குக் காரணம் சொல்லியாக வேண்டும், இவைமட்டும் அல்ல. மேலும் பிரதானம் சூக்ஷ்மம், உலகம் தூலம். பிரளயத்தில் காரிய காரணம் இரண்டும் ஒன்றாகி விடுகின்றன. ஆகையால் காரியத்திலிருக்கும் குற்றங்கள் காரணத்திற்கும் பொருந்தும். காரிய காரணத்தை ஒப்புக்கொள்ளாது போனால் சூன்யவாதம் வந்து மிஞ்சும். மேலும் காரியமும் காரணமும் ஒன்றாக சேர்ந்த பிறகு இந்த அவனுடைய கருமம் இது, இவனுடைய கருமம் இது என்று வேறுபிரிக்க

இயலாது. திடீரென உத்பத்தி ஒப்புக்கொண்டால் முக்தப்புருஷனுக்கும் தோற்றமுண்டாகக்கூடும். இத்தனைக்குற்றங்கள் சாங்கிய மதத்தில் வருகின்றன. இதை எவ்வாறு போக்குவது, ஆகையால் ஸ்வபக்ஷ தோஷம். எனக்கு மூக்கு இல்லையானாலும் நன்றாயிருக்கிறது, ஆனால் உனக்கு காதுகேளாதது அசிங்கமாக இருக்கிறது என்பது போலவாம். மலைஅளவு குற்றம் சாங்கியர்களுக்குத் தெரியவில்லை, ஆனால் கடுகளவுக்குற்றம் வேதாந்தத்தில் இருந்தாலும் தெரிகிறது. என்ன விந்தை! ஆகையால் ஸ்வபக்ஷ தோஷமென்று வேதாந்திகள் கூறுகின்றார்கள். அவர்களுடைய பரிகாரமே வேதாந்தத்திற்கும் பரிகாரம் இங்கும் அவர்கள் என்பது சாங்கியர்கள்.

# ஶ்ரீ தர்க்கா ப்ரதிஷ்டானாத் அப்யந்யதா அநுமேயம் இதிசேத் ஏவமபி அவிமோக்ஷ ப்ரசங்க: 11

தர்க்கா அபிரதிஷ்டானாத் = தர்க்கத்திற்கு மரியாதையில்லை. அபி = என்றாலும், அந்யதா அநுமேயம் = வேறு அநுமான மூலமாக பொருளை நிச்சயஞ் செய்யலாமே ஏவமபி = என்றாலும் சித்தாந்தி - அநிர் மோட்சப்பிரசங்க: = மோட்சம்-முக்தியுண்டாக மாட்டாதென்பது உறுதி.

ஒருவன் தன் மதிவலியால் ஒருபொருளை இதுதான் மெய்ப் பொருள் என்று நிச்சயித்திருக்க இன்னொருவன் அவன் மதிவலியால் முன்னவன் மொழிந்த பொருளை வலிந்து தூஷிக்கின்றான். முன்னவன் மொழிந்ததை பின்னவனும், பின்னவன் மொழிந்ததை முன்னவனும் இவர் இருவர் மொழிந்ததை மூன்றாமவனும் குறை கூறுகின்றார்கள் ஆகையால் — தர்க்கஸ்ய பிரதிஷ்டாநாஸ்தி. தர்க்கத்திற்கு வரம்பில்லை யென்பது கருத்து.

அந்நியதா அநுமேயம்—மூன்றையும் விலக்கிவிட்டு நான்காவது அநுமானஞ் செய்யலாமே யெனின் அதுவும் பொருந்தாது. உறுதி-யற்ற ஊகத்தினால் உறுதியான மெய்யுணர்வு உதிக்கமாட்டாது. மெய்யுணர் விலாதவர்கள் வீடது பெறாரே யென்னும் நியாயத்தால் அவிமோட்சப் பிரசங்க: = வீடு அடையமாட்டா தென்னும் குறைவு வந்து பொருந்தும். குறைவு — குற்றம்.

தர்க்கம் மதியைப்பற்றி யிருக்கிறது. ஒருவர்மதி இன்னொரு-வர்க்கிராது. ஒரு தரையில் உள்ளத் தண்ணீர்போல் மற்றொரு தரை-யில் இராது, ஒருஜாதியில் உள்ள ஆசாரம் மற்றொரு ஜாதியில் இராது. ஒருவர் வாக்குபோல் மற்றொருவர் வாக்கிராது. அதுபோல ஒருவர் மதிபோல மற்றொருவர் மதியிருக்க மாட்டாது. ''முண்டே முண்டே மதிர்பின்னா'' என்னும் நியாயம்போல எத்தனை தலையோ அத்தனை மதியென்பது வாக்கியத்தின் பொருள்.

பூர்வபட்சி அப்படியானல், தர்க்கத்தை யொப்புக்கொள்ளாத பட்சத்தில் உலகவியவகாரம் எவ்வாறு நடைபெறும், அன்று பண்டைய முனிவர்களும் — பிரத்யட்சம், அநுமானம் ஆகம முதலிய சாஸ்திர அநுமானங்களைக் கொண்டு அழிவில் பொருளையடைய வேண்டும். தரும சுத்தி செய்ய வேண்டுமென்று மொழிந்திருக்கிருர்களே யென்பாயாகில் அதுபொருந்தாது. ஏனெனின்? முக்தி தர்க்க நிபந்தனம் அன்று, பின்னை ஞான நிபந்தனம். ஞானம் ஆகமத்தால் உண்டாகின்றது. தர்க்கத்தால் அன்று ''நைஷாதர்க்கேண மதிராபனேயா'' க. உ. ஏஷாமதி = இந்த மெய்யுணர்வு, தர்க்கேண = யுக்தியால் ந, ஆபனேயா = அடையப்பட மாட்டாதென்பது சுருதிப்பொருள். ததா ச ஸ்மிருதி: — ''ஞானவான் மாம் பிரபத்யதே'' = மாம் - பிரஹ்ம சொரூபமாகிய என்னை, ஞானவான் = மெய்ஞ்ஞானத்தையுடைய ஞானி, பிரபத்யதே = அடைகிருன் என்பது ஸ்மிருதிப் பொருள். 'தன்னறிவினல் காணுமல் கனத்தக்கருமங்கள் நூறுகஞ் செய்யினும் காணுமோக்காணுதே'' கைவல்யம். பொருள்வெளி. மேற்கூறிய வாக்கியங்களனைத்தும் ஆகம ஜனித ஞானமே முக்திக்குக்காரணம் தர்க்கம் அன்று என்றுத் தெற்றெனத் தெரிவிக்கின்றன. ஆகையால் ஏவமபி அவிமோட்சப் பிரசங்கம் என்று அறைந்தார் பகவான் வியாசர். சிறியவர் இசைத்த இன்மொழியும் கொள்ளத்தக்கது, விரிஞ்சன் மொழிந்த வன்மொழியும் தள்ளத்தக்கது. என்பது போல சுருதியுக்த தர்க்கம் கொள்ளத்தக்கது, சுருதி விருத்த தர்க்கம் வெறுக்கத்தக்கது. ''சுருதி யுக்தஸ்தர்க்கோநு சந்தீயதாம்'' ஆசாரிய அமுத மொழி. பொருள் வெளி. எனவே சேதனம் பிரஹ்மம் ஜகத்திற்குக்காரணமென்பது சித்தம்.

## சிஷ்ட்டாபரிகிரஹாதிகரணம்.[4]

### அவதாரிகை

வைதீக தரிசன சாங்கிய மதக்கண்டனம் செய்தபிறகு அதிகபலமுள்ள தர்க்கத்தையும், அதுமூலமாக எழுந்த ஆட்சேபத்தையும் இதுவரை விலக்கப்பெற்றது. இப்பொழுது அணுவாதி மதத்தைப்பற்றிக் கொண்டு சில மந்த மதியுடையவர்கள் வேதாந்த பட்சத்தைத் தூஷிக்கிருர்கள். அதை விலக்கும் பொருட்டு சூத்திரம் வருமாறு.

**ஸூ ஏதேந சிஷ்ட்டா[3] பரிக்ரஹாபி[2] வியாக்யாதா: 12.**

ஏதேந - பிரதான காரணவாத நிராகரணேன. சிஷ்ட்டா அபரிகிரஹா: = சிஷ்ட்டர்கள் = வியாசர், மனு, வசிஷ்ட்டர் முதலிய மகரிஷிகள். அபரிகிரஹா: (அவர்கள் மூலமாக) கொள்ளப்படாதவர்கள் அணுவாதி, சூன்யவாதி முதலியவர்களும் அபி மற்றுமுள்ளவர்களும் வியாக்யாதா: = நிராகரிக்கப் பட்டிருக்கிறார்கள் என்பது சூத்திரார்த்தம்.

சிஷ்ட்டர்கள் — ஆறுகுணங்களை யுடையவர்கள். வாய்மை, தூய்மை, கல்வி, தவம், மெய்யுணர்வு அன்பு உடையவர்கள், வியாசர், வசிட்டர், விசுவாமித்திரர். மனு முதலியவர்கள் கொள்ளப்படுவார்கள். இவர்களால் புறக்கணிக்கப்பட்டவர்கள் அணுவாதி, பரமாணுவாதி, சூன்யவாதி முதலியவர்கள். தள்ளப்பட்டவர்கள் என்பது ஆசாரியாளின் கருத்து. பரமாணு புவிக்குக் காரணமென்பது பரிகாசம். ஏனெனின் பரமாணு எதுவாகவும் இருக்கட்டும், அது படர்ந்து கிடக்கிறது. அது ஜடம், இதையொன்று திரட்டுவதற்கு ஒரு சேதனம் வேண்டும். பரமாணுக்கள் இயல்பாக ஒன்று சேரமுடியாது. இயல்பாக இயங்குந் தன்மை யின்மையால், காரியதிரவியங்கள் தனக்குக் குறைந்த காரண திரவியத்தில் இருந்து உண்டாகின்றன என்பது கணப்புக்குமதம். அதுவும் பொருந்தாது. ஏனெனின்? 'பிரத்யுட்சப்பிரமாண விரோதாத்' காட்சியளவைக்கு விரோதமாவதால். ஒருபொதி பருத்தியிலிருந்து சிறிய நூல்களும், சிறிய ஆடைகளும் உண்டாவதைப் பார்க்கிறோமல்லவா. பரம கம்பீரமான பிரஹ்மம் ஜகத்திற்குக் காரணம். எல்லா வலிமையும் பொருந்திய சாஸ்திரம் அதை விளக்குகின்றது. "சாஸ்த்ரப்ரமாணகம் பிரஹ்ம" வாலறிவானை நூலறிவால் அறிய வேண்டும் என்பது துணிபு. வால் = நீண்ட, நிறைந்த. அறிவு — ஞானம். தர்க்கம் அநிச்சிதயுக்தி. அதைக்கொண்டு அறிய இயலாதென்பது குறிப்பு. தர்க்கம் நிரங்குசம். அங்குசம் வரம்பு, எல்லை, அளவு என்பன ஒருபொருள் பலசொல். ஆகையால் உணர்வால் அறிகின்ற பொருளை யூகத்தால் அறிய முடியாதென்பது சித்தம்.

## போக்த்ராபத்யதிகரணம்

### அவதாரிகை.

முந்திய பிரகரணத்தில் பிரதான காரணவாதத்தை விலக்கப்பட்டது. இப்பொழுது பிரஹ்ம காரணவாதத்தில் வேறுவிதமான கேள்விகளை எழுப்பி அவைகளுக்கு விடை பகர்கின்றார்.

# ஸூ. போ[4]க்த்ரா பத்தே: அவிபா[4]க[3]ஸ்சேத் ஸ்யாத்[3] லோகவத் 13

போக்த்ராபத்தே: - (பிரஹ்மத்தை சகத்திற்குக் காரணமாகக் கொள்ளும் பட்சத்தில்) பிரஹ்மத்தை போக்தாவென்று சொல்லும்படி-யாகவரும் சேத் = அப்படி வந்தால், அவிபாக: = சீவன் ஈஸ்வரன் இவர் இருவருக்கும் (விபாகம்) - வேற்றுத்தன்மை சித்திக்கமாட்டாது. மேலும் சீவனுகிய சேதனமும் போகமாகிய சடவர்க்கமும் ஒன்ருகிவிடும் என்று பூர்வபட்சி சொல்வாயாகில் அதுபொருந்தாது. ஏனெனின் லோகவத் = உலகத்தைப்போல.

பிரஹ்மத்தை சகத்திற்குக் காரணமாக ஒப்புக்கொள்கின்றபோது சீவனுக்கு ஏற்பட்ட இன்ப துன்பங்கள் அனைத்தும் பிரஹ்மத்திற்கு வந்து பொருந்தும். அது பொருந்திஞல் பிரஹ்மம் போக்தா எனப்-படும். போகம் இன்ப துன்பங்கள். அனுபவிப்பவன் போக்தா எனப்-படுவன். இந்த தோஷம் பிரஹ்மத்திற்குப் பொருந்தும். மேலும் சீவ ஈஸ்வரர்களுக்கு ஒன்றுக்கொன்று பேதம் சித்திக்கமாட்டாது. அது போல போகவர்க்கம் அனைத்தும் சடப்பொருள். அதாவது விஷயங்கள் = போக்தாவோசேதனம். இந்த இரண்டிற்கும் உள்ள பேதமும் காணப்-படமாட்டாது என்னும் தோஷமும் பொருந்தும். இது வரை பூர்வ பட்சம்.

சித்தாந்தபட்சம் வருமாறு:- மேற் கூறிய தோஷங்கள் பிரஹ் மத்திற்குப் பொருந்தமாட்டா. ஏனெனின்? லோகவத் - உலகத்தில் குழந்தை தாய் வயிற்றில் இருக்கின்றபோது, அந்தக் குழந்தைக்கு தந்தை காரணமாக இருந்தாலும், குழந்தை அநுபவிக்கின்ற துன்பம் அந்தக் குழந்தைக்கல்லாமல் தந்தைக்குப் பொருந்துவதன்று. காரிய காரணமான இருவருக்குள்ள பேதமும் காணப்படுகின்றது. மேலும் ஒரு தந்தைக்குப் பிறந்த அனேக குழந்தைகள் அவரவர்கள் துன்பத்தை அவரவர்கள் அனுபவிக்கிருர்களே தவிர ஒருவர் துன்பத்தை ஒருவர் நுகர்வதில்லை. மேலும் ஒரு மண்ணின் காரணத்திலிருந்து அநேக காரியங்கள் நிகழுகின்றன. மண் என்பது இங்கு நிலத்தைக் குறிக் கின்றது. காரியம் குடம், ஆடை கதவு முதலியவை ஆனுலும் ஒன்றுக் கொன்று வேற்றுமை காணப்படுகிறது. மேலும் சலவடிவான சமுத்-

திரத்திலிருந்து அலை, திரை, நுரை, குமிழிகள் முதலியவை உண்டானாலும் உண்மையில் ஒன்றானாலும் விவகாரத்தில் அலைவேறு திரை வேறு என்னும் விபாகம் காணப்படுகின்றது. அதுபோல இங்கும் போக்தா போக்கியம் இவை இரண்டும் வேறு வேறாகக் காணப்படுவதால் என்ன ஆபத்தி (குற்றம்) ஒன்றுமில்லை என்பது கருத்து.

## ஆரம்பணாதிகரணம்

### அவதாரிகை

காரியமும் காரணமும் வேறாகக் காணப்பட்டால் இரண்டும் ஒன்று என்று கூறும் வேதாந்த வாக்கியத்திற்குக் குற்றம் வருமேயெனில் அதற்குச் சமாதானம் — சூத்திரம் வருமாறு —

## ஸூ. தத் அநந்யத்வம் ஆரம்பண சப்தாதிப்ய: 14.

தத் = மேற்கூறிய காரணத்தோடு காரியம் அநந்யத்வம் = ஒன்றாகின்றது. எதனாலோ வெனின்? ஆரம்பண சப்தாதிப்ய: = பொய் என்னும் தன்மையினால்.

போக்திரு, போக்கியம், போகம் என்னும் பேதம் அல்லது விபாகம் வேதாந்தத்தில் வியாவகாரிகமாக ஒப்புக் கொள்ளப்பட்டிருக்கிறது. உண்மையில் இல்லையென்பது குறிப்பு. இங்கு காரியம் ஆகாசாதிகம் உலகமென்பது பொருள். காரணம் பிரஹ்மம் அந்த காரணப்பிரஹ்மத்தோடு காரியரூபப் பிரபஞ்சம் உண்மையில் ஒன்றென்பது உறுதி. ஆரம்பணசப்தத்தினால் என்பது ஹேது, ஆரம்பணம் — சொன்மாத்திரம். மண்ணை நாவால் குடம் என்பது போலவும் பொன்னையணி யென்பது போலவும், இரும்பைக் கத்திக்கேடய மென்பதுபோலவும், பிரஹ்மத்தை நாவால் பிரபஞ்சமென்று அவிவேகிகள் மொழிகின்றனர். மண்ணின் காரியம் மண்ணாக இருப்பதனால்தான் மண்ணைத் தெரிந்ததால் அதன் காரியமுழுதும் அறிந்ததாகின்றது, அதனால் உறுதிமொழியும் (பிரதிக்ஞை) உதாஹரணமும் சிதைவுறாமல் இருக்கின்றன.

மண்ணிருந்தால் குடமிருக்கும் மண்ணில்லையேல் குடமில்லை. அதுபோல பிரஹ்ம மிருந்தால் உலகம் உண்டு அது இல்லையேல் உலகமில்லை யென்பது கருத்து. எது இருந்தால் எது இருக்கிறதோ அதுஅதுவேதான் என்பது ஊகம் — யுக்தி. ஈதனைத்தும் பிரஹ்மமே, இவையனைத்தும் பிரஹ்மம், இவையெல்லாம் ஆன்மா. அந்த ஆன்மா நீயாயிருக்கிறாய், ஆன்மாவில் நாநா என்பது சிறிதுமில்லை, என்ற வாக்கியமெல்லாம் எல்லாம் ஒன்றேயென்னும் தன்மையை யுணர்த்து-கின்றன. போக்த்திரு போக்யமெல்லாம் பிரஹ்மத்திற்கு வேறாக இல்லவேயில்லை. கிளைகள் பலவாக இருந்தாலும் மரம் ஒன்றேதான் சமுத்திரம் ஒன்று அலைகள் பல. சுருதிகளிலும் ஏகத்வ விக்ஞானேன — மோக்ஷ: சேத்இதி என்று கூறப்பட்டுள்ளது.—ஏகத்வ விக்ஞானம் — எல்லாம் ஒன்று என்னும் உணர்வு. மோக்ஷ சேத்இதி இந்த உணர்வினால் உயர்வீடு பெறுகிறான் என்று கருத்து. பல உணர்வினால் கர்ம-காண்டத்தைப் பற்றி இருக்கின்ற லௌகீக வைதீக விவகாரங்கள் கிட்டுவதுபோல் குடங்கள் பலவாகத் தோற்றினும் மண் ஒன்றே சத்தியம். அதுபோல குவலயம் நாநாவாகத் தோற்றினும் அதற்குக் காரணமான பிரஹ்மம் ஒன்றே சத்தியம்.

சங்கை:- மண் முதலிய குடங்கள் அனைத்தும் பரிணமத்தோடு கூடியவை என்பதை உலகில் காண்கின்றோம். அதுபோல பிரஹ்மமும் பரிணமி ஆகிவிடுமே என்று கேட்பது முறையன்று. உலகத்தில் உள்ள ஒவ்வொரு பொருளும் பரிணமியாக இருந்தாலும் அதற்கு மூலப் பொருளாக இருக்கின்ற பிரஹ்மம் அபரிணமியாகவே இருக்கும். பரிணமம்—மாறுபாடு. அபரிணமம் = ஒருபடித்தாக உள்ளது. ஆத்மா மஹான், அஜன், அஜரன், அமரன், அமிர்தன், அபயன் என்ற சுருதி கள் மூலமாக பரிணமம் அற்றது ஆத்மா என்பது தெளிவாகின்றது. மேலும் 'கூடஸ்த்தேதி விசேஷணாத்' (சங்கர பாஷ்யம்) இந்த வாக்-கியத்தின் மூலமாகவும் தெற்றெனத் தெளிகின்றது. வேதாந்தத்தில் பரிணமம் என்பதற்கு 'விவர்த்தம்' என்பது பொருள். பொருள் சிதையாமல் வேறு பொருளாகத் தோற்றுவது. 'தேநேஷிதம் கர்ம விவர்த்ததேஹ' என்பது சுருதி. பரமேஸ்வரனால் சங்கல்பிக்கப்பட்ட கர்மம் விவர்த்த கர்மம் என்று பொருள். விவர்த்தம் விநா வர்த்த மானம் விவர்த்தம். உண்டாகாமலே தோற்றுவது என்பதுபொருள். 'பழுதைப் பாம்பாகத் தோற்றுவது போல்' என்பது எடுத்துக்காட்டு.

இவை அனைத்தும் ஸ்ம்ருதி மூலமாகவும் தெரிந்து கொள்ளலாம். 'அர்ச்சுன' இறைவன் கர்த்திருத்வத்தினல், கர்மங்களை படைப்ப தன்று. கர்ம பலத்தினலேயும் படைப்பது இல்லை. எல்லாம் இயல்பாகவே நிகழ்கின்றன. அவர் அவர்கள் அறியாமையினல் மோகத்தை அடைகின்றனர்கள். ஆகையினல் உண்மையாக விசாரிக்கும் பொழுது இவை எல்லாம் 'தத் அநந்யத்வம்' உண்மையான பிரஹ்மத்திற்கு வேறு அன்று. 'வேறு' என்று சொல்வது 'வெறும் சொல்' மாத்திரமே வாசாரம்பணம் வாக்கினல் சொல்வது. நாமதேயம் நாமம் என்பது கருத்து. சொல் வாக்கில் இருக்கின்றது. ரூபம் கண்ணில் இருக்கின்றது. எல்லாம் பிரஹ்ம சொரூபம் என்பது சித்தம்.

அவதாரிகை

முந்திய சூத்திரத்தில் காரியம் முழுவதும் சொல் மாத்திரம் என்றும், காரணம் உண்மை என்றும் கூறப்பட்டுள்ளது. இந்த வாக்கியத்தினல் சிறிது ஐயம் எழலாம். ஐயம் யாதெனின் 'காரியரூப ஜகத்திற்கு சத்தை (இருப்பு) இல்லை'' என்றும் மயக்கம் உண்டாகலாம். அதை அகற்றுவதற்காக சூத்திரம் வருமாறு—

## ஸூ. பாவே சோபலப்தே: 15

பாவே – காரணத்தில் சக்தி ரூபமாக காரியத்திற்கு சத்தை உண்டாகின்றது. ச = மேலும், உபலப்தே: = காரியத்திற்கு அளவு உண்டாக்குகிறது.

விளக்கம் : பாவே = காரணத்தினுடைய பாவம் (சத்தை, இருப்பு) அது இருக்கின்றபொழுது காரியத்திற்கு, உபலப்தி (அடைவு) காரியம் அடையப்படுகின்றது. காரியத்திற்கு சுதந்திரமாக இருப்பு இல்லாது; போனலும், (சுதந்திரம் தனி) காரணரூப இருப்பு சகல காரியத்திற்கும் உண்டு. ஏனெனில் காரணம் இருந்தால் காரியம் அடையப்படுகிறது. அது இல்லாது போனல் காரியம் அடையப்படுவதில்லை. எதுபோல எனில், மண் இருந்தால் குடம் காணப்படும். அது இல்லாத போது குடம் காணப்படுவதில்லை. நூல் இருக்கின்றபோது, வஸ்திரம் காணப்படும். அது இல்லாதபோது வஸ்திரம் காணப்படுவதில்லை. மண், நூல், காரண திரவியங்கள். குடம், படம் (ஆடை) காரிய திரவியங்கள். (திரவியம் = பொருள்) 'காரண சத்வே காரிய சத்வம் இதி அந்வயம். காரணம் இருந்தால் காரியம் இருக்கும் என்பது முறை.

''காரணபாவே கார்யாபாவக:'' என்பது வ்யதிரேகம். கா ர ண ம் இல்லாது போனால் காரியம் இருக்கமாட்டாது. என்பது நி ய தி. அன்வயம் = சம்பந்தம், வ்யதிரேகம் = சம்பந்தமின்மை. 'காரணம் இருந்தும் காரியம் காணப்படவில்லையே' என்று சிந்திப்பது முறையன்று ஏனெனின் காரியத்திற்காக காரணத்தை தேடுவது மதிநலம், அதாவது முறை. காரணம் இருப்பதால் காரியம் இல்லை என்று நினைப்பது முறையல்ல. இங்கு 'காரியம் காரணாத் அபின்னம்' காரணத்திற்கும் காரியத்திற்கும் அபேதம் என்பது ஆசார்யாளின் அபிமதம்.

பூர்வ பட்சம்: முறையாக 'அன்னியபாவே' அன்யஸ்ய உ ப ல ப் தி த்ருஷ்டா — முறையாக அன்னிய பாவம். குதிரை இருப்பதால் கோ பாவம் – பசு காணப்படவில்லையே. மேலும் குலாலன் (குயவன்) இருக்கின்றபொழுது குடத்தைக் காணவில்லையே. என்பது ஆட்சேபம்) சித்தாந்தம்: குதிரை இருப்பதால் பசு இருக்கவேண்டும் என்பது நியமம் இல்லை. மேலும் குலாலன் இருப்பதால் குடம் இருக்கவேண்டும். என்பதும் நியமம் இல்லை. குதிரை வேறு பசு வேறு. குடத்திற்குக் குயவன் நி மி த் த காரணன், மண் உபாதானக் காரணம். எது இல்லாமல் எது இருக்க முடியாதோ அது அதற்கு உபாதான காரணம் என்பது இலக்கணம். ஆகையால் காரணம் இருப்பதால் காரியம் இருக்க வேண்டும் என்று கூறியதில் குற்றம் ஒன்றும் இல்லை. இந்த காரிய காரண ஒற்றுமை புலப்படுகின்றது. எப்படியெனில் 'நூல் இருக்கின்றபொழுது ஆடையும், அது இல்லாத போது ஆடையின் அபாவமும் காணப்படுகின்றது.' ஆகையால் 'பரம்பிரஹ்ம ஏகம் ஏவ அத்விதீயம்' பரப்பிரஹ்மம் (பரமாத்மா) தன்னந் தனியானது. ஏவ சப்தம் இரண்டு என்னும் தன்மையை நிராகரிக்கின்றது. இந்த விஷயத்தில் சகல பிரமாணங்களுடைய ரகஸ்யத்தைக் கூறுவோம். இந்த சூத்திரத்தின் மூலமாகவும் காரிய-காரணம் இரண்டும் ஒன்று என்பது தெளிவாகின்றது. ''ந காரணாத் காரியம் பின்னம் இதி வேதாந்த டிண்டிம:'' காரணத்திலிருந்து காரியம் வேறு அல்ல என்பது வேதாந்தத்தின் முழக்கம் என்பது சித்தம்.

பூ— காணப்படுகின்ற ஹேதுவினால் கா ர ண காரியங்கள் ஒன்று என்னுந்தன்மை பொருந்தாது. ஏனெனின்? கடமிருக்கிறபோது படமும் இருக்கிறது. ஆகையால் அபேதங் காணப்படவில்லையே என்பாயாகில், அதுசரியன்று. சி. கடம் இருக்கும் இடம் எல்லாம்

படம் காணப்படவில்லை. சாராம்சம் - உபாதானக் காரணத்தைவிட்டு காரியம் வேறு இல்லையென்பது கருத்து. பிரஹ்மம் நிகில பொருள் களுக்கும் அபின்னமாக இருக்கிறது. ஆகையால் பிரஹ்மத்திற்கு வேறு பொருள் இல்லையென்பது வேதாந்த சித்தாந்தம். கருப்பு வர்ணத்தால் குறிப்பிடப்பட்ட நிலமும் வெளுப்பு நிறத்தால் தனக்குக் காரணமான நீரையும், சென்னிறத்தால் தனக்குக் காரணமான நெருப்பையும், தன் காரணமான வாயுவையும் அதன் காரணமான ஆகாசத்தையும், இவ்வாறு மூலகாரணமான பிரஹ்மம்வரைச் சிந்தித்துப்பார்த்தால் காரண காரியங்களுக்கு ஒற்றுமை கிடைக்கும். என்பது வேதாந்த முடிவு.

**அவதாரிகை**

வருகின்ற சூத்திரத்தின் மூலமாகவும் காரணத்திலிருந்து காரியம் வேறல்ல என்பதையும், காரியம் உற்பத்திக்கு முன்னர் காரண-வடிவமாக இருந்தது என்பதையும் விளக்குவதற்கு சூத்திரம் வருமாறு.

## ஸூ சத்வாத் ச அவரஸ்ய. 16

அவரஸ்ய = காரியரூப பிரபஞ்சம். பிற்காலத்தில் பிறந்ததினால் புவி அவரம் என்று சொல்லப்படுகிறது. அவரம் - தாழ்ந்தது என்றும் பொருள் கொள்ளலாம். சத்வாத் = சத்வம் - இருப்பு. ச = மேலும் காரியரூப பிரபஞ்சம் தனது உத்பத்திக்கு முன்னர் காரணரூப ஆத்மா-வாக இருக்கிறதென்பது கருத்து. முன்னும் காரியம் இருந்தது என்றதால் ''நாஸ்தி த்வைதாபத்தி'': இருபொருள் இருந்தது என்னுங்குற்றமில்லை. ஏனெனின்? காரியம் காரண வடிவமாக் இருந்தது என்பது தத்வம். இந்த விஷயத்தில் பிரமாணம் வருமாறு ''சதேவ சோமியேதம்அக்ராசீத்'' சோமிய - பிரிய மைந்தனே. இதம் = காரியரூப ஜகத், அக்ரே = தோன்றுவதற்கு முன்னர், சதேவஆசீத் = சத்தாகவே இருந்தது என்பது சுருதிப்பொருள். ''ஆத்மா வாஇதம் ஏக ஏவ அக்ரஆசீத்'' இதம் = இந்த உலகம், அக்ரே = உண்டாவதற்கு முன்னர், ஏக ஆத்மா ஆசீத் = ஒரு ஆன்மாவே இருந்தது. வா- உறுதி. இந்த சுருதிகள் மூலமாக காரியங்கள் அனைத்தும் காரணரூபமாக இருந்தது என்பது தெளிவாகின்றது. எந்தப் பொருள் ஒடுக்கத்தில் எது வடிவமாக இல்லையோ அந்தப்பொருள் அதிலிருந்து உண்டாவ தில்லை. மணலில் இருந்து எண்ணெயும், எள்ளிலிருந்து தயிருமுண்டா-கிறதில்லை. அதுபோல பிரஹ்மத்திற்கு வேருகப் பிரபஞ்சமிருக்கு-மானல் பிரஹ்மத்திலிருந்துப் பிரபஞ்சம் உண்டாக இயலாது.

ஆகையால் அவனிமுழுதும் தோன்றுவதற்கு முன்னம் எவ்வாறு காரியகாரணம் அனந்யமாக இருந்ததோ அவ்வாறு உண்டான பிறகும் காரணத்தைவிட்டு எவ்வாறு வேருக இருக்கமுடியும்? முடியாதென்பது

கருத்து. ''வர்த்தமானேபிதத்ததா''[2] முன்னிருந்ததுபோல இப்பவு-மிருக்கிறதென்பது குறிப்பு. எவ்வாறு காரணரூப பிரஹ்மம் முக்-காலத்திலும் பிறழ்ச்சியை அடையாமல் இருக்கிறதோ அதுபோல காரியரூப சத்வம் மாறுபடுகிறதில்லை. இதையொரு திருஷ்டாந்த மூலமாகத் தெரிந்து கொள்ளலாம். கடமிருக்கிறது, படமிருக்கிறது என்னும் வாக்கியத்தில் கடபடங்கள் மாறுபட்டாலும், இருக்கிற-தென்னும் இருப்பு - சத்வம். கடம் = குடம். படம் = ஆடை. சத்வ-மென்ருலும் இருப்பு வென்ருலும் ஒன்று. எனவே காரணமும் காரிய-மும் ஒரு பொருள் என்பது தெற்றெனத் தெளிவாகின்றது.

''அம்மையுநீ யப்பனும்நீ அன்புடைய மாமனும் மாமியும்நீ'' தேவாரம். பொருள் வெளி. ''வாஞகி மண்ஞகி வளியாகி யொளி-யாகி ஊஞகி உயிராகி'' என்பது திருவாசகம். வான் = ஆகாசம் வளி = காற்று ஊன் = உடம்பு. மற்றவை தெளிவு. என்ற வாக்கியமெல்லாம் காரணகாரிய மிரண்டும் ஒன்றென்பதை யுணர்த்துகின்றன. இறைவன் அருளிய இதனை அந்த ஊமர்கள் உணராததால் சேற்றையள்ளி சிறுவர் சிரசில் வைப்பதுபோல த்வைதிகள் பேதத்தைப் பேணிப் பெரும் பிணியை யடைகின்ருர்கள். பெரும்பிணி பிறப்பிறப்பு. சத்து சத்ஏவ. அசத் அசத் ஏவ. குடம் படமாகாது, படம் குட-மாகாது. குடமும் படமும் பிரஹ்மம் ஆவதில் ஐயமில்லை ஆகலின் காரண காரிய அனந்யத்வம் சித்தம் என்பது உறுதி.

## ஸூ. அஸத்[3] வ்யபதேஸாத் நேதிச்சேந்[8] ந தர்மாந்தரேண[4] வாக்யஸேஷாத். 17

அஸத், வ்யபதேஸாத், ந, இதிச்சேத், ந, தர்மாந்தரேண, வாக்ய ஸேஷாத் என்று பிரிக்கவும்.

பூர்வபட்சி: காரியரூப ஜகத்து உற்பத்திற்கு முன்பதாக சிலகாலம் அசத்து இருந்ததாகக் கூறியிருக்கிறதே என்று மொழிகின்ருன். அதற்குச் சுருதி வருமாறு.

''அசதே வேதம் அக்ராசீத்'' (சா. உ.) (3-19-1) அக்ரே = (உற்பத்திற்கு) முன்னர். இதம் = காரியரூப உலகம் அசத். ஆசீத் = அசத்தாகவேயிருந்தது. ஏவ = உறுதி. மேலும் ''அசத்வா இதம் அக்ர ஆசீத்'' (தை. உ.) 2-7-1 இதன்பொருள் - இதம் = இவ்வுலகம் அக்ரே = (உலகம் உண்டாவதற்கு) முன்னர். அசத் ஆசீத் = இன்மை-யாக இருந்தது. இன்மை அபாவம். வா = உறுதி. இவ்விரு சுருதிகளை வைத்து பூர்வபட்சி சங்கிக்கின்ருன்-சூ. (படைப்பிற்குமுன்) அசத்வியப தேசாத் = (உலகம் வெளிவருவதற்கு முன்னே) அபாவமாக இருந்தது இதிச்சேத் என்று கூறுவாயாகில். ந = அவ்வாறன்று நீயுரைப்பது போலல்ல. பின்னே? தர்மாந்தரேண = வேறு தர்மத்தினுல் என்பது பொருள். வேறுதர்மம் - நாமரூப வியாகிருத (வெளிப்படுதல்) முதலிய தர்மத்திற்கு-வேறு-மறைந்திருந்த தென்பது பொருள். இது எப்படித் தெரிகிறது எனின்? வாக்யசேஷாத் = மற்றைய வாக்ய மூலமாக என்பது குறிப்பு.

அசத்தென்னும் சொல் முற்றிலும் இன்மையைக் குறிக்குமானுல் ஆசீத்தென்னும் சொல் பொருள்படமால் போகும். ஆகையால் அசத்சப்தம் அகில உலகமும் அரிய பெரிய பிரஹ்மத்தில் அடங்கி-யிருந்ததென்பதை விளக்குகின்றது. அடங்கி, இருத்தல் மறைந்-திருப்பது. இவ்வாறு பொருள் கொள்ளில் ஆசீத்தென்னும் சொல் பயனுடையதாகும். வேதாந்தத்தில் ''சிம்ஹாவலோகன'' மென்னும் நியாயம் விளம்பப்பட்டிருக்கிறது. முந்தியதைத் திரும்பிப்பார்த்தல் என்பது இதன் பொருள். முன்னும் பின்னும் பார்க்கும்பொழுது – ''ததாசீத்'' என்னும் வாக்யமுந் தெரிகிறது. தத் = பிரஹ்மம் (ஞாலத்திற்குமுன்) ஆசீத் இருந்தது என்பது பொருள். ஞாலம் – உலகம்- ''ததாத்மானம் ஸ்வயம்அக்ருத'' என்பது சுருதி. தத் = பிரஹ்மம். ஆத்மானம் = தன்னை ஸ்வயம் = பிறருதவியில்லாமல், அக்ருத = (பலவாக) ஆக்கிக்கொண்டது என்பது சுருதிப்பொருள்.

'ததாசீத்', 'ததாத்மானம்' இவ்வாக்யமெல்லாம் சேஷவாக்ய மென்று பொருள். அசத்து சப்தத்தினுல் ஆரம்பிக்கப்பட்ட எந்தப் பொருளுண்டோ அதைத் தத்சப்தத்தினுல் (பராமிருஸ்ய) விசாரஞ் செய்து ததாசீத் தத்ரூப பிரஹ்மமிருந்ததென்று தத்சுருதி சாற்றுகிறது எனவே அசத் சப்தம் இன்மையைக் குறிக்காமல் மாருக உண்மையைக் குறிக்கின்றதென்பது கருத்து.

குறிப்பு. நாமரூபமாக வெளிப்பட்டப் பொருள் சத்து. வெளிப் படாதது அசத்து. ''நசத்தன்ன சதுச்யதே'' என்று கீதை அ 12, 13 மூலமாகத் தெரியலாம். ஆகையால் நாமரூபமாக வெளிப்படுவதற்கு முன் சத்தைத்தானே அசத்தென்று உபசாரமாக வுரைக்கப்பட்டிருக்கிறது என்பது சித்தாந்தப்பக்ஷம்.

உலகம் உதிப்பதற்குமுன் சூன்யம் இருந்தது. அதிலிருந்து உலகம் வந்தது என்பது பூர்வபக்ஷம். இவ்வுலகம் நாமரூபமாக வருமுன்னர் பிரஹ்மமாகவேயிருந்தது பிரஹ்மத்திலிருந்து உலகம் வந்ததென்பது சித்தாந்தப்பக்ஷம். இது மூலமாக உலகத்திற்குமுன் ஒருவர் உளர், அவர் பரமாத்மா என்பது தெளிவு. சூன்யம் அன்றென்பது கருத்து.

தரையிலிருந்துதான் தாமரையுதயமாகும் தனிவிசும்பிலிருந்து தாமரை யுண்டாகாது. தனி—சிறப்புச் சொல். விசும்பு—ஆகாசம். அதுபோல உண்மையிலிருந்து ஒண்பொருள்கள் உண்டாகும். இன்மையிலிருந்து உண்டாகமாட்டா. ஒண் – ஒள்ளியபொருள் உலகம் உண்மை பிரஹ்மம். இன்மை சூன்யம்—ஒன்றுமில்லாதத் தன்மை. இன்மையிலிருந்து இவ்வையம் வந்ததென்பது த்ரையிலிருந்து தயிர் வந்ததென்பதோடு ஒக்கும். வையம் = உலகம். ஆகையால் காரணமில்லாமல் காரியம் நிகழாது என்பது கருத்து. ''வினாநிதானம் நஹி காரியஜன்ம'' சங்கர திக்விஜயம். நிதானம் வினா = காரணமில்லாமல், காரிய ஜன்ம நஹி = காரியப்பொருள் உண்டாகமாட்டாது. ஆதலின் உதித்து இருந்து ஒடுங்கும் இந்த உலகம் பிரஹ்மத்திலிருந்து உண்டாயிற்றென்பது உறுதி.

**அவதாரிகை**

உரைத்ததை யுறுதி செய்வதற்காக அடுத்த சூத்திரம் வருமாறு—

## சூ. யுக்தே: சப்தாந்தராச்ச. 18

யுக்தே: சப்தாந்தராத் ச, என்று பிரிக்கவும். யுக்தே: = யுக்திகள் மூலமாகவும், சப்தாந்தராச்ச = வேறு வாக்கிய மூலமாகவும், ச = இதுவே உறுதியாகின்றதென்பது சூத்திரப்பொருள்.

எந்தப்பொருள் உண்மையில் இல்லையோ அந்தப் பொருளுக்கு தோற்றம் உண்டாகிறதில்லை. விண்ணில் மலரும், மண்ணில் நக்ஷத்திரமும், முயலில் கொம்பும், மலடிக்கு மைந்தனும் தோன்றுவதை அன்றுமுதல் இன்றுவரை யாருங்கண்டதில்லை.

மேலும் ததி—தயிர், கடம், நகைகள் இவையெல்லாம் தமது காரணத்திலிருந்து அதாவது பால், மண், தங்கம் முதலியக்காரணத்திலிருந்து உண்டாயிருக்கின்றன என்பது யுக்திவாதம். குடம் பாலிலிருந்தும் தயிர் மண்ணிலிருந்தும் உண்டாவதில்லை. இவைகள் அசத்திலிருந்து முண்டாவதில்லை யென்பது கருத்து. இதுமூலமாக அசத்காரியவாதம் தள்ளத்தக்கது.

சப்தாந்தராச்ச—சப்தம்—சுருதி. சுருதியில் கூறுவது சாஸ்திரவாதம். அசத்வாதி தனது மதத்தை நிலைநாட்டும் பொருட்டு எடுத்துக் காட்டிய சுருதிவாக்யம் சப்தம். அதற்குமாறாக சத்வாதத்தின் பொருட்டு எடுத்து வழங்கப்படும் சுருதி சப்தாந்தரம் எனப்படும். ''தத்தைக ஆஹுர் அசதே வேதம் அக்ராசீத்''என்று அசத்பக்ஷத்தைக் காட்டி அதை அகற்றும் பொருட்டு ''சதேவ சோம்ய இதம் அக்ராசீத் ஏகம் ஏவ அத்விதீயம்'' என்பது சுருதி. சா. சு. (6-2-1) சோம்ய! = பிரியகுழந்தாய்? இதம்=இந்த நாமரூப ஜகத். அக்ரே சிருஷ்டிக்கு முன்னே. சதேவ ஆசீத் - சத்ரூப பிரஹ்மமாகவே யிருந்தது. ஏகம் = இரண்டற்றது. ஏவ = உறுதி. எந்த பிரஹ்மத்தில் பெரிய பிரபஞ்சமும் சிறிய பிரபஞ்சமுமில்லையோ அது அத்வயம் எனப்படும். த்வைதத்திற்கு எதிர்மறையென்பது கருத்து. பெரிய பிரபஞ்சம்— சமஷ்டி—பிரஹ்மாண்டமான உலகமனைத்தும். சிறிய பிரபஞ்சம்—வியஷ்டி—பிண்ட முதலிய மூன்றுதேகம் என்பது குறிப்பு. ''தத்தேதம் தர்ஹி அவ்யாகிருதமாசீத்'' பி.உ. (1-4-7) என்னும் பிருஹதாரண்ய சுருதியிலும் கூறியிருக்கிறது. தர்ஹி = அப்பொழுது தோற்றத்திற்கு முன்னர். இதம்=இந்த உலகம். அவ்யாகிருதம் ஆசீத் =(பிரஹ்மத்தில்) அடங்கியிருந்தது என்பது பொருள். விதையில் முளைஅடங்கியிருப்பது போல அவ்யாகிருதம். முளை வெளிப்படுவது போல வியாகிருதம். (சத்காரியத்தை) யொப்புக் கொள்ளாது போனால் காரணம்வேறு காரியம்வேறு ஆகிவிடும். அவ்வாறு ஆனால் பிரஹ்மத்தைத் தெரிந்தால் பிரபஞ்சத்தைத் தெரிந்ததாகின்றது என்னும் வாக்யம் பங்கமாகும். எனவே சத்காரிய வாதம் சித்தமாகிறது.

சத்ரூப பிரஹ்மமில்லாமல் இவ்வுலகந்தானாக வந்ததென்பது எனக்கு அறிவில்லை யென்பதோடொக்கும்.

உலகத்தாருண்டென்பதில்ல என்பான் வையத்து

அலகையா வைக்கப்படும்'' (பொய்யாமொழி)

இது புல்லறிவாளர் பேயோடொப்பர் என்கின்றது. அலகை = பேய். பேயைக் கண்ணால் காண இயலாததால் எல்லாருங்காணுமாறு இவ்வுலகத்தில் நடமாடித் திரிகின்றதோர் பேய் என்பார் வையத்து அலகை என்றார். உலகத்தார் = உலகத்தில் உள்ள நன்மக்கள். ஞானிகள் என்பது கருத்து. உண்டென்பது உள்ளதென்று மேலோர் சொல்லா நின்ற உண்மையை. அஃதாவது விதி விலக்குகளாய உறுதி நலங்கள் என்க. உள்ளன என்று பெரியோர்கள் சொல்லிவந்த உண்மைகளை யில்லையென்பவன் இவ்வுலகத்தில் காணநின்றதோர் பேயாகக் கருதப்படுவான் என்பது கருத்து.

சத்தில்லையென்பது நான் இல்லையென்பது, அசத்திருந்த தென்பது நான் இறந்தேன் என்பது போலவாகும். ஆகையால் இந்த உலகங்கள் அனைத்தும் அரிய பெரிய பிரஹ்மத்திலிருந்து உண்டாயின என்பது சூத்திரத்தின் கருத்து. நல்வினை இன்பந்தரும். தீவினை துன்பந்தரும். பிரஹ்மம் இருக்கிறது, அது நாமாக இருக்கிறது என்று எண்ணுவது நல்வினை. அந்த அறிவால் வருவது இன்பம். அதற்குமாறாக எண்ணுவது அறியாமை. அறியாமையால் வருவது துன்பம் என்பது துணிபு. இதுவே வேதாந்த சித்தாந்தம். இந்த சூத்திரத்தில் யுக்திவாத மூலமாகவும், சாஸ்த்ரவாத மூலமாகவும் சத்ரூப பிரஹ்மமிருந்தது என்பது திண்ணம்.

### அவதாரிகை

முன் மொழிந்ததையே மீண்டும் பட தந்து நியாய மூலமாய் உறுதிசெய்யும் பொருட்டு சூத்திரம் வருமாறு.

## ஹூ படவச்ச. 19

படம்–வஸ்த்ரம். வத் = போல. ச = மேலும். படம், வஸ்த்ரம், ஆடையென்பன ஒரு பொருள் சொற்கள். ஆடை எதுவரை தனது வலிமையால் தனது காரணரூப நூலில் இருக்கிறதோ அதுவரை தனது நிஜவடிவத்தைக்காட்டாமல் நூல் வடிவமாக இருக்கிறது. அதுபோல இந்தக்காரிய ரூப உலகமும் தனது வலிமையால் தனது காரணத்தில் அடங்கியிருக்கிறது. அந்த நிலையில் கடம் என்றோ, படமென்றோ, குளங்குட்டமென்றோ உரைக்கமுடியாது. எப்பொழுது நெசவாளிகள்மூலமாக தனது காரணத்திலிருந்து வெளிப்படுகிறதோ

அப்பொழுது இது வேஷ்டியென்றும், கைகுட்டையென்றும், சேலை-யென்றும், கைத்துணியென்றும், நாமரூபமாக வெளிப்பட்டுத் தனது காரணத்திற்கு அபின்னமாக இருக்கிறது. அபின்னம் ஒற்றுமை. இது போல நாம ரூபமாக வெளிப்படாதக் காலத்திலும் தனது காரணரூப நூலோடு அபின்னமாகவேயிருக்கிறது.

இது படதிருஷ்டாந்தம். இனி தார்ஷ்டாந்தம் வருமாறு:- இந்தவுலகமுழுதும் நாமரூபமாக வெளிப்பட்டு நிலம், நீர், நெருப்பு, வளி, வெளி முதலிய பொருள்களாக இருக்கும் பொழுதும் தனது காரணமான பிரஹ்மத்திற்கு அபின்னமாக இருக்கின்றது. வெளிப்-படாத நிலையிலும் பிரஹ்மத்தோடு அபின்னமாக இருக்கின்றது என்பது கருத்து.

'நஹிகாரணாத்காரியம் பின்னமிதி வேதாந்த டிண்டிம:'' என்பது பகவத்பாதாள் பால்மொழி. காரணாத் = காரணரூப (பிரஹ்ம)த்திலி-ருந்து. காரியம் = ஜகத்ரூபகாரியம். பின்னம் நஹி = வேறு அன்று என்பது பதப்பொருள். மேலும்

> படமுநூலும் போற்செய்த
> பணியும் பொன்னும் போற்பார்க்கில்
> கடமும ண்ணும்போ லொன்ருங்காரிய காரணங்கள்.
> உடன்முதற் சுபாவமீரு வொன்றிலொன்று தித்தவாறே
> அடைவினி லொடுக்கிக்காண்பது அபவாதவுபாயமாமே,

(கைவல்யம்) காரிய காரணங்கள் = காரியமாகிய உலகத்தையும் அதற்கு உபாதான காரணமாகிய பிரஹ்மத்தையும் - பார்க்கில் = (சுருதி யுக்தியநுபவங்களால் விசாரிக்குமிடத்து) படமும் நூலும் போல் காரியமாகிய படமும் அதற்கு உபாதான காரணமாகிய நூலும் போலவும். செய்த பணியும் பொன்னும் போல் = செய்யப்பட்ட (காரிய-மாகிய) நகைகளும் (அதற்கு உபாதான காரணமாகிய (பொன்னும்) தங்கம் போலவும். கடமும் மண்ணும் போலவும் = காரியமாகிய கடமும், அதற்கு உபாதான காரணமாகிய மண்ணும் போலவும். ஒன்ரும் = அபின்னமாம். உடல் முதல் சுபாவம் ஈரு = தூலதேக முதல் அவித்தை யீருக. ஒன்றில் ஒன்று உதித்தவாறே = ஒன்றினின்றும் ஒன்று உண்-டானபடியே அடைவினில் ஒடுக்கிக் காண்பது = முறையே ஒடுக்கிப்

பார்ப்பது அபவாத உபாயமாமே, அபவாதம் என்னும் உபாயம் ஆம் என்றவாறு. இதுமூலமாகவும் வியக்த அவ்யக்த நிலேயிரண்டிலும் காரியம் காரணத்திற்கு அபின்னமாகவே யிருக்கிறதென்பது தெளிவு. அவ்யக்தம் வெளிப்படாதது. வியக்தம் வெளிப்படுதல்.

### அவதாரிகை

இந்த விஷயத்தை யின்னும் இனிய பிராணாதி என்னும் எடுத்துக்காட்டு மூலமாக விளக்கப்படுகிறது.

## ஸூ. யதா[2]ச்சப்ராணாதி[3] 20

ச - ததா. யதா=எப்படி பிராணாதி = பிராணன், இந்திரியம் இவைகள் உடலிலிருந்து வெளியே சென்றபிறகு தெரிவதில்லே. ஆனாலும் அவைகளின் இருப்பு இருக்கின்றதென்பது உறுதி. அது-போல அவ்யக்த நிலேயிலும் ஜகத்திற்கு நிலேயுண்டு. உலகில் பிராணனே யபான முதலிய நான்கு பிரிவாக ஆகின்றது. (விருத்தி-விசேஷத்தால்) என்பது சங்கரபாஷ்யம். ''பஞ்ச விருத்திர்மநோவத்'' என்னும் சூத்திர மூலமாகவும் இதை கண்டு கொள்ளலாம். யோகத்தில் வருகின்ற பிராணாயாமத்தைப் பழகி வருங்கால் இவ்வைந்து விருத்தி களும் ஒடுங்கி யொருவிருத்தியாகி விடுகின்றன. அப்பொழுது பிராணன் மட்டும் இயங்கிக் கொண்டிருக்கின்றது. அந்நிலேயில் ஜீவன மாத்திரம் நிகழ்ந்து கொண்டிருக்கிறது. மற்றய விரிவு, ஒடுங்குதல் முதலிய காரியங்கள் நிகழ்வதில்லே. பிராணாயாமம் நின்றபோது மீண்டும் அக்காரியங்கள் நடை முறையாக நடக்கின்றன. எல்லாத் தொழிலும் இயல்பாக இயங்குகின்றன. நீட்டல், மடக்கல், ஒடுக்கல் என்பது கருத்து. வேற்றுமை விசிஷ்ட பிராணனுக்கு வேருக அபானாதிகள் அன்று.(வாயு=காற்றின் சுபாவம் அபான முதலியவை களிலும் (சமமாக) பொதுவாக இருக்கின்றது. அதுபோல காரியம் காரணத்திற்கு அன்னியமன்று. இவ்வாறு காரியரூப ஜகத்துகாரணரூப பிரஹ்மத்திற்கு அன்னியமன்று. எல்லா உலகமும் இறைவன் சொரூப மாகையால் எதையறிந்தால் எல்லாமறிந்ததாகுமோ வென்ற உறுதி மொழிக்கு எவ்வித பங்கமும் வராது என்பது உறுதி.

## இதரவ்யபதேச அதிகரணம்

## ஸூ. இதர வ்யபதேஸாத் ஹிதாகரணாதி தோஷப்ர சக்தி:21

இதரவ்யபதேசாத், ஹித, அகரண, ஆதி, தோஷ, ப்ரசக்தி: என்று பிரிக்கவும்.

இ.ள். (இதரவியபதேசாத்) இதர: ஜீவன். ஜீவனை பிரஹ்மரூபமாக வியபதேசம் = உபதேசஞ் செய்யப் பட்டிருக்கிறது. ஜீவன் பிரஹ்ம ரூபமாக இருந்தால், ஹித அகரணாத் = தனக்கு ஹிதம் செய்யாத. தோஷம் = குற்றம். பிரசக்தி: - உண்டாகும். சேதன காரணவாதத்தை வேறுவிதமாக மறுப்பது சேதனம்- பிரஹ்மம். காரணம் — (உலகிற்கு) காரணம் என்னும் வாதத்தை மறுப்பது — இல்லை என்று சொல்லுவது. இந்த சேதன காரண வாதத்தை யொப்புக் கொண்டால் வேதாந்தத்தில் குற்றம் வருமென்பது பூர்வபக்ஷியின் வாதம். உயரிய வேதாந்தத்திற்கு ஊறு ஒன்றும் வராதென்பதை யிந்த உணர்வில உணரான். ஊறு — குற்றம். இதர உபதேசமாவது "தத்வமசி" இந்தவாக்யத்தால் ஜீவன் பிரஹ்மமென்பதுத் தெளிவு. மேலும். "அநேன ஜீவேன..." இந்த வாக்யமும் ஜீவனை பிரஹ்ம மென்றே கூறுகிறது. இதுமூலமாக பிரஹ்மத்தைப் போல ஜீவனும் சிருஷ்டாவாகிறான். இவனே சிருஷ்டாவென்றால் தனக்கு வருகிற அஹிதம் கிழப்பருவம், பிணி, மூப்பு, சாக்காடு முதலிய துன்பங்கள் இவைகளை வராமல் ஏன் தடுக்கக் கூடாது. இந்ததோஷம் பிரஹ்மத்திற்கும் வருந்தானே? மேற்கூறிய தோஷங்கள் வராவண்ணம் காக்கவேண்டு மானால் சேதனரூப பிரஹ்மத்தை ஜகத்திற்குக் காரணமாகக் கொள்ளக் கூடாதென்பது சங்கை. இதைநிவிர்த்திக்கும் பொருட்டு அடுத்தசூத்திரம் வருமாறு: -

## ஸூ. அதிகந்து பேத் நிர்தேஸாத் 22

இ. ள். து—சப்தம் மேற்கூறிய சங்கையை விலக்குகின்றது. அதிகம் = ஜீவனிலிருந்து பிரஹ்மத்தை வியவகாரத்தில் அதிகமாக வேறுபடுத்திக் கூறியிருக்கிறது. சர்வக்ஞம், சர்வசக்தி முதலிய வாக்யங்களால் பிரஹ்மத்திற்கு மேற்கூறிய தோஷம் வரமாட்டாது.

கடலில் விழுந்த நதி கடலாகுமேயன்றிக் கடலைக் கலங்கச் செய்யாது. ''கலக்கினும் தண் கடல் சேருகாது'' என்பது ஆன்றோர் வாக்கு. பொருள் வெளி. பிரஹ்மத்திற்கு ஹிதம் அஹிதம் இரண்டும் அன்று. ''ஞானிக்கில்லை யின்பமும் துன்பமும்'' என்பது முதுமொழி. பொருள் வெளி. பிரஹ்மம் நித்ய முக்த சுபாவம். 'நிர்தோஷம் ஹிசமம் பிரஹ்ம' கீதை. பொருள் — சமம் பிரஹ்ம = பரமாத்மா நிர்தோஷம் = தோஷமற்றது. ஹி = உறுதி. பிரஹ்ம ஞானத்திற்குத் தடையில்லை. எப்பொழுது ஜீவன் பிரஹ்மரூபமாகி விடுகின்றானோ அவனிடத்தில் இருக்கும் தோஷமும் ஆன்மாவாகி விடுகின்றது. ''சர்வம் சம்வின் மயம் ஸ்திதம், வாசிஷ்டம். சர்வம் = நாமரூப ஜகத்து. சம்வின்மயம் = ஞானவடிவம். ஸ்திதம் = அவ்வாறு இருப்பதென்பது கருத்து. சாரீர ஆத்மா பிராக்ஞேன அன்வாரூட:' பி. உ. சாரீர ஆத்மா = ஜீவாத்மா பிராக்ஞேந = பரமாத்மாவோடு அன்வாரூட: = ஒன்று பட்டிருக்கிற-தென்பது பொருள். பேதமாகவும் அபேதமாகவும் வேதாந்தத்தில் எவ்வாறு பொருந்துமெனின்? பொருந்தும், ஆகாசம் ஒன்றாக இருந்-தாலும் கட மட உபாதிகளை நோக்கி கடாகாசம் மடாகாசமென்னும் பேதங்காணுமாறு போல் இங்கும் அறிந்து கொள்க.

மித்யா ஞானத்தினால் உண்டான பேதங்களனைத்தும் (சம்யக்) உண்மை ஞானத்தினால் அகற்றப்படுகின்றன. அப்படியானால் சிருஷ்டி ஹிதாகரண அஹிதாகரண தோஷங்கள் எவ்வாறு பொருந்துமெனின்? ஆன்மாவை யுணராதத் தன்மையாலும் அவித்யாகிருத தோஷத்தாலும் விவேகிகளிடத்திலும் வேதாந்தத்திலும் விசுவாசம் இன்மையால் பொருந்தும். தீபமின்மையால் இருள் வருவதுபோல் தெளிந்த ஞான மின்மையால் எல்லாத் தீமைகளும் வரும். தெள்ளிய ஞானத்தால் எள்ளி நகைக்கும் இருள் அனைத்தும் அதன் காரியமான சம்சாரமும் விரைந்தோடும். ஆத்மாவைத் தேடவேண்டும், அதை அறியவேண்டும் அடைய வேண்டுமென்பன வெல்லாம் பேத வியவகாரம், ஆத்மா நீயாயிருக்கிறாய், உனக்கு அன்னியமில்லை, பிறப்பு இறப்பு ஆன்மா-விற்கு இல்லை யென்பனவெல்லாம் வேதாந்த வியவகாரம் என்பதுத் தெளிவு. மேற்கூறிய பேதவியவகாரமும் ஹிதாகரணாதி தோஷங்களும் ''அதிகந்து'' என்னும் சூத்திரத்தினால் விலக்கப்படுகின்றன என்பது கருத்து.

## அவதாரிகை

ஒருவிதமான பிரஹ்மத்தில் பலவிதமான காரிய சமூகங்கள் காணப்படுகின்றனவே அது எவ்வாறு பொருந்தும் என்னும் கேள்விக்கு விடையாக அடுத்த சூத்திரம் வருமாறு:—

# ஸூ. அஸ்மாதி வச்சதத் அநுபபத்தி: 23

அஸ்ம, ஆதி, வத், ச. தத், அநுபபத்தி: என்று பிரிக்கவும்.

இ. ள். அஸ்மம் = கல் ஆதி - முதலிய ச = மேலும் தத் = மேற் கூறிய தோஷம் அநுபபத்தி; = பற்ற மாட்டாது.

பூமியில் அதன் (காரிய) விகாரமாகிய கற்கள் உண்டாகின்றன. நிலம் ஒரு விதமாக இருந்தாலும் கற்கள் பலவிதமாக இருக்கின்றன- காந்தக்கல், கருங்கல், கண்ணுடிக்கல், நவரத்தினக் கற்கள் என்பன. இந்த மாதிரி விசித்திரமான செயல்கள் காணப்படுகின்றன. மேலும் நிலத்தைப் பற்றியிருக்கும் விதை வேறு வேறு விதமான இலை, குலை, செடி, கொடி, தளிர், பூ, காய் கனி முதலிய பல வண்ணமாகவும், பலவிதமணம், நானு பிரகாரமான ரச வடிவமாகவும் காணப்படு-கின்றன. சந்தனமரம், சம்பகம், மல்லிகை ரோஜா முதலியனவாகவும் தெரியப்படுகின்றன. மேலும் ஒருவித அந்த ரசத்திலிருந்து பலவித மான ரக்தம், உவர்நீர், உப்புநீர், எலும்பு, தோல் நரம்பு முதலியவை உண்டாகின்றன. உரோமத்தையெடுத்துக் கொண்டால் கருத்தது வெளுத்தது, பழுத்தது, அடர்ந்தது. இன்னும் பலப்பல விசித்திரங் களாகத் தோன்றுகின்றன. அதுபோல ஒன்ருகிய பிரஹ்மத்திலிருந்து நானுவான ஜீவர்கள், ஜடப்பொருள்கள், அனேக விசித்திர காரியங் கள் உண்டாவதால் ஒரு தோஷமும் அன்று. "ததநுப பத்தி:" பூர்வபக்ஷி கூறியக் குற்றங்கள் ஒன்றும் பிரஹ்மத்தில் பொருந்த-மாட்டா. தரையில் நின்று தன்கையால் மண்ணையள்ளி மேலே யெறிந்தால் அது தன் தலையில் விழுவது போல் தனது சொரூபமாக இருக்கும் குற்றமற்ற பிரஹ்மத்தில் குற்றத்தைக் கூறுவார்களானுல் அக்குற்றம் அவர்களையே சாரும். விகாரரூபமான காரியங்களனைத்தும் வாசாரம்பணம் என்று சுருதிகள் கூறுகின்றன. வாசாரம்பணம் சொல்மாத்திரம். கனவில் ஒருவனுக்கு கனகாபிஷேகஞ் செய்தாலும், கழநீரை மேலே யூற்றினுலும், சந்தனத்தைப் பூசினுலும், சாணத்தை அவன்மேல் எறிந்தாலும் அவனுக்குக் குற்றமொன்றுமில்லை. அது போல் பிரஹ்மத்திற்கு எவ்விதக்குற்றமும் வரமாட்டாதென்பது கருத்து.

### அவதாரிகை

பேரறிவுபடைத்த பிரஹ்மத்தில் விகாரமான உலகங்கள் அனைத்துந் தோன்றினுலும் குற்றமில்லையென்று மேலே மொழிந்-

திருக்கிறது. இங்கு சர்வ வல்லமையுடைய பிரஹ்மம் யாதொரு உதவியும் இல்லாமலே உலகத்தை யுண்டு பண்ணுகிறதென்பதற்கு சூத்திரம் வருமாறு—

## சூ. உபஸம்ஹார தர்சனாந் நேதி சேந்ந க்ஷீரவத்தி 24

உபசம்ஹார, தர்சனுத், ந, இதி, சேத், ந, க்ஷீரவத், ஹி என்று பிரிக்கவும்.

சேதனம் பிரஹ்மம், ஒன்று, அத்விதீயம் = இரண்டற்றது, ஜகத்திற்குக் காரணம் என்று ஆங்காங்கு அறையப்பட்டிருக்கிறது. இது பொருந்தாது ஏனெனின்?, ''உபசம்ஹாரதர் சனுத்'' உபசம் ஹாரம் — உதவிகளைக் கொண்டு காரியத்தை முடிப்பது. உலகில் குயவனைக்கொண்டு குடத்தையும், நெசவாளனைக் கொண்டுத் துணியையும், பொற்கொல்லனைக்கொண்டு நகையையுஞ் செய்வதை, தர்சனுத் = பார்க்கிறோம். ஆகையால் இவர்களுக்குத் துணைக் காரணமாக தண்டம், சக்ரம், வேமா, (துணி நெய்யும் கருவி) நூல், முதலிய சாதனக் கூட்டங்கள் காணப்படுகின்றன. பிரஹ்மமோ ஒரு உதவியும் அற்றது எனவே ஜகத்திற்குக் காரணமன்று. இதிசேந்ந = அவ்வாறு பூர்வபக்ஷி கூறுவாயாகில் அது சரியன்று, க்ஷீரவத் ஹி பாலைப் போல பிரஹ்மம் உலகிற்குக் காரணமாவதில் சிறிதளவேனும் ஐயமில்லை.

பால் எவ்வாறு தானுகவே தயிராகிறதோ, தண்ணீர் இயல்பாகவே பனிக்கட்டியாகிறதோ அதுபோல பிரஹ்மம் ஒரு உதவியுமின்றி உலகிற்குக் காரணமாவதில் என்ன தோஷம்? சங்கை-பாலும் தயிராவதற்குப் பலசாதனங்களை விரும்புகின்றதே, உஷ்ணம், ஆதஞ்ஜனம் (உறை) இளஞ்சூடு. சிறிது கால முதலியவை. அவ்வாறிருக்க இயல்பாகவே பால் தயிராகிறதென்பது எவ்வாறு பொருந்தும்? சித்தாந்தி—உன்மதிப்படி விசாரித்துப் பார்த்தால் சாதன பலத்தினுல் பால் தயிராகுமானுல் வாயு, ஆகாச முதலிய பொருள்களும் சாதனத்தினுல் தயிராகவேண்டும். அவ்வாறுகாணேம். சாதனங்களிருந்தாலும் பாலிலிருந்துதான் தயிருண்டாகிறது. ஆகையால் பாலில் தயிராகும் தன்மை இயல்பாக அமைந்திருக்கிறதென்பது தெளிவு. பிரஹ்மமோ சர்வக்ஞம், சர்வசக்தி சமன்விதம், பேரறிவு படைத்த பெரும் பொருள். அது ஒரு உதவியுமின்றி உலகை ஆக்குவதில் என்ன ஐயம்? ஒன்று மில்லையென்பது உறுதி.

யாதொரு உதவியுமின்றி இறைவன் எல்லாம் செய்ய வல்லான் என்பதை யுணர்த்த ஒரு இதிகாசம் — பண்பு நிறைந்த பாண்டவர்க்கும், வம்பு நிறைந்த துரியோதனாதியர்க்கும் பகைமை மூண்டது. அரவக்-கொடியையுடையவன் அநீதியனைத்தையும் அறமகன் அமைதியாகப் பொறுத்து வாழ்ந்தான். ஒருமுறை அகத்திற்கு அப்புறம் அகன்றிருந்த துரௌபதியை அவைக்கு அழைத்து வந்து அவமானப்படுத்தினார்கள். அரியை நினைந்து அம்மையலறினாள். ஆதிமூலம்! ஜகத்காரணா! அலைமகள்நாயகரே! தரைமகள் மணவாளா! வரைமகள் தமையரே! மணிவண்ணா! கமலக்கண்ணா! இக்கொடிய அரக்கர் நடுவில் அவல-நிலையில் கவலையுறுகின்ற (அபலையை) பலஹீன பாவையைக் காப்-பீராக வென்றுக் கூவி அழைத்தாள். கண்ணன் கடிது வந்தான், மலங்கிய மங்கையைக் கண்டான். வந்தக் கண்ணனை வரமாது (வரம் - மேலான) வணங்கினாள். மணிவண்ணன் நிஜசங்கற்பத்தினால் பிறவுதவியின்றி வண்ண வண்ணமானப் புடவைகளை வரையளவு குவித்தான் என்பது பாரதம். வரை — மலை. ஆதியும் நடுவும் அந்தமும் இன்றி அநாதியாய் அருமறைகளுக்கும் ஓதவும் எட்டாது உயர்ந்து என்றும் நின்றான் என்று இதிகாசம் இசைக்கின்றது.

இது மூலமாகவும் சர்வக்ஞகல்பம் பிரஹ்மம் பிறவுதவியின்றி ஆக்கி அளித்து அழிக்கும் வல்லமையுடையதென்பது தெற்றெனத் தெளிவாகின்றது.

அவதாரிகை

ஒருசகாயமின்றி யெல்லாம் வல்ல (இறைவன்) பிரஹ்மம் அவனியை ஆக்க முடியும் என்பதற்கு சூத்திரம் வருமாறு. அவனி-பூமி.

## சூ. தேவாதிவதபி லோகே 25

தேவாதிவத், அபி, லோகே யென்று பிரிக்கவும். இ.ள். தேவ ஆதிவத் = தேவர்களைப் போன்று. லோகே = உலகத்திலும் வேதத்-திலும். அபி = மற்றுமுள்ள சாஸ்திரங்களிலும். லோகே — மந்த்ர, அர்த்தவாத, இதிகாச புராணாதிகளில் தேவாதிவத்து — சேதனவடிவ இந்திரன், சந்திரன், குபேரன், வருணன் முதலிய தேவர்கள் தம்-முடைய சங்கற்பத்தினால் விசித்திரமான காரியங்களைச் செய்து முடிக்-கிறார்கள். துரௌபதிக்கு ஆடை அளிப்பதற்கு நூல் இல்லாமலும்,

ஆலேயில்லாமலும், நெசவாளர் இல்லாமலும் தனது கற்பனையினுல் உலகம் வியப்படையும்படி பல வண்ணப் புடவைகளேப் புனேந்து கொடுத்தாரென்று உலகமும் உயர்ந்தோருங் கூறுகின்றனர்.

'விதீயதே யத்ர யதுநந்தனேன நாபேக்ஷதே தத்ரசஹாயசக்தி. பாஞ்சாலபாலா அஞ்சலதீர்க்கதாயா நதத்ரதந்துர் நசதந்துவாய:' இ·ள், யத்ர=எப்பொழுது. யதுநந்தனேந = கிருஷ்ணபரமாத்மா. தத்ர = துரௌபதிக்கு விபத்து வருகின்ற காலத்தில். பாஞ்சாலபாலா அஞ்சல=துருபதன் என்னும் குருநில மன்னன் மகள் பாண்டவர்களுடைய புனித பாவைக்கு, அஞ்சல்-புடவைகள் அளிக்கும் பொருட்டு. நாபேக்ஷதே சஹாயசக்தி:=எவ்வித உதவியையும் விரும்பாமல். (அவ்வமயம்) நூலும் இல்லே, நெசவாளனுமில்லே. அப்பொழுது தனது அளவில் அழிவில் மஹிமையால் விதீயதே பகவான் பலவித ஆடையை உண்டுபண்ணினுர் என்பது பொருள், தானே வஸ்த்ராவதாரமானுரென்பது குறிப்பு, அபி=அவ்வாறிருக்கநிராகார, நிர் விகார, நித்யபுத்தமுக்த, பூர்ணம் பிரஹ்மம் யாதொரு உதவியும் இன்றி உலகத்தை இயற்றமுடியாது? முடியுமென்பது பொருள். தேவாதிவத்—வத்பதத்தினுல் பிதுரர். இருடிகள், மஹான்கள் முதலியோர்களேக் கொள்ளவேண்டும். இந்த விஷயத்தில் மந்த்ர, அர்த்த வாத, புராண, இதிஹாசமுதலிய நூல்கள் பிரமாணமாகும்: விசுவாமித்ரர் திரிசங்குக்கு தனி உலகம் ஒன்றையுண்டு பண்ணினுரென்றும், யோகிகள் தமதுமஹிமையால் பல உடல்களே யெடுக்கிருர்கள் என்றும், மதக்கரியை அடக்கலாம், கச்செவியை ஆட்டலாம், கச்செவி=பாம்பு. தண்ணீரில் நடக்கலாம்,தணலில் இருக்கலாம் என்று கூறியிருக்கிறது.பிரஹ்மத்தைப்பற்றிபேசவா வேண்டும். தண்ட பூபிகா நியாயம் போல. தண்டம்=தடி. பூபிகா=அப்பம். ஒருதடியில் அப்பம் கோற்கப் பட்டிருக்க, இருபறவைகள் தண்டத்தை யெடுத்துச்சென்ற போது அப்பத்தையும் எடுத்து சென்றுவிட்டது என்று கூறவேண்டுவதில்லாதது போல, அல்பசக்தியுடையதேவர், யோகிகள் பிறர் உதவியில்லாமல் படைக்கும்போது எல்லாவல்லமையும் உடைய பிரஹ்மத்தைப்பற்றிக் கேட்க வேண்டுவதென்னே யென்பது கருத்து. ஆகையால் உலகில் சிலர் பிற உதவியை நாடி யொன்றை செய்வதால் உன்னதமான பிரஹ்மம் உதவியை விரும்ப வேண்டுமென்று கூறுவது அறியாமை.

### கிருத்ஸ்ன ப்ரசக்தி அதிகரணம்[4]

## ஸூ. கிருத்ஸ்ன பிரசக்திர் நிரவயவத்வசப்த கோபோவா. 26[3]

கிருத்ஸன, பிரசக்தி:, நிரவயவத்வ, சப்த, கோபோவா என்று பிரிக்கவும். இ.ள். கிருத்ஸ்ன பிரச்க்தி:= சம்பூர்ண பிரஹ்மம் காரிய ரூபமாக பரிணமத்தையடைகிறதா, அல்லது பிரஹ்மத்தின் ஏகதேசம் பரிணமத்தையடைகிறதா என்பது கேள்வி. இருவிதத்திலும் பிரஹ்மத்திற்குப் பொருந்தாது என்பது சங்கை. நிறைந்த பிரஹ்மம் பரிணமத்தை யடையுமானல் பிரஹ்மத்தை நிரவயவம் என்னும் சுருதிக்குக் கோபம்வரும். பிரஹ்மத்தின் ஏகதேச அவ்யவம் ஜகத்ரூபமாக பரிணமத்தை யடைகின்றதெனின். அதுவும் பொருந்தாது. பிரஹ்மம் நிரவயவம். அவயவம் இன்மை. ஆகையால் சாவயவம் நிரவயவம் என்னுங்குற்றம் வந்து பொருந்தும். ''உபயதாபாசாரஜ்ஜு:'' என்பது வேதாந்தத்தில் ஒருநியாயம். இரு குற்றங்கள் பொருந்துமிடத்தில் இந்த நியாயத்தைக் சொல்லுவார்கள். உபயதா = இருபக்க்மும், பாசரஜ்ஜு: = கயிறு. இரண்டுபக்கமும் கயிற்றால் கட்டப்படும் என்பது கருத்து. பகலில் இருளில்லை இருளில் பகலில்லை. இரண்டும் ஒரு இடத்தில்இல்லை. பச்சமண்ணும் சுட்டமண்ணும் ஒன்று சேராதல்லவா. அதுபோல அவயவமும் அதன் இன்மையும் பிரஹ்மத்தில் எவ்வாறு இருக்கும்? ''தேஜஸ்திமிர்சங்கவத்'' என்பது சங்கரர் சன்மொழி. தேஜ: = ஒளி, திமிரம் = இருள். இவையிரண்டும் ஒருஇடத்தில் ஒன்றியிருக்கமாட்டா. அதுபோல அவயவமும் அவ்யவ இன்மையும் நிர்தரும பிரஹ்மத்தில் இராதல்லவா. பிரஹ்மம் — நிஷ்க்ளம், நிஸ்க்ரியம், சாந்தம், திவ்யம், அமூர்த்தம், என்னும் இந்த சுருதிகள் எல்லாம் என்னவாகும்? இவைகள் சீறியெழாதா? இவைகளுக்கு என்னபதில் அளிப்பது. ஆன்மாவை-பிரஹ்மத்தை அங்கங்களோடு கூடியது என்று மொழிந்தால் பிரஹ்மத்திற்கு அழிவுவருமே. அதற்குப்பதில் என்ன? நங்கை சூதானல் கங்கையில் முழுகிஅதை மாற்றிக் கொள்ளலாம், கங்கை சூதானல் எங்கேமுழுகுவது. சூது — தோஷம். இதுபழஞ்சொல். உலகம் அழிந்தாலும் பிரஹ்மம் அழியாது என்பது மறைமொழி. ஆகையால் அடிகளார் இறைவனை அடைக்கலம் என்று சொல்கின்றார் —

பாற்கடல் கடையப்படும் கடுவெண்ணையைத்
திருமிடற்றடக்கிய சிவனேயடைக்கலம்.
அடங்கலும் அடக்கிடும் கடுங்கொலைக்காலனைக்
காலெடுத்தடக்கியக் கடவுள் நின்னடக்கலம்.

கடுவெண்ணை = நஞ்சு. திருமிடற்று = அழகியக் கண்டம். கழுத்து. அடங்கலும் = எல்லாம். மற்றவை வெளி. சிவன் பிரஹ்மம். அது அல்லாமலும் நிகில பிரஹ்மம் ஜகத்ரூபமாக வந்துவிட்டால் ''திருஷ்டவ்ய:'' = பார்க்கவேண்டும் என்னும் சுருதிக்கி விரோதமாகும். பிரஹ்மம் இயல்பாகவே ஜகத்ரூபமாக வந்ததால் முயற்சியொன்றும் இன்றி தெரிந்ததாகிறது. அப்படியிருக்க முயற்சிக்க வேண்டும், தேடவேண்டும், நாடவேண்டும் என்றவேதாந்தவாக்யம் வியர்த்தமாகும். ''சோ அன்வேஷ்டவ்ய:'' சோவிஜிக்ஞாசிதவ்ய:,, ''தத்பரிமார்கிதவ்யம்'' என்ற சுருதிஸ்மிருதிகளுக்கு முரணுகும். சோ = பரமாத்மா அன்வேஷ்டவ்ய: = தேடவேண்டும். சோ = பரமாத்மா. விஜிக்ஞாசிதவ்ய: = நன்ருக அறியவேண்டும். தத் = பிரஹ்மம்; பரிமார்கிதவ்யம் = நாடவேண்டும்மென்பது வாக்யங்களுக்குப் பொருள். உலகிற்கு வேருக பிரஹ்மம் இல்லாததால் மேலேயுள்ள வாக்கியம் எல்லாம் பொருளற்றதாகிவிடும். மேலும் ''நஜாயதே... ''அஜோநித்ய:'' என்ற சுருதிக் கோபப்படும். ''இதம் மஹத்பூதம் அனந்தம் அபாரம் விக்ஞானகனஏவ'' (பி.தா.உ.) இந்த. மஹத்பூதம் - பெரிய பிரஹ்மம், அனந்தம் = எல்லையற்றது. அபாரம் = பாரம்-கரை, அளவு, பிரமாணம் என்பன ஒருபொருளைத் தருஞ்சொற்கள். அளவற்றதென்பது குறிப்பு. விக்ஞான கனஏவ = தேகம்வேறு நான்வேறென்பது ஞானம். நான்பிரஹ்ம சொரூபமென்பது விக்ஞானம் இதில் மூன்று வித ஐயமும் இல்லாதிருப்பது கனம். ஏவ = உறுதி. சம்பூர்ண பிரஹ்மம் ஜகத்ரூபமாகப் பரிணமித்திருகிறதென்று சொன்னுல் மேற்கூறிய மறைமொழிக்கெல்லாம் பங்கம் உண்டாகுமென்பது பூர்வ பக்ஷம். பங்கம் = நஷ்டம் அல்லது குற்றம்.

## அவதாரிகை

மேற்கூறிய பூர்வபக்ஷிக்குற்றத்தை அகற்றும் பொருட்டு அடுத்த சூத்திரம் வருமாறு:—

# சூ. சுருதேஸ்து சப்த மூலத்வாத் 27

து.சப்தம் சங்கையை நிவாரணஞ் செய்கின்றது. வேதாந்த மதத்தில் யாதொருகுற்றமும் இன்று. ஏனெனின், வேதாந்தத்தில் சம்பூர்ண பிரஹ்மம் ஜகத்ரூபமாக மாறுகிறதில்லை. எவ்விதம் என்று கேட்பாயாகில், சுருதே: = சுருதிப்பிரமாணத்தைக் கொண்டு. மறைகளில் பிரஹ்மத்தை உலகவடிவமாக வந்திருக்கிறதென்றும், உலகிற்கு வேருக இருக்கிறதென்றும் கூறியிருக்கிறது. விகாரத்தோடு கூடியதென்றும், விகாரமற்றதென்றும் என்பது பொருள். எங்குகூறியிருக்கிறதென்றுக் கேட்பாயாகில்-சாந்தோக்கிய சுருதி ஷஷ்டப்பிரபாடகத்தில் சிருஷ்டியைப்பற்றிப் பேசுகின்றபொழுது சத்தானதுநான் அநேகவடிவனுவேன் என்றுநினைத்து நெருப்பு, நீர். நிலம் இம்மூன்றையும் படைத்து. மீண்டும் சங்கல்பம் செய்து "அநேன ஜீவேன ஆத்மனு அநுப்ர விஸ்ய நாமரூபேவ்யாகரவாணி" என்று கூறியிருக்கிறது. நெருப்பு, நீர், நிலமென்னும் இம்மூன்றில் (சத்தாகிய நான்) அநுப்ரவிஸ்யநுழைந்து. கேனரூபேண = எந்தவடிவமாக எனின், அநேனஜீவேன ஆத்மனு = இந்த ஜீவவடிவமாக என்பது பொருள். நுழைந்து சத்ரூப ஆத்மா என்னசெய்கின்றது, நாமரூபே வ்யாகரவாணி = நாமரூப வடிவஉலகையுண்டுபண்ணுவேன் என்று எண்ணியதென்பது கருத்து. இதுமூலமாக என்னதெரிகிறது, பிரகிருத ரூபம் புவியென்றும், அவிக்ருதரூபம் ஆத்மாவென்றும் தெளிவாகின்றது. உலகமாகவுற்ற தென்றும், உலகரூபமற்றதென்றுந் தெற்றெனத்தெளிவாகின்றது. "சப்தமூலத்வாத்" பிரஹ்மம் சாஸ்த்ரத்தைப்பற்றி யிருக்கிறது. பிரஹ்ம சப்தபிரமாணகம் "நேந்த்ரிய பிரமாணகம்" என்பது சங்கரபாஷ்யம். வாலறிவானை நூலறிவால் அறிய வேண்டுமென்பது குறிப்பு. மேலும்" பாதோ அஸ்யசர்வா பூதானி" என்பது விகார பிரஹ்மத்தையும், திரிப்பாதஸ்ய அம்ருதம் திவி" என்பதுநிர்விகார பிரஹ்மத்தையும் தெரிவிக்கிறது.

உலகத்திலும் மணி மந்திர (ஔஷத) மருந்துகள் மூலமாக மனிதர்கள் தம்மைப் பலவாருகவும், ஒருவாருகவும் ஆக்கிக் கொள்கிருர்கள். அவ்வாறிருக்க எல்லாவல்லமையும் இணைந்திருக்கின்ற அபரிமித பிரஹ்மத்திற்கு இது ஒரு பெரிதல்ல. பரிமிதம்-அளவு. அபரிமிதம் அளவற்றது. நூலானது நுண்ணிய ஆத்மாவை இரு

விதமாகவுங் கூறுகின்றது. விகாரமுற்றதாயும் விகாரமற்றதாயும். அது எவ்வாறு பொருந்துமெனின், அவித்யா பேதாத்தென்பது சங்கரபாஷயம். ''அசிந்த்யாகலுயே பாவா நதான் தர்க்கேண ப்ாவயேத்'' சிந்திக்கமுடியாத பொருளை தர்க்கத்தைக் கொண்டு அடைய முடியாதென்பது கருத்து.

பூர்ணபிரஹ்மம் உலகமாக வெளிப்பட்டு விட்டால் சுஷுப்தியில் ஜீவன் பிரஹ்மத்தையடைகிருன் என்று சொல்ல வேண்டுவதில்லை. ''சதா சோம்யததா சம்பன்னோ பவதி. சதா = சத்ரூப பிரஹ்மத்-தோடு, ததா = சுஷுப்தியில். சம்பன்னோ பவதி = ஒன்ருகிறது. என்று சா.சுருதி கூறுகின்றது. ஆகையால் சம்பூர்ண பிரஹ்மம் ஜகத்ரூபமாகவரவில்லை யென்பது துணிவு. அவனி வடிவமாக ஆத்மா வந்தது என்று அறிந்ததனல் ஒருபயனுமில்லை. பிரஹ்மம் அபரிணமி பரிணமம் அற்றது என்று அறிந்தால் பயனுண்டாகிறது.'' அபயம் வைஜனகப்ராப்த் தோஸீ என்பது சுருதிப்பிரமானம். வேந்தனே (நீ) அச்சமற்ற பிரஹ்மத்தையடைந் திருக்கின்ருய் என்பது சுருதிப் பொருள். சவிகாரமும் நிரிவிகாரமுமாக பிரஹ்மமிருக்கிறது என்று கூறுவதில் குற்றம் ஒன்றுமில்லை. ''கற்பனைக் கடந்த ஜோதி கருணையே யுருவமாகி தமிழ்மறை. கற்பனைக் கடந்த ஜோதியென்பது நிர்குணத்தையும், கருணையே யுருவமாகியென்பது சகுணத்தையுங்-குறிக்கும். பொருள்வெளி.

### அவதாரிகை

வேதாந்தப்பக்ஷத்தில் யாதொருகுற்றமும் அன்று என்பதற்கு மீண்டுஞ்சூத்ரம் வருமாறு—

## சூ. ஆத்மநிசைவம் விசித்ராஸ்ச ஹி 28

ஆத்மனி, ச, ஏவம், விசித்ரா: ச, ஹி என்று பிரிக்கவும்.

இ.ள். ஆத்மனி = ஆத்மாவிடத்தில். ச ஏவம் = மேலே கூறிய விசித்ரா: = நானுவான (சிருஷ்டிகள்.) உண்டாகின்றன ஹி = உறுதி.

சங்கை—பலவிதமான சிருஷ்டிகள் பிரஹ்மத்தை கெடுக்காமல், பிரஹ்மத்தை, உபமர்தனம்—சொரூபத்தை யழிக்காமல் எவ்வாறு உண்டாகக்கூடும் என்பது பூர்வபக்ஷியின் ஆக்ஷேபம். சித்தாந்த-

பக்ஷம் — ஆத்மனி — ஆத்மாவாகிய தன்னிடத்தில், சொப்பனதிருஷ்டா = சொப்பனத்தைப் பார்ப்பவன். அவனே யிங்கு ஆத்மாவென்று கூறப் படுகிறது. அவனிடத்தில் சொரூப அநுபமர்தனேந = ஆத்மாவாகிய தனது சொரூபத்தை, யநுபமர்தனம் = கெடுக்காமலே. விசித்ரமான — தேவர், மனிதர், விலங்கு, பசுபக்ஷி, புல் பூண்டு முதலிய அனேக வடிவமான படைப்புகள் உலகிலும், உணர்வு நூல்களிலும் உணர்வு நூல் = உபநிஷத்து நூல் என்பது குறிப்பு. காணப்படுகின்றன. ''நதத்ர ரதா நரதயோகா நபந்த்தானோ பவந்தி, அதரதான் ரதயோகான் பத: சிருஜதே. நதத்ர ஆனந்தா முத: பிரமுதோபவந்தி, அத ஆனந்-தான் முத: பிரமுத: சிருஜதே, நதத்ர வேஸாந்தா: புஷ்க்கரிண்ய: சிரவந்த்யோ பவந்தி, அத வேஸாந்தான் புஷ்க்கரிணீ: சிரவந்தீ சிருஜதேசஹிகர்த்தா'' என்பது (பி. உ.) தத்ர = சுவப்ன அவஸ்-தையில் நரதா : = தேர்முதலியவையில்லை. நரத யோகா : = தேர்க் குரிய யோகம் காலம், இடம், கருவிகள் இல்லை. ந பந்த்தானோ பவந்தி = தேர் செல்லும் வழிகளும் (அங்கு) இல்லை. ந தத்ர = மேற் கூறிய அவஸ்தையில். ஆனந்தா : = ஆனந்தங்கள். முத : = சந் தோஷம் = களிப்பு. பிரமுத : = மிகுந்த களிப்பு. ந = இல்லை. இவையில்லாதிருந்தும் இவ்வானந்தத்தை. சிருஜதே = படைத்துக் கொள்கின்றான். நதத்ர = சுவப்னத்தில். வேஸாந்தா : = சிறிய குளங்கள். புஷ்க்கரிண்ய : = நடுத்தர தெப்பங்கள். சிரவந்தீ = பெரிய ஆறு, மடு விசாலமான நீர்த்தேக்கங்கள் இவையெல்லாம் இல்லாதிருந்தும் இந்த சுவப்னதிருஷ்டா படைத்துக் கொள்கின்றான் என்பது கருத்து.

உலகில் மாயாவி - இந்திரஜாலக்காரன் கண் கட்டி வித்தைக் காட்டுபவன். தனது வலிமையின் மகிமையால் இல்லாத சில அதி-சயப் பொருளை இணைத்துக்காட்டித்தனது நிஜ வடிவத்தில் மாறு-பாடில்லாமல் மக்களை மலங்க வைக்கிறான். மலங்குதல் — மயங்குதல். அவ்வாறு ரிஷிகள், இந்திராதித்தேவர்கள் தமது அளவில் மகிமை-யால் காண்பார் காதலிக்கும் காக்ஷிகளைக் காண்பித்து நிஜவடிவத்-தில் யாதொரு கேடுமில்லாமல் இருக்கிறார்கள். இந்த மாதிரி எல்லா வல்லமையுடைய பூர்ண பிரஹ்மத்திற்கு ஈதொன்றும் புதுமையல்ல. இவையனைத்தும் பிரஹ்மத்தின் விவர்த்தமே. விவர்த்தம் = உண் மையில் இல்லை. ஏ — உறுதி. '' பராஸ்ய சக்திர்விவிதைவ சுரூ-யதே'' = பரமாத்மாவின் வலிமைகள் — விவிதைவ = பலவிதமென்று,

சுரூயதே = கேட்கப்படுகிறது என்பது பொருள். கடலில் நீர் நிறைந்திருப்பது போலும், மின்சார நிலையத்தில் ஒளி குவிந்திருப்பது போலும், பிரஹ்மத்தில் வலிமைகள்) சக்திகள் மலிந்திருக்கின்றன என்பது துணிபு.

இந்தவுணர்வுடையவனே உயர்ந்தோன், தெளிந்தோன் மற்றையன் இழிந்தோன், தாழ்ந்தோன் என்பது குறிப்பு.

வரம் ஸராவஹஸ்தஸ்ய சாண்டாலாகார வீதிஷு,
பிக்ஷார்த்தமடனம் ராம ந மௌர்க்கியம் ஹத ஜீவிதம்'' வாசிட்டம்

மௌர்க்கியம் = வேதாந்த உணர்வு இல்லாமல். ஹத ஜீவிதம் = உயிரிழந்து வாழ்வது. ந வரம் = உயர்வல்ல. அப்படி வாழ்வதைப் பார்க்கிலும், ஸராவஹஸ்தஸ்ய = குடிகாரன் கையினாலும், சாண்டாலாகார வீதிஷு = புலையர்கள் தெருவிலும், வரம் பிக்ஷார்த்தம் அடனம் = ஐயம் ஏற்று உண்பது மிகச் சிறந்ததாகும். ஐயம் பிக்ஷை. வரம் – சிறந்தது. வாசிஷ்டம். இதனால் வேதாந்த விமல உணர்வை விரும்பிக்கற்கவேண்டும் என்பது சித்தம். காற்றால் புல்லசையும் கல்லசையாது. அதுபோல மாயையால் எழுந்த படைப்பு அனைத்தும் மஹத்தாகிய பிரஹ்மத்தையணுகாதென்பது கருத்து. எனவே வேதாந்தத்தின் எவ்விதக் குற்றமும் அன்றென்பது துணிபு.

### அவதாரிகை

அவயவமில்லாத பிரதானத்திலிருந்து அவயவங்களோடு கூடிய உலகமுண்டாகிறது என்று கூறும் சாங்கிய மதத்திலும் இந்த தோஷம் வருகின்றது.

## சூ. ஸ்வபக்ஷ தோஷாச்ச 29

சுவ, பக்ஷ, தோஷாத், ச, என்று பிரிக்கவும். இ.ள். சுவபக்ஷம் = சாங்கியமதத்திலும். தோஷாத் = குற்றமிருத்பதால். ச = உறுதி. அன்ய மதங்களிலும் மேற்கூறிய தோஷம் வரும். அன்ய மதம்— சாங்கியமதம். பிரதானத்தை ஜகத்திற்குக் காரணமாகக் கொள்கின்ற மதம். பிரதானம்—மாயை. சாங்கியமதத்தில் பிரதானத்திற்கு (அவயவம்) உறுப்புக்கள், கிடையாது. சப்தாதிஹீனம் பிரதானமென்பது அவர்கள் மதம். பிரகிருதி அபரிச்சின்னம்—பரசின்னம்-

அளவு. அதுஅற்றது அபரிச்சின்னம். ''உருவமற்றது ஒள்ளிய சக்தி'' ஒள்ளிய = மேன்மைதங்கிய. சக்தி = சாமர்த்யம். ''தமஸா கூடம் அக்ரே'' சிருஷ்டிக்கு முன்னர், தமஸா = சக்தி, கூடம் = மறைந்து இருந்தது என்பது அவர்கள் அபிமதம். ஆனால் இவ்விதபிரதானம்-சாவயவம், சப்தாதியுதம் = சப்தஸ்பர்ஸ ஆதிகளோடு கூடிய ஜகத்திற்குக்காரணமென்று மொழிகின்றனர். சங்கை — சாங்கிய மதத்திலும் பிரதானம் நிரவயவமன்று ஏனெனின்? முக்குணங்களும் மாயைக்கு அவயவங்களாக இருக்க நிரவயவம் எவ்வாறு என்பாயாகில், அது பொருந்தாது. குணங்கள் தனித்தனி நிரவயவமாயிருப்பதால். முக்குணமும் சேர்ந்து தான் ஜகத்திற்குக் காரணமாகின்றது. தனித்தனியாக இருக்கும் பொழுது உலகம் உதிக்கமாட்டாது. முக்குணங்களும் ஒன்ரேடொன்று மோதுகின்ற பொழுது சாவயவம் சப்தாதிகுண முதலிய பிரபஞ்சம் உண்டாகின்றது. அது பொருந்தாது. இந்தக் குற்றம் அவர்களுக்கு சொந்தமாயிற்று,

சிறிது பரமாணுவாதத்தைச் சிந்திப்போம் — நுண்ணிய பொருளுக்கு அணுவென்றுபெயர். மிகநுண்ணியது பரமாணு. தார்க்கிகர்கள் மதத்தில் இந்த அணு புவிக்குக் காரணமென்றுப் புகலப்பட்டிருக்கிறது. இவர்களுக்கு இந்த அணு அவயமற்றது. அணுக்கள் ஒன்று சேர்ந்தால் தான் அவனிக்குக் காரணமாகமுடியும். அவனி — உலகம்: சேரும் போது சாவயவம், சேராதபோது நிரவயவம். இதனால் இவர்மதம் குற்றமுடையதாகும். புவியில் விழுந்த அனைவர்மீதும் புழுதிபடிவது போல பிரஹ்மத்தைப் புறக்கணித்த மதங்கள் அனைத்தும் தள்ளத்தக்கன, புனித வேதாந்தபக்ஷம் கொள்ளத்தக்கது. இதனல் பூர்வ பக்ஷிபுலம்பியகுற்றம் விமல வேதாந்திகளால் விலக்கப் பெற்றது.

## 4
## சர்வோபேதாதிகரணம்

### அவதாரிகை

ஒன்ருகிய பிரஹ்மத்திற்குப் பலவித சக்தியோகத்திஞல் விசித்திரமான சிருஷ்டி உண்டாகக்கூடுமென்பதற்கு சூத்திரம் வருமாறு—

# ஸூ. சர்வோ பேதாச்ச தத்தர்ஸனத் 30

சர்வ, உபபேதா, ச, தத், தர்ஸனத் என்று பிரிக்கவும். இ-ள். (பிரஹ்மத்தில்) சர்வ உபேதாச = எல்லா விதமான தன்மையும் பொருந்தும். (ஏனெனின்) தத்தர்ஸனத் = சுருதிகள் அவ்வாறுகூறி

யிருப்பதால். ச = உறுதி. நாலு விதமான வலிமைகளால் பிரஹ்-மத்தில் பலவிதப்படைப்புகள் நிகழலாம் என்று உரைத்தீர்கள். பிரஹ்மத்தில் அனேக சக்திகள் உண்டென்பது எவ்வாறு எனின்? அது வருமாறு—''சர்வகர்மா சர்வகாம : சர்வகந்த : சர்வரச : சர்வமிதம் அப்யாத்தோ அவாக்யனுதர : சா. உ. 3-14-41 என்று சுருதி கூறு-கின்றது. சர்வகர்மா = எல்லா வினைகளையும் இயற்றும் வலிமை-யுடையது. சர்வகாம : – எல்லா இச்சையும் அடங்கப்பெற்றது. அல்லது எல்லாராலும் விரும்பப்பெற்றது. சர்வகந்த : = பாவமற்ற நறுமணங்களையுடையது. ''புண்யோகந்த : பிருதிவ்யாம் ச'' கீதை. பூமியின் கண் பாபமற்ற (கந்தம்) மணம் நான் என்று நந்தகுமாரன் நவில்கின்ருன். சர்வரச : = ரசம்-பலம். அனைத்திற்கும் நிலையம் – இடம். சர்வம் இதம் = இவ்வுலகமனைத்தையும், அப்யாத்த : = வியாபித்திருக்கிறது. அவாக் = கரணமற்றது. அநாதர : = மயக்க-மின்றியது. இவ்வாக்யமனைத்தும் நிறைந்த அறிவும் ஆண்மையும் உடையது பிரஹ்மம் என்பதையுணர்த்துகின்றன.'' எண்குணத்தான் தாளை வணங்காத்தலை'' குறள். ''எண்குணபஞ்சரனே'' கந்தரநுபூதி. எட்டுகுணமுடைய இறைவன் தாளை வணங்காத தலைபயனில்லையென்பது வாக்யத்தின் பொருள். எண்குணமாவன :— 1. தலைமை 2. தூய்மை 3. தத்வ உணர்வு 4. வலிமை 5. அருள் 6. இன்பம் 7. அமலம் 8. தெளிவு என்னும் குணங்கள் எல்லாம் பிரஹ்மம் (சர்வோ பேதா) சகல வலிமையுமுடையதென்பதைத் தெற்றன விளக்குகின்றன. ''வஜ்ரஹஸ்தபுரந்தர:'' வேதம். பரமேஸ்வரன் வலிமை வாய்ந்த வஜ்ரமென்னும் படையைக் கரத்தில் ஏந்தியவண்ணம் இருக்கிருன் என்பது வேதத்தின் பொருள். இதனுல் பிரஹ்மம் கர்த்தும் அகர்த்தும் அந்யதா வா கர்த்தும் சக்யம் என்பது சங்கர பாஷ்யம். செய்யவும் செய்யாமல் இருக்கவும் மாற்றிச் செய்யவும் பிரஹ்மத்திற்கு முடியும் என்பது துணிபு.

அவதாரிகை

கருவி கரணமற்ற பிரஹ்மம் எவ்வாறு உலகையாக்க முடியு-மென்ற சங்கைக்குச் சமாதானமாக சூத்திரம் வருமாறு :-

## சூ. விகரணத்வான் நேதிச்சேத் தநுக்தம் 31

விகரணத்வாத், ந, இதி, சேத், ததுக்தம் என்று பிரிக்கவும். இ.ள். விகரணம் = கருவிகள் அற்றது. இதி சேத் = என்று சொல்வாயாகில். ந = அவ்வாறன்று. தத் உக்தம் = அதைப்பற்றி (முன்னர்) கூறியிருக்கிறது.

பூர்வபக்ஷம் — உங்கள் பிரஹ்மம் உலகிற்குக் காரணமாக இயலாது. யாதுகாரணமெனின்? கருவி கரணங்கள் இன்றி இருப்பதால். கருவிகள் — கை, கால், கண். காது, மூக்கு, நாக்கு, வாக்கு, மனம், புத்தியெனப்படும். ஒருவன் ஒருகாரியத்தைச் செய்ய வேண்டுமாஞல் அவனுக்கு நினைக்க மனமும், பேசவாக்கும், செய்யக்காயமும் வேண்டும். நினையாமலும், சொல்லாமலும், செய்யாமலும் கடமுதலிய காரியம் எவ்வாறு நிகழும்? ''சரீரவாங்மநோபிர் யத்கர்ம ப்ராரபதே நர:'' கீதை. அருஜுன! நர: = மனிதன். மன் வாக்குக் காயங்களால் யத்கர்ம = எந்தக் கருமத்தை. ஆரபதே = செய்கிருனே...என்று யது ராஜசிகாமணி குருராஜக்குரு மணிக்குக் கூறுகின்றுர். அருஜுனனுக்கு அச்சுதன் அருளுகின்றுரென்பது குறிப்பு. ''திருஷ்டமேதத் சர்வம் லோகே'' இதைத்தான் உலகில் கண் கூடாக பார்க்கிறோம். ஆனல் பிரஹ்மமோ = நிஷ்களம்.கலம்,உறுப்பு.மனமுதலிய உறுப்புகள்அற்றது. நிரவயவம் = அவயவமற்றது. ''அசக்ஷுஷ்கம் அஸ்ரோத்ரம் அவாக்-அமன:'' பிரு. உ. 3-8-81 அசக்ஷுஷ்கம் = கண் இன்றியது. அஸ்ரோத்ரம் = காது இன்றியது. இவையிரண்டு மூலமாக ஏனைய மூன்று இந்திரியங்களும் இல்லையென்பதுத் தெளிவாகிறது. அவாக் = வாக்கிந்திரியம் இன்றியது. இதுமூலமாக இதன் இனத்தைச் சேர்ந்த நான்கு இந்திரியங்களும் இல்லை யென்பது உறுதி. அமன: = மனமின்றியது-இதஞல் ஏனைய மூன்று காரணங்களும் அன்றென்பதுத்துணிபு. 'ச ஏஷ நேதிநேத்யாத்மா என்னும்வாக்கியத்தால் சகலகருவிகளும் விலக்கப்பட்ட ஆத்மா ஜகத்திற்குக் காரணம் ஆகுமென்பது முடவன் கொம்புத்தேனை யெடுக்கச்சென்றுன் என்பதுபோல விந்தையாக இருக்கிறது. கொம்புத்தேன் = மரத்தின் உச்சியிலிருக்குந்தேன்.

தேவர், பித்திருக்கள், ரிஷிகள் முதலியோர்களும் கருவிகரணங்களோடுப் பொருந்திதானே பலவித காரியங்களைச் செய்கின்றுர்கள். பிரஹ்மம் அவ்வாறின்மையால் அது உலகிற்குக்காரணம் எவ்வாறு முடியும் என்பது பூர்வபக்ஷியின் ஆசங்கை. சி. பக்ஷம் — வருமாறு-ததுக்தம் — இதற்குச் சமாதானம் — (அஸக்கிருத் ஈரிதம் அஸ்மாபி:) சங்கரபாஷ்யம். அஸ்மாபி: = நாங்கள். அஸக்கிருத் = பன்முறை. ஈரிதம் = மொழிந்திருக்கிறோம் என்பது கருத்து. பிரஹ்மம் ஆழமானது. அதை

யறியவேண்டுமானுல் புத்தியும் ஆழமாக இருக்கவேண்டும். ஆள்பிர-மத்தனுபவம்வந்தது அதுதீருமென்றவரோ'' கீ.சாரம். ஆள்பிரமத்தனு பவம் வந்தது = கெம்பீரமான பிரஹ்மத்தின் அநுபவம் = நான் அதுவா யிருக்கிறேன் என்றதிடமான உறுதி. வந்தால் = வருமானுல், அதுதீரும் = யாக்கையை நானென்னும் அறியாமை ஒழியும் என்பதுபொருள். வாயில்லாமல் ஒலிஇயந்திரம் (ரேடியோ) ஒலிக்கின்றது. கால்இல்லா-மல் தந்திசெல்லுகின்றது. கையில்லாமல் மின்சாரம் பிடிக்கின்றது. ப த வி னு சலயி - கால்இல்லாமல் நடக்கிறது. சுனத்துவினுகாநா = காதில்லாமல் கேட்கின்றது என்பது ராமாயணம் ''அபாணிபாதோ'' ...சகலவல்லமையுடைய பிரஹ்மம் எல்லாகாரியங்களையும் எளிதில் (இயற்ற) செய்யமுடியும் என்பதை இந்தசுருதி யுணர்த்துகின்றது. சத்யகாம: சத்யசங்கல்ப: என்றசுருதியும் வலியுறுகின்றது. எனவே கருவிகரணங்கள் அற்றபிரஹ்மம் — ஜகத்காரணம்பவிது மர்ஹதி. உல-கத்தையுண்டு பண்ணும் ஆற்றலுடையதென்பது தெளிவு.

4

## ந பிரயோஜன வத்வாதிகரணம்

### அவதாரிகை

சேதனம் பிரஹ்மம் ஜகத்திற்குக் காரணமானுலும் பிரயோ ஜன மி ல் லா ம ல் எ வ் வ ா று இவ்அவனியை ஆக்கமுடியும் என்னும் ங்கைக்குச்சமாதானம் வருமாறு —

## சூ. ந பிரயோஜன வத்வாத் 32

ந. பிரயோஜனவத்துஆத் என்றுபிரிக்கவும். இ·ள். பிரஹ்மம் புவிக்குக்காரணமாக முடியாது. ஏனெனின்? பிரயோஜன வத்வாத் - பிரவிருத்தி — தொழில் பயனைக்கருதி யிருக்கிறது. பிரஹ்மம் என்றும் விருப்பற்றது. ஆகையால் எதையும் விரும்பியிந்த மேதினியை ஆக்க அவஸ்யமில்லை. மேதினி — உலகம். துசப்தம் பூர்வபக்ஷி ஐயத்தை யகற்றுகின்றது. ''விஞ பிரயோஜனேன நமந்தோபி பிரவர்ததே' மந்தமதியுடைய ம னி த னு ம் பயனைக்கருதாது கர்மத்தில் முயல-மாட்டான் என்பது வாக்கியத்தின் பொருள். எல்லா அ றி வு ம் இயல்பாகப் பெற்றிருக்கிற பிரஹ்மம் பயனற்ற காரியத்தை யெவ்வாறு செய்யும். அதல்லாமலும் ''நவா அரே சர்வஸ்ய க ா ம ா ய சர்வம் பிரியம்பவதி ஆத்மனஸ்து காமாயசர்வம் பிரியம் பவதி'' (பிரு. உ 2-4-5) அரே = பிரியே. சர்வஸ்ய காமாய = எல்லாருடைய பயனுக்.

காக எல்லாரும் பிரியப்படுகிறதில்லை; பின்னை? ஆத்மனஸ்து காமாய = தன்பொருட்டாகவே. பிரியம்பவதி = பிரியப்படுகின்றார்கள். என்ற சுருதியும் ஆசையுடையவர்கள் அழகிய கர்மத்தைச் செய்வார்கள் என்பதை விளக்குகின்றது. ''இச்சதி யததே; விருப்பமுடையவன் வினை யை செய்கின்றான் என்பது கருத்து. இவ்வுலகத்தைப் படைப்பது சாமான்ய காரியமல்ல. ஆகையால் ஏதோ ஒருபயனைக் கருதிதான் பிரஹ்மம் ஜகத்தையுண்டு பண்ணுகிறது என்று சொல்லவேண்டும். அதுஉண்மையானால் மீண்டுந் தோஷமுண்டாகும். ''அகாமோ நிஷ்காம ஆப்தகாம ஆத்மகாம;'' என்னும் சுருதிக்குப்பங்கம் வரும். அகாம: = ஆசையற்றவன். நிஷ்காம: = தன்னலமற்றவன். ஆப்தகாம: = நிறைந்த ஆசையுடையவன். ஆத்மகாம: = தனது சொரூபத்தில் ரமிப்பவன் என்பது சுருதிப்பொருள். இந்தவாக்கியங்களுக்குக் குற்றம் வருமென்பது குறிப்பு. ஆசையில்லாதிருந்தும், பயனைவிரும்பாமல் உலகப்படைப்பென்னும் பெருங்காரியத்தைச் செய்கிறானென்றால்பைத்தியக்காரனைப் போல இறைவனுமாவான். இறைவன் – பிரஹ்மம். பித்தாபிறைசூடி யென்ற வாக்கியத்திற்கிணங்க பித்தனாக இருக்கட்டுமே யென்றால்-சர்வக்ஞத்வ பங்கபிரசங்கம் வரும். முற்றறிவுடையவன், பேரறிவாளன் என்னும் வாக்கியத்திற்குத் தோஷமுண்டாகும். இவையனைத்தையும் அகற்றுவது பெரும் பிரயாசமாகும். ஆகையால் சேதனம் பிரஹ்மம் ஜகத்திற்குக் காரணமாகாது என்று சொல்வது மிகநலம் என்றுபூர்வபக்ஷி கூறுகிறான். இதற்குப் பதில் அடுத்த சூத்திரம் வருமாறு.

**அவதாரிகை**

பயனைக் கருதாமல் பிரஹ்மம் உலகிற்குக் காரணமாக மாட்டாது என்னும் சங்கையை ஒழிக்கும் பொருட்டு அடுத்த சூத்திரம் வருமாறு :-

## சூ. லோகவத்து லீலா கைவல்யம் 33

லோகவத்து லீலா கைவல்யம் என்று பிரிக்கவும். இ ள். துசப்தம் வாதியின் வறட்டு சங்கை விரட்டும் பொருட்டு உபயோகிக்கப்படுகிறது. லோகவத் = உலகத்தில் (பெரியோர்கள் ஒரு பயனும் இல்லாமல்) விளையாட்டு முதலிய வினைகளில் முயல்வதைக் காண்கின்றோம். அது போல பரமாத்மாவும் லீலா = விளையாட்டு = விளையாட்டை – சிருஷ்டிரூப விளையாட்டை. கைவல்யம் = கேவலா – ஒருபயனையும் கருதாமல் செய்கிறார் என்பது பொருள். ஆகையால் பூர்வபக்ஷி கூறிய தோஷம் பிரஹ்மத்திற்குப் பொருந்தாது.

உலகத்தில் எல்லா ஆசையும் நிறைந்த அரசன் அல்லது அமைச்சன் எதையும் விரும்பாமல் வேட்டை முதலிய விளையாட்டைச் செய்வதற்கு முயல்கின்றனென்பதை நாம் கண் கூடாகக்காண்கின்றோம். அரசனுடைய முயற்சிக்கு யாது பிரயோஜனுமுமின்று. ஆனால் இயல்பாகவே அவனது பிரவிருத்தியுண்டாகிறது. அதுபோலவும், எவ்வாறு மூக்குவழியாக வரும் மூச்சானது ஒரு பயனுமில்லாமல் உள்ளிலும் வெளியிலும் சென்று கொண்டிருக்கிறதோ அதுபோலவும் ஈஸ்வரனும் ஒருபயனையும் நாடாமல் இயல்பாக இவ்வுலக முழுவதையும் ஆக்கியளித்து அழிக்கிறனென்பது கருத்து. பூர்வபக்ஷி – இவ் அவனியை ஆக்குவது மகத்பிரயாச மென்று மொழிந்தான். இதை யகற்றுவதற்காக – லீலா என்றார். லீலை – அனுயாசம். எளிதென்பது கருத்து. ஜீவனுக்கு எது பெரிதோ அது இறைவனுக்குச்சிறியது. இது பெரியது இது சிறியது என்று கூறுவது ஜீவனை முன்னிட்டு. இதைத்தவிர எந்தவித பிரயோஜனத்தையும் சுருதியுக்தி மூலமாகவும் இறைவனுக்குக் கற்பிக்கமுடியாது. இறைவன் அளவில் அழிவில் வலிமையை யுடையவன். அவன் நினைத்தால் காடு நாடாகும், நாடுகாடாகும். கடல் மணலாகும், மணல் கடலாகும். நீர் நெருப்பாகும் நெருப்பு நீராகும். கடலெலாம் மண்களாம் புவனமிப்படிப்போமே. கைவல்யம். ''பராஸ்ய சக்திர்விவிதைவ சுருயதே'' பரமாத்மாவின் சக்தி – வலிமை அநந்தமென்றும் அபாரமென்றுங் கூறியிருக்கிறது. ''அபரிமித சக்தித்வாத்'' என்பது சங்கரபாஷ்யம். பொருள் வெளி. பயன் ஒன்றையும் விரும்பாது இந்த பெருங்காரியத்தைச் செய்தானென்றால் பாலனைப் போன்றும், பைத்தியக்காரனைப் போன்றும் இறைவன் ஆவான் என்று இயம்பக்கூடாது. ஏனெனின் சிருஷ்டி சுருதியும் சர்வக்ஞத்வ சுருதியும் நம்மைமுனியும். கோபப்படும் என்பதுக்குறிப்பு. சிருஷ்டிசுருதி பாலனையும், சர்வக்ஞ்த்வ சுருதி பைத்தியக்காரனையும் முறையாக விலக்குகின்றன. படைப்பும் உண்மையில் விசாரிக்கும் பொழுது கயிற்றரவு போலும், கானற்ஜலம் போலும், கனவிற்காணும் ஞாலம் போலும் பொய்யேயாம். ''ஜகன் மித்யா என்பது சுருதி. உலகம் பொய் என்பது பொருள். ஏணியைப்பற்றி விரிவாக பேசுவதும், ஏணியையெடு என்று சொல்லுவதும் ஏணிக்கன்று. பின்னை, ஏணிவாயிலாக மேலே யேறுவதற்காக. அதுபோல சிருஷ்டியைப்பற்றிப் பேசுவது சிருஷ்டிக்காக அல்ல. பின்னை சிருஷ்டிகாரணமான பிரஹ்மத்தையடையும் பொருட்டேயாம். ''சிருஷ்டி சுருதி பரமார்த்த விஷயகமன்று, பிரஹ்ம சொருபத்தை கூறுவதில் தாத்பரிய மென்பது ஆசாரியாள் அபிமதம். சம்மதமென்பது தெளிவு. ஒரு குழந்தை அழுது

கொண்டு இருந்தது. அழுகைக்குரலைக் கேட்ட அன்னை தாவிவந்து தரணியில் தவழ்ந்த குழந்தையை தனது அங்கையால் அள்ளி அரிய மார்போடணைத்துச் செங்கையால் பிள்ளையின் சென்னியைத்தடவி மைந்த! ஏன் அழுகின்றாய்? என்ன வேண்டும் உனக்கு என்று இனிய மொழியால் வினவினாள். அம்ம! ஆகாயத்தில் இருக்கும் அம்புலி—சந்திரன். வேண்டுமென்றான். தாய்—தனயனே? இதோ கொணர்ந்து தருகிறேனென்றாள். இதற்குப் பொருளென்ன? அழாதே யென்பது-தானே. அதுபோல் சிருஷ்டியைப் பற்றிப் பேசுவது சிருஷ்டிக்கர்த்தா-வாகிய ஜகன் நியந்தாவை யறியும் பொருட்டேயாம் என்பது சூத்திரத்தின் கருத்து.

பிரஹ்மணாதன்யதே விஸ்வம் மநஸைவ ஸ்வயம்புவா,
மநோமயம் அதோவிஸ்வம் யந்நாம பரித்ரு ஸ்யதே'' வாசிஷ்டம்.

இ.ள். சர்வல்லமையை யுடைய சுவயம்பு பரமாத்மா தனது சங்கற்பமென்னும் மனதினால் இவ்விஸ்வ முழுதையும். தனது சங்கற்பமென்னும் மனதினால் இவ்விஸ்வ முழுதையும், தன்யதே = படைக்கின்றார். ஆகையால் இவ்அவனிக்கு மநோமயமென்று பெயர். இதனாலும் பரமேஸ்வரன் பயனைக்கருதாமல் பார்முழுவதையும் படைக்-கிறான் என்பது துணிபு.

## வைஷம்யநைர் க்ருண்யாதிகரணம்

### அவதாரிகை

ஈஸ்வரன் உலகிற்கு ஆதிகாரணம் என்பதையேற்றுக் கொள் வோம். இதை மீண்டும் உரமுறக்குத்தியுறைப்பிக்குமுபாயம் போல வேறு விதமாக சங்கையைக் கிளப்புகின்றார்—சூத்திரம் வருமாறு:-

## சூ. வைஷம்யநைர்க்ருண்யே ந ஸாபேக்ஷத்வாத் ததா ஹி தர்ஸயதி 34

வைஷம்ய, நைர்க்ருண்யே, ந, ஸாபேக்ஷத்வாத், ததா, ஹி, தர்ஸயதி என்று பிரிக்கவும்.

இ—ள். வைஷம்ய நைர்க்குண்யே ந = (பிரஹ்மத்தில்) விஷமம் — குற்றம், இரக்கமற்றதன்மையாகிய இவையிரண்டும் ந = இல்லை. ஸாபேக்ஷத்வாத் = (பிரஹ்மம்) மக்களுக்கு கர்மானுஸாரமாகப்பயனை

யளிக்கின்றது. அவரவர் வினையை விரும்பி இன்பதுன்பமென்னும் பயனைக் கொடுக்கின்றது. ததாஹி தர்ஸயதி = ஹி-ஏனென்றால் அவ்வாறு அருமறைகள் அறைகின்றன. மொழிகின்றன என்பது பொருள்-

சங்கை – ஈஸ்வரன் இந்த ஜகத்திற்குக் காரணமாக ஆக இயலாது. ஏனெனின்? ஏற்றத்தாழ்வு என்னும் குற்றம் வந்து பொருந்தும். ஏற்றத்தாழ்வென்பது யாதென வினவின் உலகில் சிலர் தேவர்களாகப் பிறந்து முற்றிலும் ஆனந்தமாகவும், சிலர் மனிதர் களாகப் பிறந்து இன்பதுன்பங்கள் கலந்து அனுபவிப்பதாகவும், விலங்கு முதலிய ஈன ஜீவர்கள் கேவலதுன்பம் அனுபவிப்பதாகவும் காணக்கிடக்கின்றனர். இஃதல்லாமலும் தேவர்களில் இன்பதுன்பதார தம்யங்களும். மனிதர்களிலும், நாரகீ ஜீவர்களிலும் தாரதம்யங்களுங் காணப்படுகின்றன. இவையெல்லாம் நினைக்கும் பொழுது ஈஸ்வர-னிடத்தில் விருப்பு வெறுப்பு என்னும் குற்றம் வந்து பொருந்து மல்லவா. அவ்வாறு பொருந்தினால் இறைவன் தூயவன், இராகத் வேஷமற்றவன், விமலன், பாவனன். தோஷமின்றியவன். வேண்டுதல் வேண்டாமையிலான், உதாசீனன் என்றெல்லாம் ஆம்னாயங்கள் அறைகின்றன, ஆம்னாயம் — வேதங்கள். அறைதல் — சொல்லுதல். இந்த வாக்கியங்கள் என்னவாகும்? இக்குற்றங்களில் இருந்து இறைவனையகற்ற வேண்டுமானால் ஜகத்க்காரணனாக இறைவனைக் கொள்ளக்கூடாது. இதுவரை பூர்வபக்ஷியின் ஆக்ஷேபம். இனி சமாதானம் வருமாறு — மேற்கூறிய குற்றங்கள் பிரஹ்மத்திற்குப் பொருந்தாது. ஏனெனின்? ஈஸ்வரன் ஜகத்திற்கு மூலமாக இருந்தாலும் (மூலங்காரணம்) உயிர்கள் நுகர்கின்ற இன்பதுன்பங்களுக்கு அவரவர் கள் வினையே காரணமாகும். ''அவரவர் வினையின் அவரவர் வருவாரவர் அவர்வினையளவுக்கே'' யென்பது மகாராஜாத்துறவு. இவ்-வாக்கியமும் ஊகித்துணரத்தக்கது. அவரவர் வினையின் = ஜீவர்கள் தங்கள் கருமத்தின் வாயிலாக, அவரவர் வருவார் - அந்தந்த வினைக்குத் தக்கவாறு காயத்தையெடுப்பர் விடுப்பர், இன்ப துன்பங்களை நுகர்வர் என்பது பொருள். இறைவன் தானாகவே அவனியை ஆக்கவோ அல்லது அழிக்கவோ செய்வதன்று. ''சாபேக்ஷத்வாத்'' உயிர்களின் உரியவினைகளையுற்று நோக்கியே பாரை இறைவன் படைத்துத் துடைக்கின்றான். பார் — உலகம். எனவே மழை போல் பிரஹ்மம் பொதுக்காரணம். பர்ஜன்யவத்தென்பது நியாயம். பர்ஜன்யம் — மழை. நிலத்தில் ஒரு வித்தையிடுகிறோம்.

அதிலிருந்து நல்ல பலனும், தீய பலனும் உண்டாகின்றன. அதற்குப் பல காரணமுள. நிலம், வித்து, முயற்சி, மழை. இவைகளில் பலனுக்கு மழை சாதாரண காரணம், மற்றவைகள் சிறப்புக் காரணம். குறைந்த நிறைந்த பலன்களுக்கு சிறப்புக்காரணங்கள் நிமித்தமாகும். நிமித்தம் — காரணம். சாபேக்ஷத்வம்--தர்மாதர்மம். அல்லது நல்வினை — தீவினை. இது எவ்வாறு தெரிகிறதெனின்? ''ததாஹி தர்ஸயதி'' தர்ஸனஞ்சுருதி. ''ஏஷஹ்ஏவசாதுகர்ம'' . ''புண்யோவை புண்யேன கர்மணு'' இ – ள். இறைவன் எந்த ஜீவனை தனது சொரூபமாக ஆக்க நினைக்கின்ருனே அவனை நல்வினையைச் செய்யச் சொல்லி எமலோக முதலிய துன்பங்களிலிருந்து விடுவிக்கின்ருன். நல்வினையைச் செய்கின்றவர்கள் நன்மையையடைகின்றனர் என்பது மேற்கூறிய இருமறைகளுக்கும் மலர்ந்த பொருள். இறைவன் பொதுவென்பதை — ''நல்லாருக்கும் பொல்லாருக்கும் நடுவுள் நின்ற நடுவே'' வள்ளலார். பொருள் வெளி. இதனுல் இறைவன் ஜகத் காரணமென்பதில் எட்டுணையும் ஐயமின்றென்பது தெளிவு. ''யேயதாமாம் பிரபத்யந்தே தாம்ஸததைவ பஜாம்யஹம்'' ப.கீதை. எந்த மக்கள் எவ்வாறு என்னை வழிபடுகின்ருர்களோ அவர்களுக்கு நான் அவ்வாறு ஆவேன் என்று கார்முகில்வண்ணன் கமலக்கண்ணன் மணிவண்ணன் யதுகுலமன்னன் காண்டிபனுக்குக் கழறுகின்ருர். இதுவும் ஊகிக்கத்தக்கது.

### அவதாரிகை

ஹேபிரிய குழந்தாய்! சிருஷ்டிக்கு முன்னே யொன்ருகிய பிரஹ்மத்தைத் தவிர வேறு பொருளில்லாததால் சத்ரூப பிரஹ்மமே யிருந்தது என்று தனது மைந்தன் சுவேதகேதுக்கு உத்தாலகர் கூறினர். இதனுல் உலகம் உதிப்பதற்கு முன்னர் ஆத்மாவைத் தவிர கரும முதலிய வேறு பொருளில்லை. அவ்வாறிருக்க தருமம் அல்லது கர்மத்தைப் பற்றிக்கொண்டு இறைவன் உலக முழுதையும் ஆக்கினன் என்பது எவ்வாறு பொருந்துமென்பது சங்கை. இதற்கு சமாதானமாக சூத்திரம் வருமாறு.

## சூ. ந கர்ம அவி பாகாதிதிச்சேன் ந அநாதித்வாத் 35

ந. கர்ம, அவிபாகாத், இதி, சேத், ந, அநாதித்வாத் என்று பிரிக்கவும்

இ-ள். அவிபாகாத் = பிரிப்பாரில்லாமையால். சதேவ சோம்ய இதம் அக்ராசீத். இந்த சுருதியினல் வேற்றுமை - வேறுபிரிக்குந் தன்மைஇன்மையால் ஆண்டு கர்மம் இல்லேயென்பதுத் தெளிவு. ஆண்டு - அப்பொழுது. கர்மம் இருந்தாலல்லவா பிரஹ்மம் அதை விரும்பும். எண்ணெய் இருந்தால் தீபம் எரியும் எண்ணெய் இல்லேயானல் தீபம் எரியாது. அதுபோல கர்மம் இல்லாதிருக்க விணையை யெவ்வாறு விரும்பியது, இதிசேன் = என்று சொல்வாயாகில், ந = அப்படிஇல்லே. அநாதித்வாத் = பழமையானதால். அநாதி, பழமை, தொன்மை, தொல்லே, முதுமை யென்பனவெல்லாம் ஒரு பொருளேத் தருகின்றப் பலசொற்கள் அனுதி—எதற்குக் கால நிர்ணயமில்லேயோ அது அனுதி. பீஜாங்குர நியாயம் போல. விதை முந்தியதா மர முந்தியதா என்பது கேள்வி. விடை—விதைக்கு மரங்காரணம், மரத்திற்கு விதைக் காரண-மென்பது பீஜாங்குர நியாய மெனப்படும்.

அநாதி—எந்த வஸ்துவிற்குமுன் ஒருபொருள் இல்லேயோ அது அனுதியென்றும், எதற்குப்பின் ஒன்று இலதோ அது அனந்த-மென்றும் சொல்லப்படும். இந்த இலக்கணம் பிரஹ்மத்திற்குரியவை. சம்சாரம் சாபேக்ஷ அனுதி. ஆகையால் இதுதான் முதல் சிருஷ்டி-யென்று யாராலும் இயம்ப முடியாது. இயம்புதல் சொல்லுதல். சங்கை - கர்மம் இருந்தாலும் தனித்தனியாக இல்லாமையால் விசித் திரமான சிருஷ்டி எவ்வாறு நிகழும், பல்வேறு பறவைகள், பல்வேறு விலங்குகள், பல்வேறு நரர், சுரர், பல்வேறுத் தாவரங்கள் காணப் படுகின்றனவே, யிதற்கெல்லாங் காரணமியாது என்பாயாகில்? சமா-தானம் - இவ்விசித்ரத்திற்கும் (இந்தப் புதுமைக்கும்) அவரவர் விணேயே காரணம். இதை குறள் வாயிலாகவும் குறிக்கலாம். பெரு-மைக்கும் ஏனேச் சிறுமைக்கும் தத்தங்

கருமமே கட்டளேக் கல். - குறள்

இ-ள். பெருமைக்கும் ஏனேச்சிறுமைக்கும் கட்டளேக்கல் தம் தம் கருமமேயாம் என்க.

கருமம் என்றது செயலே. ஏகாரம் தேற்றத்தோடு பிரிநிலேயும் தோற்ற நின்றது. கட்டளேக்கல் என்பது உரைகல்லே. அஃதாவது பொன்னே உரைத்து அதன் தன்மையை அறிதற்கு உரிமையாக அமைந்துள்ள ஒருகருவி. மக்களது நிலேகளேத் தெரிவதற்கு அவர் தம்செயல்களே அமையும் என்று கொள்க. மக்களுடைய பெருமைக்கும்

மற்றைய சிறுமைக்கும் உரைகல்லா இருப்பது அவரவர் செயலே யல்லது வேறு இல்லையென்பதாம். மனிதனை தங்கமாகவும் அவன் செயலை உரைகல்லாகவும் உவமித்துக் கூறியதை ஊகித்துணர்க.

துரியோதனாதிகள் உயர்குலத்தில் பிறந்தும் செயல்களால் இழிந்தவர்களே யானார்கள். பிரஹ்லாதன், விபீஷணன், குகன், சபரி முதலியவர்கள் தாழ்ந்த குலத்தில் பிறந்தாலும் தமது செயல்களால் உயர்ந்தவர்கள் என்பதுத் தெளிவு. இதனால் பல்வேறு படைப்புக்குப் பல்வேறு கர்மங்களே காரணம். பிரஹ்மம் பொதுக்காரணம் என்பது துணிபு. "பெருமையும் சிறுமையுந்தான் தரவருமே" என்பது நறுந் தொகை. இதனாலும் விபின்ன சிருஷ்டியின் குற்றங்கள் (விமலனை) பிரஹ்மத்தைப் பற்றமாட்டா என்பது கருத்து. "யதாகர்ம யதா சுருதம்" கடசுருதி. அறிவை யனுசரித்து கர்மமும் கர்மத்தை யனு-சரித்து பலனும் என்பது சுருதிப் பொருள்." நிர்தோஷம் ஹி சமம் பிரஹ்ம ப.கீதை. இவையெல்லாம் கருத்தில் இருத்தியெண்ணிபேசுக. அத்மாவைப் பழிப்பது தன்னைப் பழிப்பதாகும். எனவே வைஷம்ய நைர்க்ருண்ய தோஷம் பிரஹ்மத்திற்கு இல்லையென்பது இனிது புலனும்.

## அவதாரிகை

சம்ஸாரம் அனாதியென்று எவ்வாறு தெரிகிறது என்று ஆசங்கித்து அதற்குச் சமாதான சூத்திரம் வருமாறு:-

## சூ. உபபத்யதே[3]சாபி உபலப்யதே[4]ச 36

உபபத்யதே, ச, அபி, உப, லப்யதே ச என்று பிரிக்கவும்.

இ—ள் உபபத்யதே = (சம்சாரத்திற்கு அனாதித்வம்) காணப்-படுகின்றது. ச = மேலும். பொருத்தமாகின்றது. உபலப்யதே = அறியப்படுகிறது. எவ்வாறெனின்? "சூரியா சந்தரமசௌ விதாதாயதா பூர்வம் அகல்பயத், திவம்ச பிருதிவிஞ்ச அந்தரிக்ஷம் அதோஸ்வ :" ரி. வேதம் விதாதா பரமாத்மா. யதாபூர்வம் = முந்திய சிருஷ்டியின் பிரகாரம் சூர்யா சந்திரமசௌ = சூரியனையும், சந்திரனையும், திவம்ச = மேலுலகத்தையும், பிருதிவிஞ்ச = பிருதிவியையும், அந்தரிக்ஷம் = மத்ய உலகத்தையும், ஸ்வ: = பொன்னுலகத்தையும் சகாரபலத்தால் நிகில

உலகத்தையும், அகல்பயத் = படைத்தாரென்பது ரிக் வே த த் தி ன் பொருள். இதன் மூலமாக இந்த சிருஷ்டிக்கு முந்திய சி ரு ஷ் டி காரணமென்பது இனிது பு ல னு ம். ''ததாசஸ்மிருதே:'' என்னும் சூத்திரத்தினலும் தெரிய வ ரு கி ற து - ''நரூபமஸ்யேஹ ததோபலப்யதே''ப.கீதை.அஸ்ய = இந்த சம்சாரத்திற்கு(விசாரிக்கும் பொழுது) நரூபம் உபலப்யதே = நூல்களில் இவ்வுலகத்தைப்பற்றி யெவ்வாறு கூறியிருக்கிறதோ அவ்வாறு தெரியக்காணேம். ஏனெனின்? இதற்கு ஆதியுமில்லை யந்தமுமில்லை என்று தனஞ்ஜயனுக்குத் தாமோதரன் சாற்றுகின்ருன்.

சம்சாரம் அனுதியென்று எ வ் வ ா று தெரிகிறதெனின்? அவனிக்கு அனுதித்வம் பொருத்தமே. சம்சாரம் ஆதியாக இருக்குமானல் உலகம் திடீரென்று உதிப்பதால் முக்த புருஷர்களுக்கும் உத்பத்தியுண்டாகக் கூடும். வினைசெய்யாதவனுக்கும் பலன்வந்து விளையும். விளைவு இன்ப துன்பம் வந்து பொருந்துவது. விஷமம் - வேற்றுத்தன்மை. விமலன் — பரமன் காரணமன்று. ஒரு விதமாக இருப்பதால் அவித்தையும் காரணமல்ல, வினையில்லாமல் தேகமில்லை, தேகமில்லாமல் வினையில்லை. ''வினையினல் உடலனந்தம்'' தாயுமானர். பொருள்வெளி. ''வினைப்போகமே யொருதேகங்கண்டாய்'' அடிகளார். பொருள்வெளி. ராகாதி வாசனையினல் அஞ்ஞானம் விஷமத்தன்மையை யடையும். சம்சாரத்திற்கு அ னு தி யெ ா ப் பு க் கொள்ளும் போது பீஜாங்குர நியாயமாக மேற்கூறிய தோஷங்கள் வரமாட்டா. சுருதியில் ''அநேந ஜீவேன ஆத்மனு''... சத்ரூபபரமாத்மா ஜீவவடிவமாக நுழைந்து நெருப்பு, நீர், நிலமுதலியவைகளை யுண்டாக்குகின்றது. இந்த வாக்கியத்தினல் ப டை க் கு ம் பொழுது ஜீவனை தாரணம் பண்ணியதாக சொல்லப்படுகிறது. 'ஜீவோ ஹி பிராணதாரண:' என்று மொழிந்து சம்சாரம் அனுதியென்று தெரிவிக்கிறது சுருதி.

சம்சாரம் அனுதியென்றதால் நித்தியமென்று கொ ள் ள ப்படாது. ஏனெனில் இதற்குரிய அனுதித்வம் ஆபேக்ஷிகம். அதாவது ஞானம் வரும் வரையென்பது க ரு த் து. ''ஏகமேவ அத்வீதியம்'' என்னும் சுருதி இ ர ண் டு இல்லையென்பதை உணர்த்துகின்றது. அநுமானம் — பிரபஞ்சோமித்யா = பிரபஞ்சம் பொய், திருஸ்யத்வாத் = காக்ஷிப்பொருளாக இருப்பதால். கடவத் = குடத்தைப்போல என்பது திருஷ்டாந்தம். இந்த அனுமான மூலமாகவும் இவ்வையம் பொய்யெனப்படுகிறது, வையம் — உலகம்.

பிரபஞ்சோ யதிவித்யேத நிவர்த்தேத ந சம்ஸய : 1
மாயா மாத்ரம் இதம் த்வைதம் அத்வைதம் பரமார்த்தத: மா-காரிகை

பிரபஞ்சம் = உலகம். யதிவித்யேத = ஒருவாறு உண்மையாக இருக்குமானல் நிவர்த்தேத = (தானுக) விலகிப்போகும். நசம்ஸய ; = (இதில்) ஐயமில்லே. விசாரிக்கும் பொழுது இதம் = இந்த த்வைதம் = உலகம். மாயாமாத்திரம் = (கயிற்றரவுபோல) கற்பிதமே. பரமார்த்தத : = எண்ணிப் பார்க்கும்பொழுது அத்வைதம் = பிரஹ்மமே-யாம் என்பது பொருள். இதனுல் சம்சாரம் அனுதியென்ருலும் உண்மையில் இல்லாததேயாம். எனவே வைஷம்ய நைர்க்ருண்ய தோஷம் பிரஹ்மத்திற்கு இல்லையென்பது உறுதி.

## சர்வ தர்ம உபபத்தி யதிகரணம்

### அவதாரிகை

இதுவரை சேதனம் பிரஹ்மம் ஜகத்திற்கு நிமித்த காரணமும் உபாதான காரணமுமென்பதை ஆக்ஷேபித்து பூர்வபக்ஷி எழுப்பிய குற்றத்தை ஆசாரிய சுவாமிகள் பரிஹாரஞ் செய்து தன்மதத்தை நிருபித்தார். இப்பொழுது பரபக்ஷநிராகரணத்தை முடிக்கின்ருர். சூத்திரம் வருமாறு:-

## சூ. சர்வதர்ம உபபத்தேஸ்ச 37

சர்வ, தர்ம, உபபத்தே: ச என்று பிரிக்கவும்.

இ—ள். சர்வதர்ம - எல்லாதருமங்களும், உபபத்தே : = (ச) நிறைந்து இருப்பதால் பிரஹ்மம் புவிக்கு உபாதான நிமித்தமென்னும் காரணம் ஆம்.

சேதனம் பிரஹ்ம ஜகத: காரணம் பிரகிருதிஸ்ச என்பது சங்கர பாஷ்யம். இறைவனுல் படைக்கப்பட்ட இவ்வுலகில் சேதனப்பொருள் என்றும் ஜடப் பொருளென்றும் இருவகைத்து. உயிரெழுத்தும் மெய்-யெழுத்தும் போல. எதுபிறருதவியின்றி யியங்கியும் இயக்கிவிக்கும் தன்மையுடையதோ அது சேதனமெனப்படும். ஈ, எறும்பு, யானே, சேதனம் மனிதன், மாடு முதலியவை. எது தானுக இயங்காமல் பிறரால் இயங்குகின்றதோ அது ஜடமெனப்படும். கல், புல், கட்டை, மண் முதலியன. ''நித்யோ நித்யானும் சேதன அசேதனுனும்'' என்பது

சுருதி. (க.உ.) நித்யோ நித்யானும் நித்ய = நித்யம் பிரஹ்மம். சேதனனும் = சேதனங்களில், சேதனம் = பிரஹ்மம் என்பது பொருள். இதனாலும் பிரஹ்மம் சேதனமென்பது தெளிவு. பிரஹ்மத்தினிடத்தில் சகலதருமங்களும் இருக்கின்றன. சர்வகர்மாசர்வதர்மா சத்யகாம: சத்யசங்கல்ப: என்பது சுருதி. பொருள்வெளி. ''எண் குணத்தான் தாளை வணங்காத்தலை'' குறள். அவை வருமாறு— தலைமை, தூய்மை, தத்வஉணர்வு, அருள், வலி, இன்பம், விமலம்-தெளிவு இவையனைத்தும் சர்வக்ஞத்வம் பிரஹ்மமென்பதைத் தெளிவுறுத்துகின்றன. சர்வக்ஞம் சர்வசக்தி மஹாமாயஞ்ச பிரஹ்ம என்பது சங்கரபாஷ்யம். எல்லாஞானமும், எல்லாவலிமையும், மஹாமாயம்—ஒன்றை மற்றொன்றாக்குந் தன்மையும் (அந்த) பிரஹ்மத்தில் இருக்கின்றன என்பது பாஷ்யத்தின் கருத்து. இதனால் இந்த பிரஹ்மம் உலகிற்குக் காரணம் எவ்வாறாக முடியும் என்று சங்கிக்கக் கூடாதென்றுத் தெரிகிறது. ''இதம் ஔபநிஷதம் தர்சனம். சங்கர பாஷ்யம். உபநிஷத்தில் உரைக்கப்பெற்ற ஞானம் குற்றமற்ற-தென்பது தெற்றெனத் தெளிவாம். ''சர்வம் பிரஹ்மௌபநிஷதம்'' சா.உ. சர்வம் = காணப்படுகின்ற காக்ஷிகள் அனைத்தும். பிரஹ்மௌபநிஷதம் = உபநிஷத்தில் சொல்லப்பட்ட பிரஹ்மமேயாம் என்பது சுருதிப் பொருள். கர்தும் அகர்தும் அந்யதாவாகர்தும் சக்யம் பிரஹ்ம. கர்தும்—செய்யவும், அகர்தும் செய்யாமலிருக்கவும், அந்யதாவாகர்தும் = வேறு விதமாக செய்யவும், பிரஹ்மம் வலிமையுடைது.

மசகஹிகரயி விரிஞ்ச பிரபு அஜஹிமசகதேஹீன!
அஸ விசாரி தஜி சம்சய ராமஹி பஜஹி பிரவீந. (து. ரா.)

இ.ள். பிரபு = பரமேஸ்வரன், கொசுவை விரிஞ்சி (சம) நான்முகனுக்குச் சமானமாகவும். அஜஹி மசகதே ஹீன = பிரஹ்மதேவனை கொசுவுக்கு கீழாகவும், கரஇ = செய்கின்றான். அஸவிசாரி = இவ்வாறு விசாரஞ்செய்து. தஜிசம்சய = ஐயமனைத்தையும் அகறுதி, பிரவீன = அறிவாளி. ராமஹிபஜஹி = ராமனை பிரஹ்மத்தை பஜனைசெய்—நமது சொரூபமென்று இருப்பாயாக என்பது இராமாயணத்தின் கருத்து. இதனால் சகல வல்லமையுடைய பிரஹ்மம் ஜகத்திற்குக் காரணமென்பது துணிபு.

இரண்டாவது அத்யாயத்தின் முதற்பாதமுற்றிற்று.

## இரண்டாவது அத்தியாயத்தின்

### இரண்டாவது பாதம்

### ரசனுநுபபத்தி அதிகரணம்.

முந்திய பாதத்தில் வேதாந்த விரோதமான சிந்தாந்தங்களை ஸ்மிருதிமூலமாகவும் தர்க்கமூலமாகவும் பரிகாரஞ் செய்யப்பட்டது. இப்பொழுது இந்த பாதத்தில் யுக்திவாதங்களால் அன்ய மதம் அகற்றப்படுகின்றது. சூத்ரம் வருமாறு –

## சூ. ரசனு நுபபத்தேஸ்ச நாநுமானம் 1

ரசனு, அநுபபத்தே : ச, ந, அனுமானம் என்று பிரிக்கவும். இ—ள். அனுமானம் = சாங்கியர்கள் கூறும் ஸ்மிருதிகள். அவர்கள் கூறும் பிரதானம் பிரகிருதி. ந = ஜகத்திற்குக் காரணமன்று. ஏனெனின் ? ரசனுனுபபத்தே : = ஜடப்பிரகிருதி யுலகத்தையுண்டு பண்ண இயலாததால்.

உலகம் சுகதுக்க வடிவான மோகத்திலிருந்து உண்டாயிருக்கிறது. ஆகையால் உலக முழுதும் இன்ப துன்ப வடிவமாயிருக்கிறது. மண்ணிலிருந்து உண்டான குடமுதலிய பொருள்களில் மண் ஊடுருவியிருப்பது போல என்பது சாங்கிய மதம். வேதாந்த வாக்கியம் பர மத கண்டனத்திற்கன்று, பின்னை, பிரஹ்மத்தை விளக்குவதற்காக என்பது கருத்து. சிலர்: சாங்கியாதி தர்சனமும் வேதாந்த தர்சனம் போல உண்மையான தர்சனமென்று நினைக்கின்றார்கள். அதைத் துடைப்பதற்காக இரண்டாவது பாதத்தைத் துவக்குகின்றார்.

ரசனுனுபபத்தேஸ்ச—''ஈக்ஷதேர்நாசப்தம்'' ''காமாச்ச நானுமானுபேக்ஷா'' ''ஏதேனஸர்வே வ்யாக்யாதா வ்யாக்யாதா:'' இந்த சூத்திரங்கள் மூலமாக முன்னமே சாங்கியமதக் கண்டனம் செய்யப்பட்டது. ஆனலும் சாங்கியர்கள் வேதாந்த வாக்கியங்களை யெடுத்துத் தங்களுக்குச் சாதகமாகப் பயன்படுத்திக் கொள்கின்றார்கள். ஆகையால் மீண்டும் அவர்கள் மதத்தைப்பற்றி ஆராயப்படுகிறது. அவர்களுடைய உரைகல்பனமூலம் உண்மையானதல்ல என்பது பொருள். எனவே யுக்தி மூலமாக அது நிராகரிக்கப்படுகின்றது .

சாங்கியர் கூறுவதாவது குடமுதலிய பொருள்கள் மண்ணிலிருந்து உண்டாகி மண்ணைக் காரணமாகக் கொண்டிருப்பது போல சுகதுக்கம் மோகவடிவமாதலால் இவைகளே பிரதானமாகி சேதன வடிவப்புருஷனுக்கு இன்பதுன்ப ரூபபோகப் பொருளை அதாவது விசித்திர பிரபஞ்சத்தை யுண்டுபண்ணுகின்றது என்பது அவர்கள் மதம். உயிரற்றிருக்கும் பிரதானம் உயிருள்ள ஜீவர்களுக்கு போகத்தைக் கொடுக்கிறதென்பது விந்தையாக இருக்கிறது. உலகில்—ஐஸ்வரியம், வீடு, மாடி, கூடம், ஆடையணிகலம் முதலியன கலை கற்றிருக்கும் கலைஞரைப்பற்றி யிருக்கின்றன. நல்ல அறிவுடைய சில்பி தேச காலங்களை யனுசரித்து சுகதுக்கபோக சாதனைகளை ஆக்கித் தருகின்றான். = இதுதான் உலகத்திற்கண்ட உண்மை.

பிரதானம் புவிக்குக் காரணமாகாது, ஜடத்வாத், குடம்போல என்பது அநுமானம். பிரதானத்திற்கு சுவதந்த்ர பிரவிருத்திஇல்லை, பராதீனத்வாத் பராதீனம் பரமனுக்கு அடங்கியிருப்பதால்: பரமன் - பிரஹ்மம். ''மயாத்யக்ஷேண பிரகிருதி: சூயதே சசராசரம்'' ப.கீதை. பிரகிருதி: மாயை. சசராசரம் = உலக முழுவதையும். மயாத்யக்ஷேண - பரப்பிரஹ்மமாகிய என்னைப் பற்றிக்கொண்டு சூயதே - படைக்கிறதென்று பகவான் பார்த்தனுக்கு எளிதாகவும் வெளியாகவும் தெளிவாகவும் செப்புகின்றார். இதனாலும் ஜடப்பிரகிருதி ஜகத்திற்குக் காரணமன்றென்பதுத் தெளிவு.

சங்கை—சேதனம் பிரஹ்மம் ஜகத்திற்குக் காரணமாக மாட்டாது. ஏனெனின்? இவ்வுலகம் பல்வேறு விசித்திரங்களாக இருக்கின்றது. சேதனம்—பிரஹ்மம் 'ஏகரசம்' ஒருபடித்தாக உள்ளது. உலகமோ விசித்ரமாகக் காணப்படுகிறது என்பது பூர்வபக்ஷியின் அபிப்ராயம். சமாதானம் சேதனவடிவ சிற்பி ஒருபடித்தாக இருப்பினும் அவனது விபின்ன கலையினால் நானாவிதமான பவனங்கள், விசித்திரமான ஆடை அணிகலங்கள் காண்கின்றோம் உலகத்தில். எனவே ஏகரசமான பிரஹ்மம் பலவிதமான பிரபஞ்சத்தை ஆக்குவதில் என்ன குற்றம் ஒன்றுமில்லை யென்பது உறுதி. இன்பதுன்பவடிவ மோகரூபம் ஜகத்தென்பது பொருந்தாது. ஏனெனின்? இன்பதுன்பம் உள்ளேயிருக்கிறது உலகம் வெளியில் இருக்கிறது. சுகதுக்கம் சாக்ஷிக்கு விஷயம், உலகம் காக்ஷிக்கு விஷயம். ஆகையால் 'ரசனானுபபத்தி' படைக்குந் தன்மை பரமனுக்கே யுரியதென்பது கருத்து.

ஆக்குமாறயனும் முதலாக்கிய வுலகங்
காக்குமாறு செங்கண்ணிறை கருணையங்கடலாம்
வீக்குமாறரனும் .. ம பா. வில்லி சொல்லிய

மெல்லிய உரை. இதனாலும் சேதனம் பிரஹ்மம் ஜகத்காரண மென்பது துணிபு. ஆக்குமாறு - செய்யும்பொருட்டும். காக்குமாறு= காக்கும் பொருட்டும். வீக்குமாறு = அழிக்கும் பொருட்டும். உலகு என்பதை மூன்றேடும் ஒட்டிக் கொள்க.

**அவதாரிகை**

விசித்திரமான விஸ்வ சிருஷ்டி இருக்கட்டும், நிகில உலகத்திலும் சேதனத்தைப் பற்ருமல் தானாக மண்,குடமாகவும், தேர்,குதிரையைப்பற்ருமலும் ஊர்ந்து செல்வதைப் பார்க்கவில்லை. ஆகையால் இதை யுறுதிசெய்யும் பொருட்டு அடுத்த சூத்திரம் வருமாறு—

## சூ. ப்ரவ்ருத்தேஸ்ச 2

இதன் பொருள். ஜடவடிவ பிரதானத்தில் நிகழும் உலக உற்பத்தியென்னும் (பிரவிருத்தி) தொழில் சேதனமின்றி உண்டாகாது ச=ஆகையால் பிரதானம் ஜகத்திற்கு காரணம் ஆகமுடியாதென்பது சூத்திரத்தின் பொருள்.

பிரதானம்—சாம்ய அவஸ்தை. முக்குணங்கள் சமமாகஇருக்கும் நிலை. இந்நிலையில் சிருஷ்டி நிகழாது. ஒருவாறு நிகழுமானால் சிருஷ்டியே நிகழும், ஸ்திதி பிரளயம் நிகழமாட்டா. இதை யொழுங்கு படுத்துவதற்கு நான்காவது சேதனம் வேண்டும். இந்நிலையை சாங்கியர்கள் ஒப்புக் கொள்வதில்லை. ஓட்டுபவன் இல்லையானால் பேருந்து தானாக செல்வதில்லை. மாடு இல்லாதுபோனால் வண்டி நடவாது என்பது உலகமறிந்த விஷயம். பூர்வபக்ஷி—அப்படியானால் கேவல சேதனத்திலும் பிரவிருத்திக் காணவில்லையே, அதற்கு என்ன காரணம் எனின்? சேதன விசிஷ்ட அசேதனத்திலும் அசேதன விசிஷ்ட சேதனத்திலும் பிரவிருத்திக் காணப்படுகிறது. உண்மைதான், ஆனால் இவை யிரண்டிலும் சேதனத்தின் பிரவிருத்தி யென்பது முறையா அல்லது அசேதனத்தின் பிரவிருத்தியென்பது முறையா வென்று சிறிதுச் சிந்திக்கவேண்டும். ஜடத்தில் பிரவிருத்திக் காணப்பட்டாலும் அது சேதனத்திற்கே யுரியவை. தன்னிமித்தமாக எழுகின்றது.

சேதனத்தில் தெரியாதுபோனாலும் அதற்கு அசைக்குந் தன்மையுண்டு. காந்தக்கல்லில் இருக்கும் ஆகர்ஷணசக்தி – இழுக்குந்தன்மை இரும்-பைக்கண்டவிடத்துத் தெரிகிறது. ஜடத்தில் எழும் தொழில் சேதனம் இருந்தால் எழுகின்றது இல்லையேல் எழுவதில்லை. ஆகையால் அது சேதனத்திற்கென்பது சித்தம். சங்கை - சைதன்யமும் உடலைப் பற்றியப் பிறகுதான் தெரிகிறது. உடலைப்பற்ருது போனால் தெரிவதில்லை. ஆகையால் உடல்தான் சேதனம் என்பது சார்வாக்க மதம். எனவே அசேதனத்திற்குத் தான் பிரவிருத்தி யென்பது சாங்க்யமதம். பரி-காரம் · சித்தாந்தி – ஜடத்தில் பிரவிருத்தியில்லை, ஜடத்திற்கில்லை யென்று நாங்கள் கூறவில்லை. பின்னை. ஜடத்தில் காண்கின்ற தொழில்கள் சேதன சம்பந்தத்தினால் என்பது கருத்து. ''பிணமாகும் உடலை நானெண்ணுதே'' பொருள்வெளி. தேகமே ஆத்மாவெனின் உறக்கத்தில் உடல் இருந்தும் ஒன்று மறியாது செயலற்று இருக்கிறது. உணர்வும் ஒளியுமற்றிருக்கின்ற உடலை நானென்பது இருளையொளி-யென்பதோடொக்கும். இதைவிரிக்கில் பெருகுமென்றஞ்சி இங்ஙனம் விடுத்தனம். ரூபாதி விஷயங்களுக்கு சுவயம் பிரவிருத்தியில்லா-திருப்பினும் இந்திரிய முன்னிலையில் தொழில் காணப்படுவது போல சேதனத்தில் சுவயம் செயல்காணுது இருப்பினும் விஷயத்தின் மூலமாகக் காணப்படுவதில் எட்டுணையும் ஐயமின்று. இறைவன் (பிரஹ்மம்) எத்தொழிலுமின்றியிருப்பினும் தனது மாயையால் சர்வக்ஞத்வாதி குணங்களைப்பெற்று தானும்இயங்கி பிறவற்றையும் இயக்கி வைக்கிருன் என்பதில் என்ன சந்தேகம். ஒன்றுமில்லையென்பது உறுதி. அது அசைந்தால் அண்டமும் அசையும். அது அசையாதாகில் அணுவுமசையாது. ''தே ஆத்மா அந்தர்யாமியமிர்த.'' உன்னுடைய ஆத்மா அந்தர்யாமி-நடத்துபவன் அமிர்தவடிவன்-என்பது சுருதிப்-பொருள். மேலே அது அது என்பது பிரஹ்மத்தைக்குறிக்கும். ''ததீனத்வாதர்த்தவத்'' என்னுஞ் சூத்திரத்தால் பிரகிருதியையும், ''கடக்குஞ்சரம் பண்ணியுண்ணின் றெருத்தன் கைபாத கன்னங்கள் மெய்போலியக்கும்'' என்னும் சசிவன்ன போதத்தில் கூறியவாக்-கியத்தால் இவ்வுடம்பையும் நடத்துபவன் இவைகளுக்கு வேறு உண்டென்பதுத்தெளிவு. கடக்குஞ்சரம் = கட்டையால் செய்தயானை. பண்ணி = செய்து. உண்ணின்று = அதற்குள்ளிருந்து. கை, பாதம். = கால் கன்னங்கள் கன்னம். இவைகளை மெய்போல் = உண்மைபோல. இயக்கும் = நடத்தும். ஒருவன். தார்ஷ்டாந்தத்தில் யானை இவ்வுடம்பு. நடத்துபவன் ஆத்மா வென்பது வாக்கியத்தின் பொருள். ஆகையால் எல்லா வலிமையுமுடைய பிரஹ்மத்தில் பிரவிருத்தியுண்டாகிறதே-யன்றி அசேதனவடிவ பிரதானத்தில் இன்றென்பது கருத்து.

### அவதாரிகை

பிரவிருத்திச் சேதன சம்பந்தத்தால் உண்டாகின்றதென்பது முறையன்று, ஏனெனின்? பால் நீர் இவையெல்லாம் ஜடமாக இருந்தும் தானுக செயல்படுகின்றன என்னும் சங்கையைக் கிளப்பி அதை விலக்கும் பொருட்டு சூத்திரம் வருமாறு —:

## சூ. பயோம்பு வச்சேத்தத்ராபி 3

பயோம்பு, வத், சேத், தத்ர, அபி என்று பிரிக்கவும்.

இ. ள். பயோம்புவத் = பயம்—பால், அம்பு = நீர். வத்— போல. (என்பாயாகில்) தத்ராபி = அங்கும். பாலே எவ்வாறு தனது கன்றுக்காக இயல்பாக பசு சுரக்கிறதோ, நீர் எவ்வாறு பிறர் நலத் திற்காக இயல்பாக பாய்கின்றதோ அது போல பிரதானமும் புரு ஷனுக்குப் போகத்தையளிக்கும் பொருட்டுச் சேதனத்தின் உதவியின்றி பிரவிருத்திக்கின்றதென்பதில் என்ன குற்றம் என்பாயாகில், அது சரியன்று. ஏனெனின்? தத்ராபி—பால் சுரக்குமிடத்தும், நீர் செல் லுமிடத்தும் சேதனத்தின் சம்பந்தமுண்டாகிறது. எவ்வாறெனின்? முந்தியப் பிரகரணத்தில் சேதனமில்லாமல் ஜடமும், ஜடமில்லாமல் சேதனமும் பிரவிருத்திக்க மாட்டாவென்று நீயும் நானும் ஒப்புக் கொண்டிருக்கிரேம். ஆகையால் உபயவாதி சம்மதம். ததாச சுருதி:— சுருதிப்பிரமாணம் வருமாறு — பிருஹதாரண்ய உ. பநிஷத்தில் கார்க்கி யாக்ஞவல்க்ய சம்வாதத்தின் போது ஆகாச முதலிய பொருள்கள் எதைப்பற்றிக் கொண்டிருக்கின்றனவென்று கார்க்கீவினவ, அதற்கு விடை — ''யோ அப்சு திஷ்டன் யோ அபோ அந்தரோ ய்மயதி'' பி. உ. 3-7-4) ஹே கார்க்கி! நீ, குறித்தபொருள் அனைத்தும் அக்ஷர வடிவ ஆத்மாவைப்பற்றியிருக்கின்றன என்றும், அது (பிரஹ்மம்) அந்தர்யாமி என்றும், யோ = எந்த ஆத்மா. அப்சு திஷ்டன் = நீரில் இருந்து கொண்டு, அபோ அந்தர் யமயதி - தண்ணீரை நடத்துகின்றதோ என்றும், ''ஏதஸ்ய வா அக்ஷரஸ்ய பிரசாஸனே கார்க்கி பிராச்யோ அன்யா நத்ய : ஸ்யந்தந்தே'' (3-7-4) பி. ச. ஒ. கார்க்கி!ஏதஸ்ய அக்ஷரஸ்ய = இந்த அக்ஷர வடிவ பிரஹ்மத்தினுடைய, பிரசாஸனே = திடமான ஆணையினல், பிராச்யோ = பூர்வ-கிழக்குத் திசையில் உள்ள, ஸ்யந்தமானுநத்ய : = சென்றுகொண்டிருக்கின்ற

நதிகள் அனைத்தும் முறையாக ஓடிக்கொண்டிருக்கின்றன என்பது சுருதிப்பொருள். இந்தச் சுருதிகள் மூலமாக மேற்கூறிய பால் நீர் முதலிய ஜடப்பொருள் அனைத்தும் ஈசனைப்பற்றியேயியங்குகின்றன என்பது உறுதி. அந்யா என்றதால் மற்றைய நதிகளும் கொள்ளக் கிடக்கின்றன. இஃதல்லாமலும் பசு சேதனம். சேதனவடிவ பசு ஸ்நேகத்தால் நிஜகன்றுக்காக உடல் முழுவதிலும் இருக்கும் தனது அன்புமய அமுதத்தை மடுவாயிலாக சுரக்கின்றது. கன்றும் சேதனம் அதுவும் தனது நேசத்தால் அமுதத்தையிழுக்கின்றது. அமுதம் – பால். நீரும் ஒன்றை விரும்பாமல் தானகவே செல்கின்றதென்பது அருத்த மில்லை. பின்னை, பள்ளத்தை விரும்புகின்றது. பள்ளத்தைக் கண்டு வெள்ளம் பாயுமென்பது' பண்டையோர் பழமொழி. அந்த பிரஹ்மத்தைப் பற்றுமல் எதுவும் இயங்கமாட்டாது. '' தஸ்மின்லோகா : சிரிதா : சர்வே தநுநாத்யேதி கஸ்ச்சன'' க.உ.சர்வேலோகா : = எல்லா உலகங்களும் எல்லாவுயிர்களும், தஸ்மின் = அந்த பிரஹ்மத்தை, சிரிதா : = பற்றியிருக்கின்றன தது நாத்யேதி கஸ்ச்சன – அதை ஒருவரும் மீறமுடியாது என்பது பொருள் என்னையன்றியொன்றுமில்லையெனதிடத்தில் யாதுமில்லை என்னும் கசன்வாக்கியத்தாலும் உணர்க. உலக வியவகாரத்தாலும் சாஸ்த்ர திருஷ்டியாலும் ஈஸ்வரன் அந்தர்யாமியாக அனைத்திலும் அணுகியிருக்கிருன் என்பது கருத்து. கடவுள் என்னும் சொல்லுக்குப் பொருள் கலந்தும் கடந்தும் இருப்பது. கட — பகுதி, உள்விகுதி. கடவுள் உண்ணின்று நடத்துபவன் என்பது பொருள்.''அந்த பிரவிஷ்ட ஸாஸ்தா ஜனனும்'' சுருதி : ஜனனும் = (மலர்தலையுலகில் - படர்ந்த ஜகத்தில்) மன்னுயிரனைத்தின் அந்த:பிரவிஷ்ட = உள்ளில் நுழைந்து, சாஸ்தா = சாஸன கர்த்தா இயக்குபவன் என்பது சுருதிப்பொருள்.''மாமுத்தரதயா நிதே; பா. தம். ஏ தயாநிதே! = கருணையங்கடலே! மாம் = என்னை, உத்தர = கரையேற்றுவாயாக என்பது பொருள். சம்சாரம் கிணறு, ஜீவன் வாளி, கர்மம்கயிறு, இன்பதுன்பம் தண்ணீர். கர்மமென்னும் கயிற்றால் ஜீவன் கட்டுண்டிருக்கிருன். கர்மகயிறு கரையிலா இறைவன் கரத்தில் இருக்கிறது. ''ஜினுக்கேஹாத்துமே டோரி'' டோரி = கயிறு. இறைவன் இழுத்தால் எழுவோம் அல்லது விழுவோம். பவக்கடலில் என்பது உருவக அணி. அணி அலங்காரம். இந்த வாக்கியங்கள் மூலமாகவும் பால் நீர் முதலிய உலகில் உள்ள நிகில பொருள்கள் பிரஹ்மத்தால் இயக்கப் பெற்று இயங்குகின்றன என்பது உறுதி.

### அவதாரிகை

பிரதான காரணவாதத்தை இப்பொழுது வேறுவிதமாக விலக்கும் பொருட்டு சூத்திரம் வருமாறு :-

## சூ. வ்யதிரேகானவஸ்த்திதேஸ்சாநபேக்ஷத்வாத் 4

வ்யதிரேக அனவஸ்த்திதே: ச. அநபேக்ஷித்வாத் என்று பிரிக்கவும்.

இ - ள். வ்யதிரேக அன்வஸ்த்திதே: = பிரதானத்திலிருந்து வேறுகர்மம், அல்லது ஈஸ்வரன், காலமுதலிய பொருள்கள் துணையாக இல்லாததால், ச = மேலும். அனபேக்ஷத் வாத் புருஷன் அசங்கமானபடியால் தொழில் செய்வதிலும் செய்யாது இருப்பதிலும் ஒன்றையும் விரும்பாததால் அசேதனம் ஜகத்திற்கு காரணமாகாது என்பது உறுதி.

சாங்கிய மதத்தில் மூன்று குணங்களும் முறையாகவும் சமமாகவும் இருக்கும் நிலைக்கு சாம்ய அவஸ்தையென்று பெயர். இந் நிலையில் படைப்போ, காக்குந்தன்மையோ அல்லது துடைப்போ இல்லை. இக்குணங்கள் ஏற்றத்தாழ்வு அடைகின்ற பொழுது மேற் கூறிய தொழில்கள் நிகழ்கின்றன. யாதொரு உதவியுமில்லாமல் இக்குணங்கள் நிலைமாறுகிறதில்லை. பிரதானம் குணத்தைத்தவிர எதையும் விரும்புகிறதில்லை. புருஷன் அசங்கன் உதாசீனன், ஒன்றுஞ்செய்யாது சும்மா இருப்பவன். இவ்வாறிருக்க பிரதானம் எவ்வாறு புவிக்குக் காரணமாக முடியும் என்பது கருத்து. அசங்கபுருஷனுக்கு சிருஷ்டியை செய்துவைக்கவோ அல்லது தடுக்கவோ இயலாது. ஈஸ்வரனேவெனின், சர்வக்ஞத்வாத் சர்வ சக்தித்வாத், மஹாமாயத்வாச்ச பிரவிருத்தி அபிரவிருத்தி ந விருத்யதே'' என்பது சங்கரபாஷ்யம். ஈஸ்வரன் எல்லா விதமான வலிமையுடையவன். படைக்கவோ துடைக்கவோ பழுதரநடத்தவோ இயல்பினன். சுவயம் சேதனவடிவினன். நொடிப்பொழுதில் உலகையாக்கவும், காக்கவும், அழிக்கவும் பரமனால் முடியும். இதைக்குறித்துதான் ''எல்லாம் சிவன்செயலே'' யென்றார் பட்டிணத்து சுவாமிகள் பொருள்வெளி. என்செயலாவது யாதொன்றுமில்லை யினித்தெய்வமே யென்றுங்கூறினர். இதனால் உயிரற்றப்பிரதானம் உலகிற்கு உரிய காரணமாகா தென்பது தெற்றெனத் தெரிகின்றது.

### அவதாரிகை

இருந்த போதிலும் புல்லு, தண்ணீர், சிறிய இதழ்கள் முதலிய பொருள்கள், எதையும் விரும்பாமல் இயல்பாக வளர்கின்றன, செல் கின்றன, என்ற சங்கைக்குப்பதிலாக சூத்திரம் வருமாறு —

## ஸூ. அன்யத்ராபாவாச்ச ந த்ருணாதிவத் 5

அன்யத்ர, அபாவாத், ச, ந. திருணுதி, வத் என்று பிரிக்கவும்.

இ - ள். திருணுதி வத் = புல் முதலியவைகளுக்குச் சமானமாக (பிரதானம்) இயல்பாகவே பரிணமம் ஆகமுடியாது. ஏனெனின்? அன்யத்ர அபாவாத் = புல் பால்ரூபமாக ஆவதில்லை. பல்வேறு நோய்களில் ஒரு நோய் ஜன்னி. இந்தப்பிணி வந்தவனுக்கு, முன்னே யென்ன பேசினேம், இப்போது என்ன பேசுகிறேம் என்னும் நினைப்பு இருப்பதில்லை. பன்முறை பதில் உரைத்தும் பிடிவாதமான பிரதான வாதி மீண்டும் மீண்டும் ''கிளந்த வாக்கிளத்தல் கிளியினது இயல் பே'' யென்னும் தன்மைபோல மொழிந்ததையே மொழிகின்ருன். புல், பூண்டு, இலை, புனல் இவையெல்லாம் ஒருகாரணத்தையும் விரும்பாமல் தானுகவே காரிய ரூபமாகின்றன என்பது சாங்கியர்களுடைய துருக்தி. தூஷிதஉக்தி. உக்தி=சொல்லுதல். மேலே சொன்ன திருஷ்டாந்தம் போல பிரதானமும் ஒன்றையும் விரும்பாமல் மகதாதி காரியவடிவமாக ஆகின்றதென்பது அவர்கள் அபிமதம்-விருப்பம். 'எடுப்பார்கைப்பிள்ளை' என்பது பழமொழி. அதுபோல் புல் முதலிய பொருள்கள் யாதொன் றையும் விரும்பாமல் பால் முதலிய வடிவங்களாகின்றன என்று எவ்வாறு தெரிகிறது? வேறு காரணந் தெரியப்படாததால் என்பது பூ. பக்ஷி மதம். ஆகையால் புல்லைப்போல பிரதானமும் இயல்பாகவே செயல்படுகின்றன என்கின்ருன்.

சித்தாந்தி- புல்முதலிய பொருள்களுக்கு இயல்பாகப் பிரவிருத்தி யில்லை. நிமித்த காரணங்கள் காணப்படுகின்றன. தண்ணீர் பள்ளத் தையும், புல்லு பசுமாட்டையும் காரணமாகக் கொண்டுதான் செல்லு தலும், பால் சுரப்பது தெரிய வருகிறது. 'அன்யத்ர அபாவாத், தானுக உண்டானல் தண்ணீர் மேட்டிலேயும், புல் காளைமாட்டிலும் காணப்படவேண்டும். அவ்வாறுக் காணேம். சில காரியம் மனிதனுல் முடியும், சிலகாரியம் தெய்வத்தால் முடியும்.

உள்ளியர் தெள்ளியர் ஆயினும் ஊழ்வினை
மெள்ள நுழைந்திடும். ஆன்றோர் வாக்கு.

உள்ளுதல் – எண்ணுதல். எண்ணுகின்ற மக்கள் தெள்ளியராயினும் = தெளிந்த மதியுடையராயினும். எவ்வளவு அறிவுடையராயிருப்பினும். ஊழ்வினை ஊழால் விளையும்வினை. நல்வினையல்லது தீவினை யென்பது கருத்து. மெள்ள = மெதுவாக நுழைந்திடும். அவனை யறியாமல் அவனுள்ளே நுழைந்து அவனை ஆட்டும் என்பதுக்குறிப்பு. இதனாலும் பிரகிருதி சுவதந்த்ரமன்றென்பதுத் தெளிவு. புருஷன் பசுமையானப் புல்லை யெவ்வளவு அதிகமாகப் பசுவுக்குப் போடுகிறானோ அவ்வளவுக்கு அதிகப்பாலைப் பெறுகிறான். தெய்வ சங்கல்பத்தாலும் நிறைவேறுகின்றது. ''மயாத்யக்ஷேணபிரகிருதி: சூயதே சசராசரம்'' என்பது ப.கீதை. மயா = என்னால். அத்யக்ஷேண = ஏவப்பட்டு. சசராசரம் = உயிருள்ள பொருளும், உயிரில் பொருளுமாகிய இவ்வுலகனைத்தையும். பிரகிருதி: = மாயை. சூயதே = உண்டுபண்ணுகின்றது என்று வில்வீரனுக்குச் சொல்வீரன் சொல்கின்றான். வில்வீரன் = அர்ஜுனன். சொல் வீரன் = அச்சுதன். இதனாலும் பிரகிருதிக்கு இயக்குந் தன்மையில்லை யென்பதுத் திண்ணம். மெய்யெழுத்தைப் போன்றது பிரகிருதி. உயிரெழுத்தைப் போன்றது ஆத்மா. உயிருமெய்யும் சேர்ந்தால் தான் இயங்கும். அதுபோல் ஆத்மாவைப் பற்றிதான் பிரதானம் இயங்கமுடியும் சுவயமாக இயங்க முடியாது. ''பிராணே சரீரம் பிரதிஷ்ட்டிதம், பிராண: சரீரே பிரதிஷ்ட்டித :'' (தை. உ.) உயிரில் உடம்பு நிலைத்திருக்கிறது. உடம்பில் உயிர் நிலைத்திருக்கிறதென்பது பொருள். இவையெல்லாம் சேதனத்தைப்பற்றியே யெல்லாப் பொருள்களும் இயங்குகின்றன என்பதையுணர்த்துகின்றன. இதனால் சேதனகாரணவாதம் தெளிவாயிற்று.

### அவதாரிகை

பிரகிருதியினிடத்தில் இயல்பாக தொழில் உண்டாகமாட்டாது என்று உறுதிப்படுத்தப்பட்டது. ஒருவாறு இயல்பாக பிரதானத்தில் தொழில் உண்டாகக் கூடுமென்று ஒப்புக்கொண்டாலும் பிரயோஜனம் ஒன்றுமில்லை யென்பதை யுணர்த்தும் பொருட்டு சூத்திரம் வருமாறு:-

## சூ. அப்யுபகமேஅபி அர்த்தாபாவாத் 6

அபி. உபகமே, அபி, அர்த்த, அபாவாத் என்று பிரிக்கவும். இ.ள். அப்யுபகமேபி = பிரதானத்திற்கு சுவயமாக தொழிலை யொப்புக் கொண்ட போதிலும், அர்த்தாபாவாத் பயனற்றுப் போகின்றது. முன்சொன்னக் குற்றம் ஒழியாமல் இருக்கிறது. யாதொன்றையும் விரும்பாமல் பிரதானம் படைப்புத் தொழிலைச் செய்கின்றதென்பது பூர்வபக்ஷம். அதை வேதாந்தபக்ஷம் நிராகரித்து விட்டது. நிராகரித்தல்—இல்லையென்று தள்ளுதல். பூர்வபக்ஷியிரங்கலுக்குத் தாமுமிரங்கி இயல்பாகவே பிரதானத்திற்குத் தொழில் உண்டு என்று (வேதாந்திகள்) ஒப்புக் கொண்டாலும் குற்றமிருக்கத்தான் செய்கிறது. எவ்வாறெனின்? 'அர்த்தாபாவாத்' பயன் இன்மையால் என்பதுகருத்து. பிரதானம் இயல்பாகத் தொழில் செய்கின்றது, ஆனால் ஒன்றையும் விரும்புவதில்லை யென்பாயாகில், அது பொருந்தாது, ஏனெனின், ஓசையில்லாமல் தோசையில்லை யென்னும் நியாயம்போல ஒன்றையும் விரும்பாத பிரகிருதி பிரயோஜனத்தையும் விரும்பாதுதானே. அவ்வாறில்லையானால் முன்னுக்குப்பின்முரணுகும். பிரதானம், புருஷனுக்குப் போக அபவர்க்கங்களை யளிப்பதற்கு பிரவிருத்திக்கின்றது என்ற பிரதிக்ஞை சூளுரைபங்கமாகும். போகம்—இன்பதுன்பம், அபவர்க்கம்—மோக்ஷம். சூளுரை—உறுதிமொழி.

பிரதானம் அன்யத்தை விரும்புவதில்லை. ஆனால் பயனை விரும்புகின்றது என்பாயாகில், அதுவும் பொருந்தாது. ஏனெனின், பிரயோஜனத்தைப்பற்றிச் சிறிதுச் சிந்திக்க வேணும். சிந்தனை செய்கின்ற மனிதனையுலகம் வந்திக்கின்றது, சிந்தனை செய்யாத மனிதனையுலகம் நிந்திக்கின்றது. சிந்தித்து செயல்படுவதென்பது முறை. பிரவிருத்திக்குப் பயன்போகமா அல்லது மோக்ஷமா? அல்லது இரண்டுமா? என்பதுகேள்வி. போகமென்பாயாகில் சுகதுக்கங்களையடைய வேண்டும் அல்லது அகல வேண்டுமென்ற எண்ணமற்ற உதாசீன (விருப்பு வெறுப்பு) புருஷனுக்குப் பொருந்தாது. மோக்ஷத்திற்காக பிரவிருத்தி யென்பாயாகில் அதுவும் பொருந்தாது. எதனாலோ வெனின்? பிரவிருத்திக்கு முன்னமே மோக்ஷம் நிலைத்திருப்பதால் பிரவிருத்தி நிஷ்பலமாகும்—பயனற்றுப் போமென்பது பொருள். விஷயங்களும் அடைய மாட்டா. சந்தோஷத்தின் நிமித்தமாகத் தொழில் உண்டாகக் கூடுமெனின்; ஜடத்தில் உவகையுண்டாகாமையால் அதுவும் பொருந்தாது. உதாசீனமாக இருப்பதால் புருஷனுக்கும் உவகை யுண்டாகாது. உவகை-சந்தோஷம். புருஷனிடத்தில் திருக்கு சக்தியும்

(பார்க்குங் வலிமை)பிரதானத்தில் சர்க்கசக்தியும்(படைக்கும்சக்தி)இருப்பதால். தொழில் இல்லையானல் அவை இரண்டும் வியர்த்தமாகுமே, ஆகையால் பிரவிருத்தியை யொப்புக் கொள்ளவேண்டு மென்பாயாகில், அதுவும் பொருந்தாது. ஏனெனின் இவையிரண்டு சக்திகளும் நீங்காத-தால் சம்சாரமும் நீங்காது. ஆகையால் மீண்டும் மோக்ஷாபாவ பிரசங்கம் வந்து நேரும். எனவே புருஷனுக்கு மோக்ஷத்தையளிப்பதற்காக பிரதானத்தில் தொழில் உண்டாகிறதென்பது பொருத்தமல்ல. பொருத்தமற்றதைப் புகல்வது புன்மையேயாம். புன்மை இழிவு. 'அர்த்தாபாவாத்' — அர்த்தம் - பிரயோஜனம் முத்தியென்பது பொருள். அபாவம் - இன்மை. இல்லையென்பது கருத்து. ஒள்ளிய-முக்தித் தெள்ளிய அறிவால் வரும் என்பது வேதாந்தத்தின் விமல சித்தாந்தம், ஞானமிலாது கதி கூடுமோ வென்று நவின்ருர் நாவலர் பலர். நாவலர் — ஞானிகள் என்பது பொருள். ஆகையால் ஞானவடிவ ஆன்மாவே ஞாலத்திற்குக் காரணமென்பது நவிலப்பெற்றது. ஞாலம் = உலகம். நவிலுதல் - நன்குமொழிதல். பிரதானம் இயல்பாக செயல்-படுவதென்பதும் பிணம் தானுக ஓடுவதென்பதும் ஒக்கும். உடல் முழுதும் பிரகிருதியின் காரியம், உணர்வு முழுவதும் பிரஹ்மத்தின் சொரூபம். உடலில் உள்ளசெயல்கள் அனைத்தும் உயிரின்செயல் ஆகும். உயிர் ஆன்மா. இதனுல் பிரதானத்திற்கு சொந்தசெயல் இல்லையென்பது இனிதுபுலனும்.

### அவதாரிகை

பிரதானம் தானுகத் தொழில்செய்ய இயலாது போனுலும் புருஷன் உதவியைக்கொண்டு செயல்படக் கூடாதோவென்ற ஐயத்தை அகற்றும் பொருட்டு சூத்திரம் வருமாறு:-

## ஸூ. புருஷாஸ்ம வத்திசேத்ததாபி 7

புருஷ, அஸ்ம, வத், இதி, சேத், ததா, அபி என்று பிரிக்கவும். ப-ரை. புருஷ அஸ்மவத் = புருஷவத், அஸ்மவத் என்று வேறுபடுத்திப் பொருள் கொள்ளவும். திருக்சக்தியற்றவன் குருடன். பிரவிருத்தி சக்தியற்றவன் நொண்டி. இருவரும் ஒன்றுசேர்ந்தால் தொழில் நிகழுந்தானே. அஸ்மவத் = காந்தக்கல் இரும்போடு சேருங்கால் இயங்குந்தானே. ததாபி = அவ்வாறிருந்தாலும் (பிரகிருதி) வாதத்தில் குற்றம் குற்றமே.

கண்ணிழந்தவன் ஒருவன், கால்இழந்தவன் மற்றொருவன். ஒருவனால் பார்க்கமுடியாது, மற்றொருவனால் நடக்க இயலாது. குருடனுக்கு அந்தகனென்றும், நொண்டிக்கு பங்குவென்றும் பெயர். இருவரும் ஒரு இடத்திற்குச் செல்ல விரும்பினார்கள். எவ்வாறு செல்வதென்றுச் சிந்தித்து ஒரு முடிவுக்கு வந்தார்கள். குருடன் நொண்டியைப் பார்த்து, " அப்பா! என் தோளின்மேல் ஏறியிருந்து எனக்கு வழிகாட்டு, நான் உன்னைத் தூக்கிச் செல்கிறேன்," என்று சொன்னான். அவ்வாறு இவனும் குருடன் தோள் மேலேறி மார்க்கத்தைக் காண்பிக்க, குருடன் தூக்கிச் செல்ல, இவ்வாறு இருவரும் தமக்குரிய இடத்திற்குச் சென்றார்கள். இதை அந்த பங்கு நியாயமென்று சொல்வார்கள். அதுபோல புருஷனும் பிரகிருதியும் கூடி உலக உற்பத்தி யென்னும் தொழிலையேன் செய்யக் கூடாதென்று பூர்வ பட்சிப்புலம்ப, சித்தாந்தி - பொறு. பொறு. நீ புலம்பியது முறையன்று.

திருக்சக்தி பார்க்குந்தன்மை. சர்க சக்தி படைக்கும் வலிமை. வலிமையென்றாலும் சக்தியென்றாலும் ஒன்றே. குருடனைப் பற்றி நொண்டியும் நொண்டியைப்பற்றிக் குருடனும் இருவரும் ஒன்றுபட்டு சென்றாலும், தார்ஷ்டாந்தத்தில் குற்றங்குறையவில்லை. எவ்வாறெனின், உன்மதத்தில் பிரகிருதிக்கு இயல்பாகத் தொழிலையொப்புக் கொன்டிருக்கிறது, புருஷனை உதாசீனனாக எத்தொழிலில் இருந்தும் விலக்கப் பெற்றிருக்கிறது. அப்படியிருக்க மேலே சாற்றிய எடுத்துக்காட்டு எவ்வாறு இயையும்? இயையும் — பொருந்தும்? பொருந்தாதென்பது பொருள். நொண்டியும் குருடனை வாக்கு மூலமாகச் சொல்லிப் பேசி நடப்பிக்கின்றான், புருஷன் செயல் அற்றிருப்பதால் இத் தொழில் நிகழ்வதற்குக் காரணமில்லை. பொருந்தும் குணமும் புகலுங் கிரியையுமில்லாததால் புருஷன் எந்த வினைக்கும் உதவான்.

காந்தக்கல்லைப்பற்றிச் சிறிதுச் சிந்திப்போம் — காந்தக்கல் முன்னிலையில் இரும்பு இயங்குகின்றது. முன்னிலை சந்நிதி. இழுக்குந்தன்மைக் காந்தக் கல்லுக்குண்டு, இயங்குந்தன்மை இரும்புக்குண்டு. இதற்குக் காரணம் சந்நிதி விசேஷம். இதுபோல புருஷ சந்நிதியில் பிரதானம் இயங்குவது முறையன்று. ஏனெனின், சந்நிதி நித்யமாக இருப்பதால் பிரவிருத்தியும் நித்தியமாகும். ஸ்திதியும் இல்யமும் உண்டாகமாட்டா. அதற்காக சந்நிதி அநித்தியமென்

ருலோ, தொழில் நிகழாது. இவ்வாறு "உபயத: பாசாரஜ்ஜு:" என்னும் குற்றம் வரும். உபயத: = இருமருங்கும், பாசாரஜ்ஜு: = கட்டும் கயிறு. எங்கு திரும்பினாலும் கழுத்தில் கயிறு விழும் என்பது கருத்து. இதனால் புருஷ அஸ்ம - கல் திருஷ்டாந்தம் பொருத்தமன்று. இஃதல்லாமலும் பிரகிருதி ஜடம், புருஷனோ உதாசீனன். இவ்விருவரையும் ஒன்று சேர்ப்பதற்கு மூன்றாமவன் இல்லாததால் புருஷப் பிரகிருதி இணைந்து செயல்படுகின்றன என்பது முற்றிலும் தவறாகும். பூர்வபக்ஷி – அப்படியானால் வேதாந்தத்திலும் ஆத்மா அசங்கன், உதாசீனன், நிஷ்கிரியன் என்றெல்லாங் கூறியிருக்கிறதே அது எவ்வாறு பொருந்துமெனின் ?

சித்தாந்தி – "வேதாந்தே அஸ்தி விசேஷ:" வேதாந்த மதத்தில் அதிசயமிருக்கின்றது. என்னை, ஆத்மா சொரூபத்தில் அசங்கம், உதாசீனமாக இருந்தாலும் நிஜமாயையால் இயங்கவும் இயக்கவும் வலிமையுடையது. "இந்த்ரோ மாயாபி: புருரூப ஈயதே" சுருதி. இந்த்ரோ இந்திரன் - பரமேஸ்வரன். மாயாபி: (தனது) மஹிமைவாய்ந்த சக்தியால். புரு ரூப = வெகு வடிவத்தை. ஈயதே = எடுக்கின்றான் என்பது சுருதிப் பொருள். "பிரகிருதிம் ஸ்வாமதிஷ்டாய சம்பவாமி ஆத்ம மாயயா" என்பது ப.கீதை. தன்னுடைய மாயையை விரும்பிக் கொண்டு, நிஜ வலிமையால் தேகவானைப் போல பல வடிவத்தை அடைகிறேன் என்று அச்சுதன் சொல்கின்றான். இதனாலும் பிரகிருதிக்கு பிரவிருத்திக்கூடாதென்பதுத் தெளிவு.

### அவதாரிகை

இதனாலும் பிரதானம் ஜகத்திற்கு நிதானம்-காரணமாகாது. எதனாலோவெனின் ? சாங்கியர்களின் பிரதானம் (சமநிலை) முக்குணங்களின் ஒருபடித்தான தன்மை. இதை சாம்யாவஸ்தை யென்பர் சாங்கியர்கள். இந்நிலையில் உலகம் உதித்தலும், நிலைநிறுத்தலும், நிலைகுலைதலுமாகா. உதித்தல் - உண்டாதல். நிலைநிறுத்துதல் - நிலைபெறச்செய்தல். நிலைகுலைதல் - அழிதல். இதை உறுதி செய்வதற்காக அடுத்த சூத்திரம் வருமாறு: –

## ஸூ. அங்கித் வாநுப பத்தேஸ்ச 8

அங்கித்வ, அனுபபத்தே, ச, என்று பிரிக்கவும். ப.ரை. அங்க, அங்கி பாவத்திற்கு. அனுபபத்தி: பொருத்த மற்றத் தன்மையிருப்பதால். ச. மேலும்.

''குண: சத்வம்ரஜஸ்தமா:'' என்பது அமரக்கோஸம், அழியாத நிகண்டு என்பதுக்குறிப்பு. முக்குணங்களும் சமநிலை சாம்யமெனப்படும் அங்கம்-அமுக்யம். முக்கியமற்றது என்பது சிறப்பு. அங்கி = முக்கியம். பிரதானம் என்பது பொருள். சாம்ய அவஸ்தையில் எந்த குணத்திற்கும் முதன்மைஇல்லை, முக்குணங்களும் தங்களுடைய உயர்வை யுதறித் தள்ளிவிட்டு நடுநிலைமையில் இருக்கின்றன. எக். குணங்களிலும் சிறப்பில்லாததால் எத்தொழிலும் நிகழாவாம். தொழில் — கிருத்தியம், பஞ்சக்கிருத்தியம் என்பது. பொருள் அவை — சிருஷ்டி, ஸ்திதி, லயம், திரோபாவம், அனுக்கிரகம். இதை முறையாக – படைப்பு, காத்தல், அழித்தல், மறைத்தல் தெளிவுபடுத்தல்.

மேற்கூறிய குணங்கள் ஒவ்வொன்றும் தன்சொரூபத்தை இழந்து விடுவோமேயென்று அஞ்சி அங்கமாகிறதில்லை. அங்கமாகாததால் அங்கியும் ஆகிறதில்லை. ஆகையால் அங்காங்கி நிலைக்கு 'அனுபபத்தி' பொருத்தம் அற்றத்தன்மை. இந்நிலை யிவர்களுக்கு. இவர்கள் என்பது சாங்கியர்கள். ஒருகுணம் அதிகமாயிருந்து இருகுணம் அடங்கி இருக்கும் போது தொழில்கள் நடக்கும். அவ்வாறு இன்மையால் தொழில்கள் நடவாது. இந்நிலையில் பிரகிருதிபுவிக்குக் காரணம் என்பது புதுமையாக இருக்கிறது. இக்குணங்களை இயக்குவதற்கோ, ஏவுவதற்கோ நான்காம் பொருளை யவர்கள் நாடுவதில்லை. இதனால் சிருஷ்டியாதி நிகழ்ச்சிகள் நிகழா. நிகழ்வதென்பது ஊமன் கேட்டலும், கண்ணில்லாதவன் காண்டலும் கடுக்கும் ஊமன் = செவிடன். கேட்டலும் — கேள்பது. காண்டல் — காண்பது — கடுக்கும் — ஒக்கும். இது வில்லி சொல்லிய மெல்லிய சொல்.

மனிதஇருதயத்தில் குழப்பம் வரும்போது கிளர்ச்சியும், எழுச்சியும், மகிழ்ச்சியும் உண்டாகின்றன. அதுபோல குணங்களில் (க்ஷோபம்) குழப்பங்கள் உண்டாகின்ற பொழுது உலகங்கள் உதிக்கின்றன. காற்றால் கடல் கலங்குகின்ற போது அதினின்றும் கல்லோலங்கள் எழுகின்றன. கல்லோலங்கள் — குமிழிகள். அதுபோல குணங்களில் விஷமம் (மாறுபாடு) உண்டாகிறபோது விரிவான ஜகங்கள் வெளிப்படுகின்றன. ''நிமித்தம் வினு நிமித்தாந்தரம் அனுப

பத்தே:'' சங்கரபாஷ்யம். நிமித்தம், நிதானம், காரணம் இவை யெல்லாம் ஒருபொருளைத் தருகின்ற பலசொற்கள். நிமித்தாந்தரம்= காரியம். அனுபபத்தி: பொருந்தாத நிலை. கண்கலங்கினால் நீர் எழுகின்றது, கர்ப்பம் கலங்கினால் குழந்தையுண்டாகிறது, அதுபோல் குணங் கலங்கினால் குவலயம் உண்டாகிறது. குவலயம்—உலகம். கு - பிருதிவி, வலயம் - வட்டம். வட்ட வடிவமாயிருப்பதால் உலகம் குவலயமென்று உரைக்கப்பெற்றது. கு என்பது பரமாத்மா. அதி- லிருந்துக் குதித்து வெளியில் வந்து மீண்டும் அதில் லயமாவதால் பூமி குவலயம் எனப்படும். மனமயக்கம் பிடிக்கில் இல்லாவத்துவும் தோன்றிடும். அது போல் குணவேறுபாடால் இனவேறுபாடு வரும். மூன்று குணங்களும் (சாம்ய) பொதுவாக இருக்கும் பொழுது மகதாதி உலகம் வருவதற்குக் காரணமில்லை. தரணியிலிருந்து தாமரை வரும், தடந்த ஆகாயத்தில் இருந்து தாமரை வர இயலாதல்லவா, தரணி— தரை. தடம் - விசாலம். விஷமத்தில் வியதாதி உலகம் வரும், சமத்தில் வாராது. வியத்—வான். ஆதிபதத்தால் அவனி முழுதையும் கொள்ளவும். அவனி—உலகம், ஆகையால் பிரதானம் புவிக்குக் காரணமாகாதென்பது கருத்து.

### அவதாரிகை

பூர்வபக்ஷி—வேறு விதமான அனுமானம் செய்யப் போகிறோம். அதனால் முன்னே மொழிந்தக் குற்றங்கள் வரமாட்டா என்பதற்குப் பதில் சூத்திரம் வருமாறு—

## ஸூ. அன்யதா[2]நுமிதௌ ச க்ஞசக்திவியோகாத்[3] 9

அன்யதா. அநுமிதௌ, ச, க்ஞ, சக்தி, வியோகாத் என்று பிரிக்கவும்.

ப. ரை. அன்யதா வேறுவிதமான. அனுமிதௌ = (நாங்- கள்) விரும்பாத அனுமானத்தைச் செய்யமாட்டோம். அதனால் முன் மொழிந்த தோஷங்கள் வரமாட்டா. இது வரை பூர்வபக்ஷம். சித்தாந்தி -- உன்னுடைய யுக்தி சரியன்று. காரணம் யாது என்பா- யாகில், க்ஞ சக்தி வியோகாத் - முக்குணங்களில் ஞானசக்தியின்மை யால், தானாக சாம்யாவஸ்த்தையில் செயல்கள் நிகழ்வதற்கிடமில்லை. பூர்வபக்ஷி. நாங்கள் முக்குணங்களை எதையும் விரும்பாதென்றும், சிலையைப்போன்று கூடஸ்தமென்றும் ஒப்புக் கொள்வதில்லை அவ-

வாறு ஒப்புக் கொள்வதில் ஒருபிரமாணமும் இல்லை காரியத்திற் கனுகூலமான குணங்களை நாங்கள் ஏற்றுக்கொள்வோமேயன்றி பிரதி கூல குணங்களையேற்பதில்லை. எப்படியெப்படி காரியத்திற்கு உத் பத்தியுண்டாகிறதோ அப்படியப்படியே குணங்களுக்கு சுபாவமென்று கூறுவோமென்பது பூர்வபக்ஷியின் மதம். சித்தாந்தி அது பொருந் தாது. ஏனெனின்? நீ, சொன்ன முறைப்படியிருந்தாலும் பிரதா னத்தில் ஞானசக்தியின்மையால் இந்தப்பரந்த ஜகத்தைப் படைக்க இயலாது.

தோல்வியுற்ற பூர்வபக்ஷி வாதத்தில் வெற்றி பெற ஆசை யால் மீண்டும் மீண்டும் சங்கிக்கிறான். ஆசை யாரை விட்டது. பீஷ்மர் இறந்தார், த்ரோணர் பட்டொழிந்தார், கர்ணன் காலன் வலையில் மடிந்தான். இவ்வாறிருக்க துரியோதனன் வெற்றியை விரும்பி சல்லியன் வெற்றியை வாங்கித் தருவான் என்றான். அது வருமாறு —

ஹதே பீஷ்மே ஹதேத்ரோணே கர்ணேச்ச திரிதிவம் கதே
ஆசா பலவதீ ராஜன்! சல்யோ ஜேஷ்யதி பாண்டவான் ம.பா.

அதுபோல சாங்கிய வாதிகளும் தன்குற்றத்தை யுணராமல் நான் விழுந்தாலும் என் மீசையில் மண் ஒட்டவில்லையென்னும் நியாயத்திற்கிணங்க அறிவில்லாத பிரதானத்தை அகிலஉலகிற்குக் காரணமாகக் கூறுகின்றார்கள். சாங்கிய மதத்தில் உதாசீனமும், பிர விருத்தியும் உண்மை இல்லாததால் அசமஞ்சஸம். விருத்தமென்பது கருத்து.

பூர்வபக்ஷி — வேதாந்ததர்சனமும் அசங்கதம் — பொருத்தமற்றது. ஏனெனின்? வேதாந்தத்தில் தப்யதாபக பாவம் வர்ணிக்கப் பட்டிருக் கிறது. அவைவருமாறு = தப்ய — துன்பத்தை நுகரும் ஜீவன், தாபகம் — சம்சாரம். இவையிரண்டும் ஆத்மாவிற்கு, விசேஷமாக வேதாந்தத்தில் விளம்பப் பட்டிருக்கிறது. தப்ய தாபக பாவமிரண்டும் ஒரேயாத்மா விற்கு விசேஷமாய் இருப்பதால் அவைகளில் இருந்து ஆத்மா விடுபட இயலாது. இதனால் ஆத்ம ஞானத்தைக்கூறும் ஞானநூல்கள் பயனற்றுப்போகும் என்பது பூர்வபக்ஷிமதம். மேலும் அவர்கள்கூறும் உபாயம்—உஷ்ணமும் ஒளியும் நிறைந்த தீபம் அவைகளிலிருந்து விலகமுடியாதது போல ஆத்மாவும் தப்யதாபகத்திலிருந்து விலக இயலாதென்பது அவர்கள் அறிவிக்கும் கருத்து.

சித்தாந்தி – உண்மையில் ஆத்மாவொன்ருக இருப்பதால் தப்ய தாபகபாவம் கற்பிதம். இவையிரண்டும் அவித்தையால் எழுந்தவை. இது வியவகாரதசை. அறிவால்வருவது உண்மைநிலை அறியாமையால் வருவது வியவகாரநிலை· ஒன்றுகற்பிதம், மற்ருென்று வாஸ்தவம். பந்தமும் தப்யதாபகபாவ மூலமாக வரவில்லை. ஆகையால் அவைகள் நீங்காததால் மோக்ஷம் உண்டாகமாட்டாதென்பது பொருத்தமன்று ''அவித்யாகிருதோபந்தோ வித்யயா நிவர்த்ததே'' சங்கர பாஷ்யம், அவித்தை – அஞ்ஞானம். ஆத்மாவைத் தெரியாதத் தன்மை. இதனுல் பந்தம்—துன்பம் வந்தது. வித்யயா மெய்ஞ் ஞானத்தால் நிவர்த்ததே — நீங்குகின்றது என்பது பொருள். ஞானமும் முக்தியைத்தருவதன்று. பின்னை? ஒளி யிருளையொழிப்பது போல இந்த மெஞ்ஞானவொளி அக்ஞானஇருளை அகற்றுகின்றது. பொருள் தாஞகப் புலப்படுவதுபோல ஆன்மா இயல்பாக இலங்குகின்றது. எனவே சாங்கியர் கூறும் குற்றம் வேதாந்தத்தில் இல்லையென்பதுத் தெளிவு.

தப்யதாபம் ஒரு புருஷனிடம் நிகழ்வது பொருந்தாது. செறிந்த ஞானமும் செயலும் அற்றிருக்கின்ற பிரதானத்தைப் புவிக்குக் காரணமென்பது குருடனை ராஜவிழியென்றதற்கு நிகராம். அகில உலகத்திற்கு நிகிலகுற்றமுடைய பிரகிருதியைக் காரணமென்பதைப் பார்க்கிலும் நிர்தோஷவடிவ பிரஹ்மத்தை நிலத்திற்கு நிதானம் என்பதில் குற்றமன்று. அகிலம், நிகிலம் என்னும் சொல்எல்லாம் ஒரு பொருளைத்தரும். நிதானம் = காரணம். நிலம் – புவி எனவே சேதன வடிவ ஆன்மாவே ஜகத்திற்குக் காரணமென்பது திண்ணம். குணம் சலரூபம் ஆகையால் சாம்ய நிலையிலும் குணத்தில் வைஷம்ய முண்டாகும் என்பது அவர்கள் பிடிவாதம். அவர்கள் என்பது சாங்கியர்களை. அவ்வாறிருப்பனும் அறிவின்மையால் சேதனவிஹீன குணங்கள் சிருஷ்டி விஷயத்தில் செயல்பட முடியாது என்பது சித்தாந்தபக்ஷம் இதனுல் பிரகிருதி பிரபஞ்சத்திற்குக் காரணமன்று என்பது உறுதி.

அவதாரிகை

வேறு விதத்தாலும் சாங்கியமதத்தில் குற்றமிருப்பதைத் தெரிவிக்கும் பொருட்டு அடுத்த சூத்திரம் வருமாறு—

## சூ. விப்ரதிஷேதாச்ச அசமஞ்ஜசம் 10

4

விப்ரதிஷேதாத், ச, அஸமஞ்ஜஸம் என்றுபிரிக்கவும்.

ப.ரை ச=மேலும். விப்ரதிஷேதாத் - முன்னுக்குப்பின் முரணாக மொழிவதால். அஸமஞ்ஜஸம் = பொருத்தமற்றதாகும்.

சாங்கியர்கள் – சில இடங்களில் மஹத்தத்வத்தில் இருந்து தன் மாத்திரைகள் உண்டாயின வென்றும், சிலர் அஹங்காரத்திலிருந்தென்றும் ஒப்புக்கொள்கின்றனர். இதனால் அஸமஞ்சம் பரஸ்பர விருத்தம் முரணானது. மேலும் சில இடங்களில் மனம், த்வக்கு, பஞ்ச ஞானேந்திரியம் 7 என்று சாங்கியர்கள் கூறுகின்றார்கள், சில இடங்களில் ஞானேந்திரியம் 5ந்தும் கர்மேந்திரியம் 5ந்தும், மனம் ஒன்றும் சேர்ந்து (11)பதினொன்று என்றும் மொழிகிறார்கள். தன் மாத்திரை - ஐந்து விஷயங்கள். இன்னும் சில இடங்களில் அந்த: கரணமூன்று – மனம் புத்தி அஹங்காரம். சில இடத்தில் ஒன்று புத்தி என்றுஞ் சொல்கிறார்கள். இவ்வாறு ஈஸ்வரனை ஜகத்திற்குக் காரணமாகக்கொண்ட சுருதி ஸ்மிருதிகளுக்குப் பொருத்தம். மற்றதைப் புகழுகின்றனர்.

## மஹத்தீர்க்காதிகரணம்

### அவதாரிகை

இதுவரை பிரதானகாரணவாதம் நிராகரிக்கப் பெற்றது. இனி பரமாணுகாரணவாதம் விலக்கப்படும். முன்னர் பரமாணுவாதிகளால் வேதாந்தவாதத்தில் தோஷங்கற்பிக்கப் படுகிறது. பரமாணுவாதம் பரமாணு—சிறிய அணுக்கள். இந்த அணுக்களை அவனி - ஜகத்திற்குக் காரணமென்று சொல்லும் வாதம் பரமாணுவாதமெனப்படும். அணு —நுண்ணியப்பொருள். இந்த மதத்திற்கு இருதலைவர்கள் உண்டு. கணாதர், கௌதமர், இவர்கள் மதம் வைசேஷிகம், நியாயமெனப்படும். அவர்கள் மதத்தின் முறை வருமாறு —வைசேஷிகமதம் – காரண திரவ்யத்தில் (காரணதிரவ்யம் — காரணப்பொருளில்) சமவாய சம்பந்தத்தினால் வித்யமானம் விளங்கப்பட்டகுணம் காரிய திரவ்யத்தில் சமான ஜாதீய அன்யகுணங்களை உண்டுபண்ணுகின்றது. வெண்மையான நூல்கள் வெண்மையான ஆடைகளைத் தோற்றுவிக்கின்றன. வெண்மையான நூல்களிலிருந்து கருப்பு ஆடைகள் உண்டாவதில்லை.

இந்த நியாயம்போல சேதன பிரஹ்மம் ஜகத்திற்குக் காரணமானதால் காரிய ஜகத்திற்கும் சேதனமென்று ஒப்பவேண்டிவரும். காரியரூப உலகம் அவ்வாறின்மையால் பிரஹ்மம் புவிக்குக்காரணமாகாதென்பது அவர்கள்மதம். அவர்கள் என்பது வைசேஷிகர்களை. இதுதான் வேதாந்தத்தில் அவர்கள் கூறுந்தோஷமாவது.

சித்தாந்தி — அவர்கள் கூறிய தோஷம் அவர்கள் மதாநுசார மாகவே விலக்கப்படுகிறது.

## ஸூ. மஹத்தீர்க்க வத்வா ஹ்ரஸ்வ பரிமண்டலாப்யாம்:11

மகத்தீர்க்கவத், வா, ஹ்ரஸ்வ, பரிமண்டலாப்யாம் என்று பிரிக்கவும்.

ப.ரை. ஹ்ரஸ்வ = துவியணுகம், பரமாணு = பரிமண்டலம். பாரிமாண்டல்யம். பரிமண்டலம் – பரமாணு. அதிலுள்ள பரிமாணம்-அளவு பாரிமாண்டல்யம் எனப்படும். பரிமாணமுள்ள பரமாணுவினின்றும் மஹத்தீர்க்கவத்வா = முறையே மகத்தாயும் — பெரிய அளவோடு கூடியதாயும்:. தீர்க்கவத் = நீண்ட அளவுடையதாயும், திரியணுகம் உண்டாகிறதென்பது அவர்கள்மதம். அவர்கள் — வைசேஷிகர்கள் என்பது பொருள். எவ்வாறு பரமாணுவிலிருந்து பரமாணு உண்டாகாமல் துவியணுகமும், திரியணுகமும் பரமாணு சம்யோகத்திற்கு நாசமும், அதனுல் துவியணுவுக்கு நாசமும், பிறகு பூமியாதிக்கு நாசமுண்டாகிறதென்பது பரமாணு காரணவாதிமதம்.

இவர்கள் மதத்தை யினியவேதாந்தம் நிராகரிக்கின்றது. காரணகுணங் காரியத்தில் தோற்றுகின்றது எனின் பரமாணுவின் குணம் பாரிமாண்டல்யம் — அத்யந்தம் சூக்ஷமத்தன்மை. துவியணுக்கத்தில் உண்டாகவேண்டுமே யவ்வாறு உண்டாகவில்லையே. அதற்கு என்ன காரணம்? அவர்கள் கூறிய முறைப்படி இரண்டு பரமாணுவினுல் ஹ்ரஸ்வ குணவிசிஷ்ட துவியணுக்கம் உண்டாகும்போது, ஹ்ரஸ்வ துவியணுவினுல் மஹத், தீர்க்க பரிமாணமான திரியணுக்கம் உண்டாகிறது. அவ்வாறிருக்க பாரிமாண்டல்ய மட்டும் உண்டாகவில்லை என்பது. உணர்வுடைய உயர்ந்த மக்கள் ஒப்பத்தக்கதன்று. ஆகையால் பரமாணுவாதம் பொருத்தமற்றது.

### அவதாரிகை

அணுவாதம் அர்த்தமற்றது — பொருளற்ற தென்பதைப் புலப்படுத்துவதற்காக அடுத்த சூத்திரம் வருமாறு:-

## ஸூ. உபயதாபி ந கர்ம அதஸ்தத்பாவ: 12

உபயதா, அபி, ந, கர்ம, அத:, தத், அபாவ: என்று பிரிக்கவும்.

ப. ரை. உபயதா = இருவிதத்திலும். அபி = உறுதி. கர்ம = பரமாணுக்களில், – செயல் உண்டாவது, ந = இல்லை. அத: = இதனால்; தத்பாவ: = உலக உற்பத்தியுண்டாவதில்லை என்பது உறுதி யென்று ஒட்டிக்கொள்ளவும்.

பரமாணுவாதிகள் என்ன சொல்கிறார்கள் - உலக உற்பத்திக்கு முன்னர் பரமாணுமுழுவதும் சலனமில்லாமல் நிலையாக இருக்கின்றன என்பது அவர்கள் மதம். சலனமில்லாத பரமாணுக்களில் தொழில் உண்டாகி இரண்டணுக்களும் ஒன்று சேர்ந்து, சம்யோகமுண்டாகி அதுமூலமாக ஜகத்துண்டாகிறதென்று அவர்கள் உரைக்கிறார்கள். இது எவ்வாறிருக்கிறதெனின், இருந்து நடக்கிறான் என்பதுபோலாகும். இருந்தால் நடப்பதெவ்வாறு, நடந்தால் இருப்பதெவ்வாறு? முன்னுக்குப்பின் முரண், இந்த மதிஹீனத்தை மாற்றுவதற்கு மலர்ந்த வேதாந்தம் வினவுகின்றது – பரமாணுக்களில் நிகழ்கின்ற (கர்ம) நிகழ்ச்சி இயல்பாக உண்டாகிறதா அல்லது ஒன்றைப்பற்றி உண்டாகிறதா? தானாக உண்டாகிறதென்பாயாகில் அது பொருந்தாது. ஏனெனின், அவர்கள் மதத்தில் பிரளய காலத்தில் பரமாணுக்கள் ஸ்திரமாக இருக்கின்றன. அந்நிலையில் இயல்பாகத் தொழில் நிகழ்வது பகல் இரவாவது போலாகும். ஜீவர்கள் கர்ம சம்ஸ்கார வசத்தால் கர்மமுண்டாகிறதெனின் அதுவும் பொருந்தாது. ஏனெனின்? ஜீவர்கள் அதிர்ஷ்டம் ஜீவர்களிடத்திலிருக்கின்றது. பரமாணுவில் இல்லை. ஆகையால் அது பரமாணுவில் கர்மத்தை உண்டுபண்ண முடியாது. எனவே இருவித முறையாலும் பரமாணுகாரணமாகாது. ஆகையால் ஜகத்க்காரணம் பரமாணுவென்பது நகைக்கத் தக்கது.

வேறு விதமாகவும் விமல வேதாந்தம் மலினபரமாணுவாதத்தை மறுக்கின்றது — அதிர்ஷ்டம் அசேதனம். — ஜடம். எந்த அசேதனமும் சேதனத்தைப் பற்றாமல் எவ்வித காரியத்தையும் செய்ய இயலாது. பிறரைக்கொண்டு செய்துவைக்க முடியாது. ஜீவனுடைய நல்வினைத் தீவினையால் அதிர்ஷ்டமுண்டாகிறது, அந்த ஜீவாத்மா பரமாணுவிற்கு உதவலாமே எனின், அதுவும் பொருந்தாது. சிருஷ்டிக்கு முன்னர் ஜீவாத்மாவில் சேதனம் ஸ்புரணமாகாது. எனவே அது அசேதனத்தைப் போன்றதேயாம். அது என்பது ஜீவனை. மேலும் படைப்புக்குமுன் ஜீவாத்மாவுக்கும் பரமாணுவுக்கும் தொடர்பு இல்லை. இந்நிலையில் உறுதியான காரணமில்லாததால் பரமாணுவில் முதலாவது கர்மம் எவ்வாறு உண்டாகும் என்பது கேள்வி கர்மம் உண்டாகாமையால்.

இரண்டு அணுக்கள் ஒன்று சேரமாட்டா. ஆதலால் சம்யோகம் உண்டாகாது. அது உண்டாகாமையால் துவியணுக்க முதலிய அணுத்திரள் இன்மையால் உலக உற்பத்தியோ அல்லது நிலை அல்லது பிரளயமோ ஆவதில்லை. ஆகையால் ஜகத்திற்குப் பரமாணு காரணமென்பது, ஆகாசத்திலிருந்து பால் கறக்கிறதென்பதும், மணலில் இருந்து எண்ணெய் எடுப்பதென்பதும், நொண்டி நடக்கிருன் என்பதும், எண்ணெய் இன்றியேற்றியத் தீபம் எரிகிறதென்பதும் நாக்கில்லாதவன் நவில்கின்ருன் என்பது போலாகும். மேற் கூறிய உவமைகள் அனைத்தும் எவ்வாறு பொருத்தம் இன்மையோ அதுபோல் பரமாணுவை பாருக்குக் காரணமென்பது மதிஹீனமாம். பார்—உலகம்.

### அவதாரிகை

பரமாணு காரணவாதத்தை அகற்றுவதற்கு மற்ருெருகாரணங் கூறும்பொருட்டு சூத்திரம் வருமாறு;-

## சூ. சமவாயாப்¹யுபகமாச்ச ஸாம்யாத் அநவஸ்திதே: 13

சமவாய, அப்யுபகமாத், ச, ஸாம்யாத், அநவஸ்திதே: என்று பிரிக்கவும்.

ப. ரை. சமவாய=சமவாய சம்பந்தத்தை அப்யுபகமாத்= பரமாணுவாதத்தில் சமவாய சம்பந்தத்தை ஒப்புக்கொள்ளப் பட்டிருப்பதால் சாம்யாத் = காரணத்தைப்போலும் காரியத்தைப்போலும் சமவாய சமவாயியாகிய இவ்விரண்டிலும்(பின்னதா)வேற்றுத்தன்மை சமானம். ஆகையால் அனவஸ்திதே: = (பரமாணுவாதத்தில்) அனவஸ்த்தை தோஷமுண்டாகும். எனவே பரமாணு சம்யோகத்தால் ஜகத்திற்கு உற்பத்தியுண்டாகாது.

வைசேஷிகமதத்தில் யுதசித்தம், அயுதசித்தம் என்னும் இரண்டு பொருள்கள் வழங்கப்படுகின்றன. யுதசித்தம்-தனித்தனியான பொருள். குடமும் கயிறும்போல. அயுதசித்தம்—ஒன்று சேர்ந்த பொருள். நூலும் படமும்போலும். யுதசித்த பொருளில் ஒன்றுக்கொன்று சம்யோக சம்பந்தமுண்டாகிறது. அயுதசித்த பொருள்களில் சமவாய சம்பந்த முண்டாகிறதென்பது அவர்கள் மதம். கயிறும் குடமும் இருபொருளாக இருப்பதால் இவைகளுக்குள்ள சம்பந்தம் சம்யோக சம்பந்தம். நூலும் சேலையும் காரண காரியரூபம், அயுதசித்தம். ஆகையால் நூலிலும்

சேலையிலும் உள்ள சம்பந்தம் சமவாய சம்பந்தம். அவர்கள் மதத்தில் காரிய காரணமுற்றிலும் வெவ்வேறு. ஆனாலும் சமவாயி காரணமும் காரியத்தின் பரஸ்பரசம்பந்தமும் சமவாயமென்று சொல்லப்படும். இதைப்போன்று இ ர ண் டு அணுக்களிலிருந்து தோன்றின துவி யணுக்கம் பரமாணுக்களிலிருந்து பின்னமாகியும் சமவாய சம்பந்த வாயிலாக பரமாணுவோடு தொடர்பு வைத்திருக்கிறதென்று அவர்கள் கூறுகிறார்கள். இவ்வாறு ஒப்புக்கொள்ளும் ப க்ஷ த் தி ல் எவ்வாறு இரட்டையணுக்கள் பரமாணுவிலிருந்துவேறே அதுபோல் சமவாயமும் சமவாயிலிருந்து பின்னமாகும். வேற்றுத்தன்மையில் இ ர ண் டு ம் ஒன்றுதான். ஒன்றுக்கொன்று சம்பந்தத்தை யுணர்ந்து பார்க்கும்போது வரம்புகடந்து போவதால் அனவஸ்த்தைதோஷ முண்டாகும். ஆகை யால் பரமாணுவாதம் நல்லதன்று. எப்படி அசேதன பரமாணுவி லிருந்து ஜகத் உண்டாகிறதோ அதுபோல சேதனவடிவ பிரஹ்மத் திலிருந்து ஜடவடிவ ஜகத்துண்டாவதால் என்னக் குற்றம். பரமாணு விற்கு நான்கு பேதங்கள் உண்டு. பார்த்திவப்பரமாணு, ஜலீயப் பரமாணு, தைஜஸப் பரமாணு, வாயவீயப் பரமாணு. இவை நித்ய நிரவயவ ரூபாதி குணங்களோடு கூடியவை. இந்தப் பரமாணுவில் இருக்கின்ற (பரிமாணம்) அளவு பாரிமாண்டல்ய மெனப்படும். பிர ளயத்தில் இந்தப் பரமாணுக்கள் ஒரு தொழிலுஞ் செய்யாமல் செய லற்று இருக்கின்றன. சிருஷ்டிக்காலத்தில் காரியத்தையுண்டு பண்ணும் பொருட்டு பரமாணு சமவாயம்) உபாதான காரணமாக ஆகின் றது. இரண்டு பரமாணுக்கள் சேர்ந்து-(சம்யோகம்) அசம்வாயி கார ணமாகின்றன. அதிர்ஷ்டம் அல்லது இச்சை ஆதி முதலியவை நிமித்தக் காரணமாகின்றன.

இம்முறையாக இறைவன் அருளால் முதலாவது வாயவீய பரமாணுவில் கர்மரூப தொழில் நிகழ்கின்றது. பிறகு ஒன்று மற் றொன்றோடு சம்பந்தப்பட்டு இரண்டு அணுக்கள் சம்பந்தப்பட்டு துவிய ணுக்கம் என்னுங் காரியத்தையுண்டு பண்ணுகிறது. மூன்று துவிய ணுக்கம் சேர்ந்து ஒரு திரியணுக்கம் உண்டாகிறது. நான்கு துவிய- ணுக்கம் சேர்ந்து ஒரு சதுரணுக்கம் உண்டாகிறது. இவ்வாறு ஒரு வாயுத்தத்வ முண்டாகி ஆகாசத்தில் தோன்றுகிறது. இம்முறையாக தைஜஸ அணுவிலிருந்து அக்னியும் ஜலீய பரமாணுவிலிருந்து ஜலமும். பார்த்திவப் பரமாணுவிலிருந்து பூமியும் உண்டாயின.

காரணகுணத்திலிருந்து காரியகுணங்கள் உண்டாகின்றன. நூலில் இருக்கின்ற வெண்மை, மஞ்சள், நீலமுதலிய குணங்கள்தான்

ஆடையில் அந்தந்த குணங்களையுண்டு பண்ணுகின்றன. இவ்வாறு பரமாணுவில் பரந்திருக்கும் குணங்கள் துவியணுவிலிருக்கும் வெண்மை முதலிய குணங்களைத் தோற்றுவிக்கின்றன என்பதுத்துணிவு. துவியணுவையுண்டுபண்ணும் இரண்டு பரமாணுவும் இரண்டு (எண்ணும்) துவியணுவில் அணுத்வத்தையும் ஹரஸ்வத்தையுமுண்டு பண்ணும், ஆனல் இரட்டையணுக்களில் உள்ள பரமாணுவில் பரிமாணமென்னும் பாரிமாண்டல்யத்தையுண்டு பண்ணுவதில்லை. அவ்வாறு உண்டு பண்ணினல் அதிகம் நுண்ணியமாகிவிடும். நுண்ணியம்—சூக்ஷ்மம். இந்தமாதிரி முடிவில் திருஷ்டவசத்தால் ஒருவாறு பரமாணுவில் சிருஷ்டி பிரளயத்தின் பொருட்டு வினைகள் உண்டாகட்டுமேயெனில்? அது பொருந்தாது.

## ஸூ. நித்யமேவ ச பாவாத் 14

ப.ரை. ச=மேலும். (பரமாணுவில் இயல்பாக பிரவிருத்தியோ அல்லது நிவிருத்தியோ ஒப்புக்கொள்ளும் பக்ஷத்தில்) நித்யம் ஏவ= எப்பொழுதும். ஏவ உறுதியாக, பாவாத்=சிருஷ்டி அல்லது பிரள யத்திற்குரிய சத்தை நிலைத்திருக்கும். ஆகையால் பரமாணுகாரண வாதம் அசங்கதம். பொருத்தமற்றது.

பரமாணுவாதி பரமாணுவை நித்யம் என்று ஒப்புக்கொள்கிறார். ஆகையால் அவர்களுடைய இயல்பான கர்மங்களும் நித்யம் என்றுக் கொள்ளப்படும். சிருஷ்டிகர்மத்தை நித்யமாக ஒப்புக் கொண்டால் சிருஷ்டிமட்டும் நிகழும் ஸ்திதிப் பிரளயம் உண்டாக மாட்டா. ஸ்திதிகர்மத்தை நித்யமாகக் கொண்டால் ஸ்திதிமட்டு முண்டாகும், சிருஷ்டி பிரளயமுண்டாக மாட்டா. இவ்வாறு எந்த கர்மம் நித்தியமாக இருக்குமோ அதற்குரியத் தொழில் மட்டும் உண்டாகும் ஏனையத் தொழில் நிகழமாட்டா. இதற்காக பிரவிருத்தி நிவிருத்திரூப கர்மமிரண்டையும் ஒப்புக் கொள்ளும் நிலையில் முரண் பாடாகும். இவ்வித முரண்பாடோடு கூடிய பரமாணு வாதத்தை யொப்புக்கொள்வது முற்றிலும் பொருத்த மற்றதேயாம்.

### அவதாரிகை

இப்பொழுது பரமாணுவாதத்தில் நித்யத்வம் பொருந்து

மா பெருந்தாதா வென்பது சத்தேகம். இந்த ரீதியாகவும் பரமாணு-வாதம் பொருந்தா தென்பதற்கு சூத்திரம்.

## சூ. ரூபாதி மத்வாச்ச விபர்யய: தர்ஸனாத் 15

ரூபாதி மத்வாத்ச விபர்யய: தர்சஸனாத் என்றுபிரிக்கவும்.

ப.ரை. ச = மேலும் ரூபாதிமத்வாத் = பரமாணுக்களை ரூபரச, கந்தாதி குணங்களோடு ஒப்புக் கொள்வோமானால் விபர்யய: = பரமாணுக்களில் அநித்யத்வதோஷ முண்டாகும். தர்ஸனாத் = (அவ்வாறு) சுருதிகளில் கூறப்பெற்றிருக்கிறது.

வைசேஷிக மதத்தில் பரமாணுநித்யமும் ரூபாதிகுணமுமுடையதாக ஒப்புக் கொள்ளப் பட்டிருக்கிறது. பரமாணு நித்யம் அதிலுள்ள ரூபாதி அநித்யம் இவை இரண்டும் முரண்பாடுடையது. நெருப்பும் நீரும் போலும், நிழலும் வெயிலும் போலும், கிழவியும் குமரியும் போலும், சுட்டமண்ணும் பச்சைமண்ணும் போலும், இருளும் ஒளியும் போலும், கொதிப்புங் குளிரும் போலும்ஆம். உருவாதி குணங்களோடு பரமாணுவை சேர்த்தபிறகு பரமாணு நித்யமாக ஆகமுடியாது. ஏனெனின்; உருவமுதலிய குடம், படம், ஆடை அணிகலம் முதலிய பொருள்கள் அநித்யமாகக் காணப்படுகின்றன. இதற்காக பரமாணுவை ரூபமுதலிய குணங்களிலிருந்து விலக்கினால் பரமாணு உருவ முதலிய குணங்களை யுண்டுபண்ணி வைக்கக்கூடாது. ஆனால் அவ்வாறுக் காணோம். ரூபாதிமந்தோ நித்யாஸ்ச என்பது அவர்கள் ஆனுரை. பிரதிக்ஞை. பரமாணு உருவங்களோடு இருப்பினும் (என்றும்) நித்யம் என்பது அவர்கள் உடன்பாடு. இந்த உடன்பாடு இடிபாடாகும். நொந்து நொறுங்கி அழிந்து போகுமென்பது கருத்து. இவ்வாறு முரண்பாடுள்ள பரமாணு வாதத்தை ஜகத்திற்குக் காரண மாகச் சொல்வது முறையற்றதாகும்.

### அவதாரிகை

வேறுவிதமாகவும் பரமாணுவாதத்தைத் தூஷிக்கின்றார்.

## சூ. உபயதா ச தோஷாத் 16

௪ = மேலும். உபயதா = பரமாணுவை குறைந்த அல்லது நிறைந்த குணங்களோடு கூடியதாயும், அல்லது விலகியதாயும் ஒப்புக்கொள்ளும் பக்ஷத்தில் இரு விதத்திலும், தோஷாத் குற்ற முண்டாகும். எனவே பரமாணுவாதம் தள்ளத்தக்கது.

பிருதிவிஆதி பூதங்களிலிருந்து சில பூதங்களில் அதிக குணங் களையும், சில பூதங்களில் குறைந்த குணங்களையும் பார்க்கின்றோம். அதனால் ஆரம்பகபரமாணுவில் சில வஸ்துவில் சிலகுணங்களையும், சில வஸ்துவில் பல குணங்களையும் விரும்ப வேண்டியதுவரும். அந்நிலையில் பூதங்களில் இருக்கும் குணங்களைப் பரமாணுவிலும் முழுக்க ஒப்புக்கொள்ள வேண்டும். ஏனெனின், காரணத்தில் உள்ள சமானகுணங்களைக் காரியத்திலும் உண்டு பண்ணிவைக்கின்றது. பூதங்களில் எத்தனை குணங்கள் இருக்கின்றனவோ அத்தனை குணங்களை காரணபரமாணுவிலேயும் இருப்பதாக எண்ணவேண்டும். அவ்வாறு எண்ணினால் பூதங்களில். ஒரு படித்தாகக் குணங்களைக்கண்டிலோம். நிறைந்த குணமுள்ள புவியில் ஸ்தூலமும், காணப்படுகின்றன. இந்த ஸ்தூலத்தன்மையை பரமாணுவிலும் கொள்ளவேண்டும். அப்படி யானால் பரமாணுத் தன்மைக்குப்பங்க முண்டாகும். இதனால் பரமாணு வில் ஒருகுணந்தானிருக்கிறது. ஆகையால் அணுத்தன்மைக்கு (ஊறு) குற்றம்வாராது என்பாயாகில் அது பொருந்தாது. எதனாலோவெனின்? எல்லா பூதங்களிலும் ஒருகுணந்தான் காணப்படவேண்டும். அவ்வாறுக் காணோம். சிலதில் ஒன்று, சிலதில் இரண்டு, சிலதில் நான்கு இவ்வாறுத் தெரிகிறது. நீகூறிய முறைப்படிப் பார்த்தாலும், தேஜில் ஸ்பர்ஸமும், நீரில் உருவமும் உண்டாவதற்கு இடமில்லை. புவியில் இரசம், உருவம், ஸ்பர்ஸம் இவைகள் உண்டாகமாட்டா. ஏனென்றால், இவைகளுக்குக் காரணமான பரமாணுவில் நீயொன்றைத் தவிர மற்றைகுணங்களை யொப்புக் கொள்ளவில்லை.

இதற்காக பரமாணுவில் முற்றிலும் குணத்தையேற்றுக் கொள்ளாது போனால் காரிய பூதங்களில் காணப்படுங் குணங்கள் விபரீதமாகும். இம்முறைப்படி நோக்குங்கால் பரமாணுக் காரணவாதம் ஊனம்—குற்றம். ஐயோ பொய்யோ பரமாணுவாதமென்று இரங்கிப் புறக்கணிக்கலாயிற்று. எனவேயிரண்டிடத்திலும் குற்றமுடையதா தலால் பரமாணுவாதம் எள்ளத்தக்கது. எள்ளுதல்—இகழ்தல்.

### அவதாரிகை

இப்பொழுது – பரமாணு வாதத்தைக் கற்றறிந்த கலைஞர்களால் கையாளவில்லையென்று சொல்லிக் கூறியஅணுவாத பிரகரணத்தை முடிக்கின்ருர் – சூத்திரம் வருமாறு—

## ஸூ. அபரிக்ரஹாச்ச அத்யந்தமனபேக்ஷா 17

அபரிகிரஹாத், ச, அத்யந்தம் அநபேக்ஷா வென்று பிரிக்கவும்

ப – ரை. அபரிகிரஹாத் = (பரமாணுவாதத்தை) அறிவுள்ள அறிஞர்கள் கையாளவில்லை, ச, ஆகையால் அத்யந்தம் அனபேக்ஷா = (இந்த) வாதத்தை, அதாவது பரமாணுவாதத்தை முற்றிலும் தள்ள வேண்டும்.

வி—ரை. சாங்கிய யோக, நியாயமுதலியவாதங்களை மனு முதலிய ரிஷிகள் ஒப்புக் கொண்டிருக்கிருர்கள். ஆகையால் அவை களைப்பற்றி சிறிது ஆராயத் தொடங்கினேம். இப்பரமாணுவாதத்தை யொப்புக் கொள்ளவோ அல்லது ஆராய்வதற்கோ இடமில்லை. ஏனெனின்? இந்த வாதத்தை உணர்வுள்ள முதியோர்களும் உன்னதச் சுருதிகளும் நல்லிசைப் புலவர்களும் நலமிக்கப்புராண இதிகாசங்களும் உடன்படவில்லை. ஆதலால் நாமும் இந்தசிறிய (பரமாணு) வாதத்தை பெரிய (வேதாந்த) வாதத்தால் தள்ளி எள்ளவேண்டும். எள்ளுதல், இகழ்தல். பிரஹ்மம் பெரியது. அதை விளக்கும் வாதமும் பெரியது புதியது, அரியது அறிஞர்க்குரியது. அணு – சிறியது. அதைவிளக்கும் வாதமும் சிறியது இதனல் இந்தவாதம் எல்லாராலும் எள்ளி நகைக்கத்தக்கது. இந்த வாதத்தையேழு சூத்திர மூலமாக விமல-வேதாந்திகள் தங்கள் அமல வேதாந்தத்தால் புறக்கணித்தார்கள். இந்தவாதமென்பது பரமாணுவாதத்தை யென்பதுகருத்து.

### அவதாரிகை

ஏழு சூத்திர மூலமாக பரமாணு வாதத்தைக் கண்டனம்செய்தப் பிறகு நாஸ்திக வாதமான பௌத்தமதத்தை விலக்கும் பொருட்டு அடுத்தப் பிரசங்கத்தைத் தொடுகின்ருர். தொடுதல்—தொடங்குதல் சூத்திரம் வருமாறு—

## ௲. சமுதாய உபயஹேதுகேஅபி தத்ப்ராப்தி: 18

உபயஹேதுகே, அபி, தத், அப்ராப்தி : சமுதாய என்று பிரிக்கவும்.

ப.ரை. உபயஹேதுகே = பரமாணுவைஹேதுவாகக் கொண்ட (பாஹ்ய, சமுதாய = வெளியில் உள்ளக்கூட்டங்களும் அகத்தில் உள்ள ஸ்கந்த சமுதாய கூட்டங்களும் இவ்வாறு இரண்டுவித சமுதாய கூட்டங்களும் ஒப்புக்கொள்ள படுமாறுலும். அபி = உம். தத் = அப்ராப்தி: — அந்த சமுதாயத்திற்கு சித்தியுண்டாக மாட்டாது.

வி.உ. பௌத்த மதாநுயாயி பரஸ்பரம் அற்பமத பேதங்களை அவர்களுள் ஒப்புக்கொண்டு தங்களை நான்கு பிரிவாக ஆக்கிக்கொள்கின்ருர்கள். அவர்கள் நாமம் வருமாறு—வைபாஷிகன், சௌத்ராந்திகன், யோகாசாரன், மாத்யமிகன். இவர்களில் வைபாஷிகனும் சௌத்ராந்திகனும் ஒருவற்கொருவரைத் தழுவிநிற்பர். இவரிருவருக்கும் சிறிது வேற்றுமையுண்டு. இவர்கள் இருவரும்.

### அவதாரிகை

பூர்வபக்ஷியளிக்கும் சமாதானத்தைக் கூறி மீண்டும் அதனை உதறித் தள்ளிவிட்டு வேதாந்த ரீதியாகக் கண்டனஞ் செய்வது ரீதீ-முறை. அதற்கு சூத்திரம் வருமாறு:-

## ௯. இதரேதர ப்ரத்யயத்வாதிதி சேந்நோத்பத்தி மாத்ர நிமித்தத்வாத் 19

இதர, இதர, ப்ரத்யயத்வாத், இதி, சேத், ந, உத்பத்தி, மாத்ர நிமித்தத்வாத் என்று பிரிக்கவும்.

உ.ரை. இதரே தர பிரத்யயத்வாத் அவித்தை, சம்ஸ்காரம், விக்ஞானம், இவையனைத்தும் ஒன்றுக்கொன்றுக் காரணமாகின்றன. ஆகையால் இவைகளால் சமுதாயத்திற்கு சித்தியுண்டாகும் என்பாயாகில், ந இதி = அது பொருந்தாது. ஏனெனின், உத்திபத்தி மாத்ர நிமித்தத்வாத் = மேற்கூறிய அவித்தை முதலிய பொருள்கள் தங்களுக்கு

உத்பத்திக்குமட்டுங் காரணமாக கொண்டிருக்கின்றன. ஆ க லி ன் சமுதாயத்திற்கன்று. சமுதாயம், சங்காதம், கூட்டம் என்பன ஒரு பொருள் சொற்கள். எனவே சமுதாயத்தையுண்டு பண்ண முடியாது. பௌத்தமதத்தில் விக்ஞானத்திற்கு சில காரணங்களை ஒப்புக்கொண்டிருக்கிருர்கள். அவை வருமாறு -- அவித்தை, வாசனை, விக்ஞானம், நாமம், ரூபம், ஸ்பர்ஸம், வேதனை. ஜாதி, ஜரா, மரணம் க்ஷணிகப் பொருளில் ஸ்திரத்தன்மை அவித்தை. அவித்தை முதலிய பொருள்களில் ஆசை சம்ஸ்காரம். இந்த ஸ்ம்ஸ்காரம் கருவுற்றிருக்கின்ற குழந்தையில் ஆலய விஞ்ஞானத்தை உண்டுபண்ணுகிறது. அந்த ஆலய — அலையலையாகவரும் விக்ஞானத்திலிருந்து பூமி முதல் நான்கு பூதங்கள் உண்டாகின்றன. இவை உடலுக்குமுரிய சமுதாயத்திற்கும் ஹேதுவாகின்றன. இவை நாமத்திற்கு இடமானதால் நாமம் எனப் படுகின்றன. இந்த (நாமம்) பெயர் க ரு ப் பு, வெண்மை முதலிய உருவமுள்ள உடலை உண்டுபண்ண நிமித்தமாகின்றது. கருவுற்று இருக்கும் நிலை கலலம் எனப்படும். அதை நாமம் உருவமென்று சொல்லுவார்கள். நாமமும் இந்திரியமும் இவைகளுக்குள்ள ஒன்ருேடுள்ள சம்பந்தமும் ஸ்பர்ஸமெனப்படும். இதன் மூலமாக சுக துக்கங்களுடைய வே த னை உண்டாகும். இதனை வேதனுஸ்கந்தமென்று விளம்புவார்கள். வேதனையென்ருலும் அநுபூதியென்ருலும் ஒன்றே தான். உத்பத்திக்குக் காரணமேயன்றி சமுதாயத்திற்குக் காரணமல்ல ஆகையால் பௌத்த சித்தாந்தம் முறையற்றது.

### அவதாரிகை

முந்திய சூத்திரத்தில் அவித்தை முதலிய பொருள்கள் ஹேது சம்ஸ்கார முதலிய பொருள்களை உண்டுபண்ணுவதில் மட்டும் நிமித்தமேயன்றி சமுதாயத்திற்குக் காரணமன்று எனமொழியபட்டிருக்கிறது. இனிவரும் சூத்திரத்திஞல் அவித்தை சம்ஸ்கார முதலிய பொருளுக்குங் காரணமாக முடியாது என்பது உணர்த்தப் போகின்ருர். சூத்திரம் வருமாறு:-

## சூ. உத்தரோத்பாதே[3] ச பூர்வ நிரோதாத்[4] 20

உத்தர, உத்பாதே, ச, பூர்வ நிரோதாத் என்று பிரிக்கவும்.

உரை. உத்தர உத்பாதே - பின்னர் உண்டாகின்ற பாவத்திற்கு

பாவம் — காரியரூபவஸ்து. அது உத்பத்தியாகும் போது, பூர்வ நிரோதாத் = முந்திய கணத்தில் இருக்கும் காரணத்திற்கு அழிவுண்டாகிறது. பௌத்த மதத்தில் ஒவ்வொரு பொருளும் ஒரு கணந்தான் இருக்கும். அடுத்தகணத்தில் அழியுமென்பது அவர்கள் மதம். இதனுல் இவர்கள் மதானுசாரம் பிந்திய கணத்திலிருக்கும் காரியத்தில் முந்திய க்ஷணத்திலிருந்து காரணம் இருக்கமாட்டாது. காரியம் உண்டாகும் பொழுதே காரணம் நாசமாகும். நாசமென்னுஞ் சொல்லுக்கு இரு பொருள். ஒன்றுஅழிவு, மற்ருென்று மறைவு. ''நாசஸ்யாததர்ஸனே'' நிகண்டு. ஆகையால் அவர்கள் மதத்தில் காரிய காரணபாவம் சித்திக்கமாட்டாது. எனவே அவர்கள் கூறிய அவித்தை, சம்ஸ்காரம் முதலிய பொருள்களுக்கும் காரணம் இன்மையால் அவர்கள் மதம் அனர்கலம் — பொருத்தமற்றதென்பது புலனும். வெளிப்படையென்பது பொருள்.

### அவதாரிகை

காரணமில்லாமல் காரியம் ஏன் உண்டாகக் கூடாதெனின்? இதற்குப்பதில் உரைப்பதற்கு அடுத்த சூத்திரம் வருமாறு:-

## சூ·அசதி பிரதிக்ஞோபரோதோ யௌகபத்யமன்யதா 21

அசதி, பிரதிக்ஞா, உபரோத:, யௌகபத்யம், அன்யதா என்று பிரிக்கவும்.

உரை. அசதி = காரணமில்லாதிருக்க (காரியத்திற்கு உத்பத்தி ஒப்புக்கொள்வோமானுல்) பிரதிக்ஞா உபரோத: = பிரதிக்ஞா — உறுதி மொழி பங்கமாகும் — அழியுமென்பது பொருள். அன்யதா = அது இல்லாது போனுல், யௌகபத்யம் = காரணத்திற்கும் காரியத்திற்கும் ஒரே நேரத்தில் ஒரே சத்தையொப்புக்கொள்ள நேரிடும்.

பௌத்த மதத்தில் விந்தைதான் யாது, ஜன்னி வந்தவன் புலம்புவதுபோல் புலம்புகிருன். புறப்பொருளுக்கு இருப்பை சவுத்ராந்திகள் யொப்புக் கொள்கிருர்கள். விக்ஞானத்தினுல் அநுமானகம்ய — அனுமானத்திற்கு விஷயமாகும் புறப்பொருளுக்கு இருப்பையொப்புக் கொள்கிருர்கள். வைபாஷிக மதானுயாயிகளுக்கு குடமுதலிய பொருள்கள் பிரத்யக்ஷப் பிரமாணத்திற்கு விஷயம். சவுத்ராந்திகளுக்கு மேற்கூறிய பொருள் அனுமான

விஷயம். இவையிவர்களுக்குள்ள பேதங்கள். இப்பொழுது இவர் இருவர்மதத்தையும் வேதாந்திகள் விலக்குகின்றார்கள். பரமாணுவை யெதற்குக் காரணமென்று சொன்னார்களோ அது புறப்பொருளுக்கும், ஸ்கந்த முதலிய அகப்பொருள் ரூபசமுதாயத்திற்கும் ஒவ்வாது. சமுதாயம் - கூட்டம். ஏனெனின்? சமுதாயத்திற்குள்ளிருக்கும் பொருளனைத்தும் அசேதனம். ஒன்றை நோக்கும் போது ஒன்று சூன்யம். ஆகையால் இவைகளால் சமுதாயத்தையுண்டு பண்ணுவது பொருந்தாது.

பௌத்தமதத்தில் பரமாணு அனைத்தும் க்ஷணிகம். ஒருகணம் இருக்கும் இயல்பினது. மறுகணத்தில் இராது. இந்நிலையில் உள்ள அணுக்கள் சமுதாய ரூப ஐம்பூதங்களையும் எவ்வாறு இயற்றும்? இயற்றாதென்பது பொருள். இயற்றுதல் — செய்வது. எனவே அவர்கள், எனவே சமுதாய ரூப ஜகத்தை யுண்டுபண்ணுகின்றன பரமாணுக்கள் என்று அவர்கள்கூறுகின்றார்கள். அக்கூற்றுக் கூற்றுவனுக்கு ஒப்பாகும். கூற்று கூறுதல். கூற்றுவன்யமன். அவர்கள் — பவுத்தர்கள். இவர்கள் மதம் எள்ளத்தக்கது. எள்ளுதல் — இகழ்ந்துதள்ளுதல். இதனால் இவர் இருவர் மதமும் நிராஹரிக்கப் பெற்றது. இருவர் சவுத்ராந்திகர், வைபாஷிகர். இவர்கள் ஒப்புதல் இந்தமாதிரி — ரூபம், விஞ்ஞானம், வேதனை, சம்க்ஞா, சம்ஸ்காரம் இவை ஐந்தும் ஸ்கந்தங்கள்.

இவைகளில் முதலாவது — பூமிமுதல் நான்கு பூதங்களும் உடல், உரிய இந்திரியங்கள், ஐந்து விஷயங்கள். இவை அனைத்தும் **ரூபஸ்கந்தம்** எனப்படுகின்றன. இவைகள் அனைத்தும் அந்தந்த காரண ரூப சமுதாயங்களோடு சேர்ந்து அதன் காரியங்களை யுண்டுபண்ணுகின்றன என்பது அவர்கள் மதம். அகத்தில் உள்ள அறிவின் மிகுதியை **விஞ்ஞானஸ்கந்த**மென விளம்புவார்கள். இதில் நானென்னும் பிரத்யய முண்டாகிறது. பிரத்யயமென்பது ஞானம். இந்தஞானம் கடஞானம், படஞானம் இடஞான ரூபமாக ஒன்றின் பின் ஒன்றாக வெள்ளம் போல தோன்றுகின்றது. கடம் — குடம், படம் — துணி. இடம் — தேசம். இந்த ஞானத்தை யிவர்கள் கர்த்தா, போக்தா, ஆத்மாவென்று கூறுகின்றனர். இன்பதுன்பமென்னும் அனுபூதியின்னுமம் **வேதனாஸ்கந்தம்**- கொடியைக் கொண்டு இல்லத்தையும் தடியைக்கொண்டு மனிதனையும் அறிவிப்பது **சம்க்ஞாஸ்கந்தம்**, ராகம், துவேஷம், வெகுளி, காமம், மோகம், மதம், பொறாமை, சோகம், பயம் முதலிய சித்தத்தின் தர்மங்களை **சமஸ்காரஸ்கந்த**

மென்று சொல்வார்கள். விஞ்ஞான முதலிய ஐந்து ஸ்கந்தங்களைச் சைத்திகம் என்பார்கள். இவையனைத்தும் சித்தத்தையிடமாகக் கொண்டிருக்கின்றன. ஆகையால் சைத்திகம் எனப்படும். இதில் விஞ்ஞான ஸ்கந்தரூபச் சித்தத்தை ஆத்மாவென்றும், மற்றைய மூன்றையும் சைத்திகமென்றுங் கூறுவார்கள்.

இவைகள் மூலமாக எல்லாத் தொழில்களும் நடக்கின்றன. இவைகளுக்கு வேருக ஆத்மாவென்பது ஒன்றுமில்லை யென்பது இந்த உணர்விலிகள் மதம். இது பேயை ஓட்டுவது போல வேதாந்த விமலஞானத்தால் விரட்டப்படுகின்றது. உங்கள் மதானுசாரம் இதை யெண்ணிப் பார்த்தாலும் பரமாணு பூத பௌதிக ரூப சமுதாயமும் ஸ்கந்தரூபமான ஆப்யந்தர— (உள்ளே) சமுதாயமும் பொருத்த மற்றவை. எதனுலோவெனின், இவையிரு சமுதாயமும் அசேதன மாகும். அசேதனம் - உயிரற்ற பொருள். ஜடமென்பது கருத்து. இவையொன்றை யொன்று நோக்கும் போது சூன்யமாகும். சூன்யம் ஒன்றுமில்லாதத் தன்மை. மேலும் உன் மதத்தில் பரமாணுக்ஷணிகம். ஒருகணமிருப்பது. ஒருகணமிருந்து மறுகணம் இராதபரமாணு இப்பிண்டப் பிரம்மாண்டங்களை யெவ்வாறு இயற்ற முடியும்? முடியாது என்பது பொருள். இந்தபௌத்த ஏகதேசிமதம் வாழ்வுக்குப்பதில் தாழ்வையேத்தரும். ''தந்தன தாழ்வையே தரும ராஜமதம் புவி. தருமராஜர்—புத்தர். புவி = உலகில் என்பது கருத்து.

## அவதாரிகை

பௌத்தமத அநுயாயிகள் பிரதி சங்க்யா நிரோதம். அபிரதி சங்க்யா நிரோதம், ஆகாசம் என்னும் இம்மூன்றையும்விட்டு மற்றவை எல்லா பொருள்களும் ஒரு கணமிருந்து மறுகணம் அழியும் தன்மை யுடையன என்று கூறுகின்றனர். இவை இரண்டு நிரோதங்களும் ஆகாசமும் உண்மையில் ஒரு பொருளில்லை. கணம் - க்ஷணம். நிரோதம் — தடைகள் அல்லது இன்மையேயாம். ஆகாசமும் ஒரு விதத்தில் இல்லை யென்றேக் கொள்ளவேண்டும். ஆகாசத்தையில்லை யென்பதைப் பற்றியினிமேல் வரும் (24) ஆம் சூத்திரத்தில் வெளிப் படுத்துவோம். இவண் அவர்கள் ஒப்புக் கொண்டுள்ள இரண்டு நிரோதங்களை விலக்குவதற்கு சூத்திரம் வருமாறு :-

## ரூ. பிரதிசங்க்யா பிரதிசங்க்யா நிரோத் அப்ராப்தி: அவிர்சேதாத் 22

பிரதிசங்க்யா அப்ரதி சங்க்யா நிரோத அப்ராப்தி: அவிச்சேதாத் என்று பிரிக்கவும்.

ப.உ. பிரதி சங்க்யா அப்ரதி சங்க்யா நிரோத அப்ராப்தி := சந்தானம் சந்தாநி யிவை யிரண்டிலும் புத்தி பூர்வமான நாசமும் அபுத்திபூர்வமான நாசமும் இல்லை. ஏனெனின்? அவிச்சேதாத் = சந்தானமும் சந்தானியும் வேறு பிரிவதில்லை. ஆகையால் இரண்டின் நாசமுண்டாகிறதில்லை.

வி.உ. பௌத்தர்களில் ஒரு சார்பார் வைநாசிகர். இவர் பல்வேறு கல்பனை செய்கின்றனர். அறியப்பட்ட பொருளுக்கும், உத்பாத்ய – உண்டாகப் பட்ட பொருளுக்கும், க்ஷணிகத்திற்கும் புத்தி வேறு என்று கற்பனை செய்கின்றனர். இம்மூன்று பொருள்களுக்கு முறையே பிரதி சங்கியா நிரோதமென்றும், அப்ரதி சங்கியா நிரோத மென்றும், ஆகாசமென்றும் பெயரிடுகின்றனர். இம்மூன்றும் அவர்கள் மதத்தில் அவஸ்து – அபாவம், துச்சம். தோன்றிய பொருள்களுக்கு புத்திபூர்வநாசம் பிரதி சங்கியா நிரோதம். இதற்கு மாறாக அப்ரதி சங்கியா நிரோதம் எனப்படும். இவர்கள் மதத்தில் ஆவரணத்தின் இன்மையே. ஆகாசம் எனப்படும். இவ்வாகாசத்தைப் பற்றி பின்னர் விரிவாகக் கூறப்படும். மேலும் கண்டனமுஞ் செய்யப்படும். இப்பொழுது இவ்விரண்டு நிரோதங்களும் நீக்கப்படுகின்றன. பிரதி சங்கியா அப்ரதி சங்கியா நிரோதம் இவையிரண்டும் இல்லையென்று இயம்ப முடியாது. இயம்புதல் இனிமையாகச் சொல்லுதல். எதனாலோவெனின்? இவை யிரண்டுக்கும் அவிச்சேதம். விச்சேதம் – ஒரு கயிறை யிருகூறாக ஆக்குவது. ஒரு ஆடையை யிரண்டாகக் கிழிப்பது. ஒரு கட்டையை இரண்டாகத் துண்டிப்பது. நிரோதம் – பிரளயம். முந்திய நிரோதம் பூர்ண ஞானத்தினால் உண்டாக்கப்பட்ட ஆத்யந்திக பிரளயம். பிந்தியது இயல்பான பிரளயம்.

இவ்விரண்டு நிரோதமும் எந்தப் பொருளுக்கும் பொருந்தாதென்பது அவர்கள் மதத்திற்கொவ்வாது. அவர்கள் எல்லாப் பொருளுக்கும் ஒவ்வொரு க்ஷணமும் உத்பத்தியும் நாசமும் ஒப்புக் கொள்-

கின்றனர். உத்பத்தி அசத்திலிருந்து உண்டாவதாகவும் கூறுகிறுர்கள் அசத்காரணத்திலிருந்து சத்காரியமும் ஒவ்வொரு க்ஷணத்திலும் தோன்றுவதாகவும் உரைக்கிறுர்கள். இம்மாதிரி முறையைக் கையாண்டால் உத்பத்தியும் நாசமும் ஒரு காலத்தில் நிகழும். எனவே இவையிரண்டிற்கும் பரம்பரையிருந்து வரும். இதை நிறுத்துவதற்கு இவர்கள் மதத்தில் எக்காரணமும் இல்லை. இதனுல் இவர்களுடைய முன்னே சொன்ன இரு நிரோதங்களும் உண்டாக மாட்டா என்பது தெளிவு.

### அவதாரிகை

எல்லாப் பொருளும் க்ஷணிகம், அசத்யம். இவ்வாறு இருந்தும் அறியாமையால் நிலையுள்ளதாயும், சத்யமாயும் நினைக்கின்றுர்கள் என்று பௌத்தர்கள் கூறுகின்றனர். ஞானத்தினுல் அறியாமை அகன்றவுடன் எல்லாப் பொருளும் இன்மையாகி விடுகின்றன. இவ்வாறு புத்திபூர்வக நிரோதத்திற்கு சித்தியுண்டாகின்றது என்பது அவர்கள் அபிமதம். அவர்கள் பௌத்தர்கள். அபிமதம்—எண்ணம். இந்த எண்ணத்தை யிடிப்பதற்கு சூத்திரம் வருமாறு :-

## சூ. உபயதா[4] ச[2] தோஷாத்[3] 23

ப.உ. உபயதா = இரண்டு விதமாகவும். தோஷாத் = குற்றம் உண்டாகிறது. ஆகையால் இவர்கள் மதம் பொருத்தமற்றதேயாம்.

வி.உ. அக்ஞானரூப அறியாமையால் காணப்படும் இந்த உலகம் நிறைந்த ஞானத்தால் அக்ஞானம் நீங்கிய பிறகு அதனுடன் அழிந்து விடுகின்றது என்று ஒருவாறு ஒப்புக்கொண்டாலும் மீண்டும் குற்றமுண்டாகும். எங்ஙனமெனின்? ஒரு காரணமுமின்றி தானுகவே அழிகின்றன என்று எல்லாப் பொருளுக்கும் அபாவம் – இன்மையென்று சொல்லும் சித்தாந்தம் பொருந்தாது. இந்த அப்ரதி சங்கியா விரோத மென்னும் சித்தாந்தத்திற்கு விரோதம் வருவதால் குற்றங்குறைவதில்லை. மயக்கத்தால் எழும் இவ்வுலகம் ஞானமில்லாமலே இயல்பாக அழிந்து விடுகின்றது என்று மொழியினும், அதுவும் பொருந்தாது. ஏனெனின்? ஞானம், அதற்குரிய சாதனங்கள், அதற்காக முயலும் முயற்சியெல்லாம் பயனற்றுப்போகும். எனவே பௌத்தர்கள் மதம் எவ்விதத்திலும் சுருதி, யுக்தி, அனுபவங்களுக்கு ஒவ்வாததேயாம் என்பது குறிப்பு.

**அவதாரிகை**

அவர்கள் மதானுசாரம் ஆகாசம் விசாரிக்கப்படுகிறது. ஆகாசம் ஒரு பொருளல்ல. ஆனால் ஆவரணத்திற்கு எதிர்மறை பொருள். ஆவரணம் — மறைப்பு. இதையும் கண்டிக்கும் பொருட்டு சூத்திரம் வருமாறு:-

## சூ. ஆகாசேச்ச அவிசேஷாத் 24

ஆகாசே, ச, அவிசேஷாத் என்று பிரிக்கவும்.

ப. உ. ஆகாசே = ஆகாசத்தின் விஷயமாக விசாரிக்கும் பொழுது அவர்கள் கூறும் முறை சரியன்று. ஏனெனின்? அவிசேஷாத் = அவர்கள் சித்தாந்தத்தில் விசேஷம் ஒன்றுந் தெரியக்காணோம்.

வி. உ. நிலம், நீர், நெருப்பு முதலிய பாவ பதார்த்தங்கள் காணப்படுகின்றனவோ அப்பொருளைப்போல ஆகாசமும் பாவரூபமாம். பாவம் - தோற்றம். ஆகாசத்தின் இருப்பும் எல்லோர்க்கும் அறியப் படுகின்றது. இருப்பு. சத்தை. நிலம் கந்தத்திற்கும், நீர் ரசத்திற்கும், நெருப்பு உருவத்திற்கும், வாயு ஸ்பர்சத்திற்கும், இருப்பிடம். ஆஸ்ரயம்.—அதுபோல சப்தத்திற்கும் ஆஸ்ரயம் வேண்டும். அதற்கு ஆகாசந்தான் ஆஸ்ரயம் அதற்கு – ஒலிக்கு. வானிலிருந்துதான் ஒலி உண்டாகிறது. வான் இல்லையானால் ஒலியெங்குண்டாகும்? உண்டா காதென்பது கருத்து. ஒவ்வொரு பொருளுக்கும் ஆதாரமும் அவ காசமும் வேண்டும். அவகாசம்— இடம். ஆகாசம் ஏனைய நான்கு பூதங்களுக்கும் ஆதாரம், மேலும் எல்லாப் பொருள்களுக்கும் இடம் ஆம் இதனால் ஆகாசத்தின் சத்தை – இருப்பு புலனாகின்றது. பறவைகள் ஆகாசத்தில் உவகையோடு உலாவுகின்றன. எனவே அவைகளுக்கு விகங்கமம் என்று பெயராயிற்று. எவ்வகைப் பொருளும் அபாவத்தில் உலாவமுடியாது. சுருதியானது ஆத்மாவிலிருந்து ஆகாசம் தோன்றி யிருக்கிறதென்று உறுதிபட உரைக்கின்றது. ''ஆத்மன – ஆகாச: சம்பூத:'' ஆத்மாவிலிருந்து ஆகாசமுண்டாயிற்றென்பது பொருள்.

இது மூலமாக சுருதி, யுக்தி, யநுபவ ரீதியாக ஆகாசத்திற்கு இருப்பு உண்டென்பது உறுதி. ஆகாசம் பாவரூப பதார்த்தம் இல்லையென்பதற்கு யாதொருகாரணமும் அன்று. ஆகையால் ஆகாசம் இல்பொருள் என்று இயம்புவது பௌத்தர்கள் புத்தியீன மென்றேக் கொள்ளப்படும். இல்பொருள்—இல்லாதபொருள்.

### அவதாரிகை

பௌத்தமதத்தில் ஆன்மாவும் நித்யப் பொருள் அன்று. பின்னே க்ஷணிகமாம். எனவே இந்தத் துர்புத்தியை துப்புரவு செய்வதற்கு சூத்திரம் வருமாறு:-

## ஸூ. அநுஸ்மிருதேஸ்ச 25

ப. உ. அநுஸ்மிருதே: = முந்திய அநுபவங்கள் அடிக்கடி நினைப்புக்கு வருகின்றன. ச = இதனால் எந்த ஆன்மாவுக்கு அநுதினம் அநுபவமுண்டாகிறதோ அந்த ஆன்மாக்ஷணிகம் எவ்வாறு ஆகமுடியும் ஆகாதென்பது பொருள்.

வி. உ. எல்லாமக்களுக்கும் முன்னே செய்த வினையின் அநுபவங்கள் மீண்டும் மீண்டும் வருகின்றன. நான் ஒருநாள் ஒருஊரில் ஐந்துநாள் அன்னமில்லாமல் வாசம் பண்ணினேன். வாசம்—வசிப்பது. குழந்தைப்பிள்ளையில் பொல்லாதவனுயிருந்தேன், பண்டைய நாளில் எல்லாப் பொருளும் மாவாக இருந்தன. இவன் முன்னேயெளியனுயிருந்தான் இன்று வலியனுயிருக்கிருன் என்றெல்லாம் ஞாபகமுண்டாகிறது. இது முந்திய அநுபவந்தானே, இதுதான் அநுஸ்மிருதி. இவ்வநுஸ்மிருதி எப்போது உண்டாகும்? அநுபவம் செய்யும் ஆன்மா க்ஷணிகமில்லாமல் என்றும் நிலையுள்ளதாக இருந்தால் உண்டாகுமென்பது பொருள். ஆன்மா க்ஷணிகம்—ஒருகணம் இருப்பது என்று ஒப்புக்கொண்டால் அவ்வநுபவம் பொருந்தாது. எனவேயொரு கணத்திலிருக்கும் ஆன்மாவுக்குப் பல கணத்திலிருக்கும் அநுபவம் எங்ஙனந் தோன்றும். ஆகலின் ஆன்மா நித்யம் க்ஷணிகம் என்னும் பௌத்த சித்தாந்தம் பொருத்தமற்றதேயாம். பசுவைக் கறந்தால் பால்பருகலாம், ஆகாசத்தைக் கறந்தால் பால்அருந்த முடியாதல்லவா, ஆகலின் ஆன்மா க்ஷணிகமென்பது நகைக்குரியவை. எனவே ஆன்மா நித்யமென்பது துணிபு.

### அவதாரிகை

நிலத்தில் விதைத்த வித்து தான் அழிந்து முளையையுண்டு பண்ணுகிறது. பால் தான் கெட்டுத்தயிராகிறது. சிப்பி தனது வயிற்றைக் கிழித்து முத்தையுண்டு பண்ணுகிறது. அதுபோல காரணம் தானுகவே யழிந்து காரியரூபமாக வருகிறது. இம்மாதிரி

அபாவத்திலிருந்து தான் பாவரூபகாரியமுண்டாகிறது. அபாவம்— இன்மை. இந்த பௌத்த மதிஹீனத்தன்மையை மாற்றும் பொருட்டு மறு சூத்திரம் வருமாறு:-

## ஸூ. நாஸதோ அத்ருஸ்டத்வாத் 26

ந, அசத:, அதிருஷ்டத்வாத் என்று பிரிக்கவும்.

ப.உ. அசத := அசத்திலிருந்து காரியம். ந= உண்டாகிற தில்லை. ஏனெனின் ? அத்ருஷ்டத்வாத் = (எங்கும்) காணப்படாமையால்

வி.உ. இன்மையிலிருந்து உண்மையான பொருளுண்டாகிற தென்பது ஊமன் கண்ட கனவது போல் உரைக்க இயலாது. மேலும் கேலிக் கூத்தாகும். விதைக் கெட்டுப்போனால் முளை யெவ்வாறுண் டாகும் ? பால் கெட்டு விட்டால் தயிர் எங்ஙனமாகும் ? சிறிது ஆராய வேண்டும். ஆராய்ச்சியாளரை அவனியும் புகழும், ஆகையால் ''அவஸ்யமேவ விசாரணீய'' மென்பது வாசிஷ்ட்டம். பொருள் வெளி.

வாதி—'நாசதோ அத்ருஷ்டத்வாத்' அபாவத்திலிருந்து பாவப் பொருளுக்கு உத்பத்தியில்லை. ஏனெனின் ? இன்மையிலிருந்து உண்மையான பொருள் உண்டாக வேண்டுமானல் பாலிலிருந்து ஏன் தயிருண்டாக வேண்டும் வித்திலிருந்து ஏன் முளையுண்டாக வேண்டும். எதிலிருந்தும் எதுவும் உண்டாகலாமே ; அவ்வாறு உண்டாகக் காணேம். முயற்கொம்புக்கும் அபாவத்திற்கும் என்ன வித்யாசம் இருக்கிறது ஒன்றுமில்லை யென்பது கருத்து. இன்மையிலிருந்து எல்லாமுண்டாகுமானல் முயற்கொம்பிலிருந்தும் மரம் செடி மற்றும் பிறவும் உண்டாக வேண்டும். அங்ஙனம் காணேம். மேலும் அபாவத்திலிருந்து பாவபதார்த்தம் உண்டாகுமானல் உண்டானப் பொருள்களும் அபாவமாக இருக்கும்.

காரிய முழுதும் காரணத்தைப் பற்றித் தான் இருக்கிறது. காரணம் இன்மையாக இருக்கக் காரிய மட்டும் உண்மையாக எவ்வாறு முடியும். முடியாதென்பது முடிபொருள். வித்து அழிவதில்லை, பின்னை? அதன் அவயவமட்டும் அழிகிறது. அழிவற்ற வித்து மட்டும் முளைக்குக் காரணம் என்பது கருத்து. பால் கெட்டால் தயிராகாது பின்னை?

பாலின் குணமாறித் தயிராகிறது. எனவே தயிருக்குப் பால் காரண மென்பதுப் பொருள். இதனுல் அசத்திலிருந்து சத்துக்கு உத்பத்தி யில்லை, சத்திலிருந்து தான் சத்துக்கு உத்பத்தி யென்பதுத் தெளிவு. உபநிஷத்தில்—அசத்து, அணு என்னும் பல சொற்கள் வந்திருக் கின்றன. அவைகளுக்கு முறையாகப் பொருள்—மறைந்திருந்தது, சூக்ஷ்மம் என்பதுதான். அபாவம் பரமாணு என்பதல்ல,

அவதாரிகை

கூறிய பொருளை சீறியமுறையில் செப்புதற்கு அடுத்த சூத்திரம் வருமாறு : செப்புதல்—கூறுதல்.

## சூ. உதாசீனுனும் அபிச்சைவம் சித்தி: 27

உதாசீநாநாம், அபி, ச, ஏவம், சித்தி என்று பிரிக்கவும்.

ப. உ. ச = மேலும் ஏவம் = இம்மாதிரி. அபாவத்திலிருந்து பாவத்திற்கு உத்பத்தி ஒப்புக்கொள்ளும் பக்ஷத்தில் - உதாசீநாணுமபி = ஒருமுயற்சியும் செய்யாத மக்களுக்கும் காரியங்கள் நிறைவேற வேண்டும். சித்தி: = காரியம் நிறைவேறுதல்.

வி. உ. ஒருவாறு அசத்திலிருந்து சத்திற்கு உத்பத்தியொப்புக் கொள்ளுவோமானுல் ஒரு தொழிலுஞ் செய்யாத சும்மா இருக்கும் சோம்பேறிகளுக்கும் தாம் எண்ணிய காரியங்கள் திண்ணமாக முடிய வேண்டும். ஏனெனின்? அபாவம் எல்லா இடங்களிலும் இயல்பாக இருக்கின்றன. நிலத்தை உழாமலும், நீர் பாய்ச்சாமலும், விதை விதைக்காமலும் ஒன்றுஞ் செய்யாத உழவருக்கும் ஒன்பது வித அன்னமும் வீடுவந்து சேர்ந்துவிடும். ஒன்றும் செய்யாத குயவன் இல்லத்திற்கு மற்கலமும், ஒரு உழைப்புமில்லாத நெசவாளர்க்கு ஆடைகளும், சும்மா இருக்கும் பொற்கொல்லனிடம் அணிகளும், மற்றும் பிறருக்கும் எல்லாந்தானே வந்து அடையும். இவையெல் லாம் அடையும்போது ஒருமுயற்சியும் இல்லாமலே சுவர்க்கம், மோக்ஷம் முதலியவைகளும் உண்டாகும் இதுபொருந்தாது. இதனுலும் அசத்திலிருந்து சத்துக்கு உத்பத்தியென்னும் பௌத்தமதம் புனித மற்றதென்பதுத் தெளிவு. புனிதமற்றது — நன்மையைத்தராதது.

## அபாவாதிகரணம்

### அவதாரிகை

இதுவரை பௌத்தமதத்தில் வரும் க்ஷணிகவாதம் விலக்கப் பட்டது. இனி விக்ஞானவாதத்தை விலக்கும் பொருட்டு அடுத்தப் பிரகரணம் தொடக்கப்படுகிறது. பௌத்தமதானுயாயிகளில் ஒருவன் யோகாசாரன். அவனுடைய மதத்தில் வெளிப்படுகின்றப் புறப் பொருள் உண்மையில் இல்லவேயில்லை. கனவுபோல புத்தியின் கல்பனு மாத்திரந்தான் என்று யோகாசாரன் கூறுகிருன். அதை யகற்றும் பொருட்டு சூத்திரம் வருமாறு:-

# சூ. நாபாவ உபலப்தே: 28

ப. உ. அபாவ: = (அறியப்படுகின்றப் பொருள்களுக்கு) ந = இன்மையில்லை. என்னை? உபலப்தே: = அப்பொருள்களுக்குத் தர்சன முண்டாகிறது.

வி. உ. விக்ஞானவாதி யோகாசாரன் சனிபிடித்தவன் சாகத்-துணிவதுபோல முன்னேவந்து நிற்கிருன். அவனுக்கும் உரியமருந்தை கொடுத்து அவனை ஒட்டவேண்டும். விக்ஞானம்புத்தி. அதில் ஆருட மான சம்ஸ்காரமான பொருள் எல்லாம் பிரமாணம், பிரமேயம், பல வியவகாரமெல்லாம் உண்டாகின்றன. புறத்தில் பொருள்கள் இருந்தாலும் புத்திநிஷ்ட பிரமாணமில்லாமல் பொருள்கள் தோற்ற மாட்டா. ஆனுல் புறப்பொருள் அனைத்தும், எல்லா வியவகாரமும் அகத்தில் உள்ள புத்தியிலிருக்கின்றன என்று எவ்வாறு தெரிகிறது எனின்? விக்ஞானத்திற்கு வேறன்று. விக்ஞானம் புத்தி. எந்தப் பொருளைப் பார்த்தாலும் அந்தந்த ஞானத்திற்கு விஷயம், படஞானம், கடஞானம், ஸ்தம்பஞானம், குட்டி—சுவர்ஞானம் என்று விஷயமா கின்றன. இவையெல்லாம் அந்தந்த ஞானத்திற்கு வேறில்லை. எனவே விக்ஞானத்திற்கு வேறு இன்மையால் விக்ஞானக் கற்பிதம். ஆகையால் விக்ஞானவாதி புறப்பொருள் உண்மையில்லை என்று மொழிகின்ருன்.

கனவில் காணும்பொருள்கள் புறப்பொருள் இல்லாமல் அகத்தில் தோன்றுகின்றன, அதுபோல் என்றறிக என்பது எதிரியின் வழக்கு.

வாதி—'நாபாவ உபலப்தே:' புறப்பொருளை இல்லையென்று கூற இயலாது. ஏனெனின்? அவைகள் கண்கூடாகக் காணப்படு கின்றன. குடம், படம், தம்பம், என்று பொருள்கள் காணக்கிடக் கின்றன. பொறிகளுக்குப் புலனாகும் பொருளை இல்லையென்று எங்ஙனம் சொல்லமுடியும், முடியாதென்பது பொருள். ஒருவன் உண்ணும்போது பசியின் நீக்கமும் உள்ளத்தில் ஒருவித மகிழ்ச்சியும் அநுபவிக்கும் பொழுது நான் நுகரவில்லையென்று சொன்னால் அது பொருந்துமா பொருந்தாதல்லவா. அதுபோல பௌத்த விக்ஞான வாதம் அக்ஞான வாதமெனக் கருதித் தள்ளத்தக்கது.

### அவதாரிகை

உரைத்த மதத்தை முன்னே மாதிரி உதறித் தள்ளுவதற்கு மீண்டும் சூத்திரம் வருமாறு:-

## சூ. வைதர்ம்யாச்ச ந ஸ்வப்னாதிவத் 29

வைதர்ம்யாத், ச, ந, ஸ்வப்னாதிவத் என்று பிரிக்கவும்.

ப. உ. வைதர்ம்யாத் = வேறுபட்ட தருமத்தால். ஸ்வப்னாதிவத் ந சுவப்பனத்தைப் போல இல்லை.

வி. உ. சுவப்பன விக்ஞானம் நஷ்டமாகும்போது நனவில் உண்டாகும் ஞானம் நஷ்டமாகிறதில்லை. இந்தத் திருஷ்டாந்தத்தால் ஜாக்ரஞானம் வீணாகாது. சொப்பன ஞானத்திற்குச் சமானம் ஜாக்ர ஞானமும் புறப்பொருள் இல்லாமலே உண்டாக வேண்டும். ஏனெனின்? இரண்டு ஞானத்திலும் ஞானத்வம் சமானமாக இருப்பதால் என்பது எதிரியின் வழக்கு.

வாதி—பாஹ்யார்த்த ஞானமும் சொப்பன ஞானமும் ஒன்றல்ல. ஏனெனின் ? 'வைதர்ம்யாதிதி' என்பது சங்கரபாஷ்யம். வைதர்ம்யம் என்னது என்பாயாகில்—பாதம், அபாதம். பாதம்—தள்ளத்தக்கது. அபாதம் தள்ளமுடியாதது. சொப்பன அவஸ்த்தையில் காணப்படும் பொருள் நனவில் பாதிக்கப் படுகின்றது. பாதிப்பது பொய்யென்று நிச்சயிப்பது. கனவில் கண்ட புருடன் பொய்யென்று எண்ணுகிறான். ஆனால் நனவில்-பகற்பொழுதில் காணும் தூண், சுவர், புருடன் முதலிய பொருள்கள் அவ்வாறு பாதிக்கப்படுகிறதில்லை.

நித்திரை, மாயை முதலிய காலங்களில் காணும் பொருள்களும் பொய் என்றுத் தள்ளத்தக்கவையேயாம், ஆனால் நனவில் காணும் பொருள்கள் பாதிக்கப்படுகிறதில்லை. மேலும் கனவு சம்ஸ்காரஜன்யம். ஜன்யம்—உண்டாவது. நான் என் மகனை நினைக்கிறேன், இது ஸ்மிருதிரூபம், நான் என்மகனைப் பார்க்கிறேன். இது அநுபவரூபம். முந்தியதில் தந்தைக்கும் தனயனுக்கும் தர்சனமில்லை. பிந்தியதில் இருவருக்கும் தரிசனமுண்டாகிறது. இம்மாதிரி நனவு கனவுகளில் அடுத்த விப்ரயோக சம்பிர யோகமுண்டாகிறது. விப்ரயோகம்—பிரிவு. சம்பிரயோகம்—புணர்வு. இதுதான் வைதரும்யம். இது மூலமாக நனவு கனவு இவை யிரண்டுக்கும் வைதரும்யம் - வேற்று தருமம் கூறப்பட்டு இருக்கிறது.

### அவதாரிகை

புறப்பொருள் இல்லாது போனால் பழைய வாசனை வயமாக புத்தியினால் கற்பிக்கப்பட்டு பல்வேறுப் பொருள்கள் உண்டாகக் கூடும் என்று விக்ஞானவாதி கூறுகின்றார்கள். அதைக் கண்டிக்கும் பொருட்டு அடுத்த சூத்திரம் வருமாறு ;-

## ஸூ. நபா[4]வோ அநுபலப்[3]தே[4]: 30

ந ; பாவ :, அநுபலப்தே : என்று பிரிக்கவும்.

ப.உ. அநுபலப்தே : = உன்னுடைய மதத்தில் புறப்பொருளுக்கு அநுபவம் உண்டாகிறதில்லை. ந.பாவ := அன்னிய வாசனையும் உண்டாக மாட்டாது.

வி.உ. வாசனைகளுக்கு இருப்பு உண்டர்கமாட்டாது. எதனாலோ வெனின் ? நும் மதத்தில் புறப் பொருள் இன்மையால். நும்—உன்னுடைய. பொருள்களைப் பார்க்கும் பொழுதுதான் வாசனை யுதிக்கின்றது. வாசனை அனாதியென்று சொல்வாயாகில் அதுவும் பொருந்தாது. குருடன் கண்ட கனவது போல் உரைக்க இயலாது. ஞான சமூகம் வாசனையால் உண்டாகும் அர்த்தத்தால் உண்டாகாது. சமூகம்—கூட்டம், இம்மாதிரி புறப் பொருளை விலக்கிய பிறகு அகப்பொருளும் இயல்பாக விலகி விடும். வாசனை யெல்லாம் சம்ஸ்கார விசேஷந்தான். சம்ஸ்காரம் ஆஸ்ரயமில்லாது போனால் உண்டாக மாட்டாது. வியவகாரங்களில் அவ்வாறு அறியப்படுகிறது. உன்னுடைய மதத்தில் வாசனைக்கு ஒரு உறைவிடமும் இல்லை, பிரமாணமுமில்லை. இதனால் பௌத்தமதம் வெறுக்கத்தக்கது.

அவதாரிகை

பௌத்த மதத்தில் ஆலய விக்ஞானமென்பது ஒரு பொருள். அதுவும் வாசனையினால்தான் கற்பனை செய்யப்பட்டிருக்கிறது. அதுவும் பொருந்தாதென்று விடும் பொருட்டு சூத்திரம் :-

## ஸூ. க்ஷணிகத்வாச்ச 31

ப.உ. ஆலய விக்ஞானத்தை க்ஷணிகமாக ஒப்புக் கொண்டால் அதுவும் வாசனைக்கு உறைவிடமாக மாட்டாது.

வி.உ. ஆலயவிக்ஞானமும் வாசனையைப் பற்றித்தானிருக்கிறது. பௌத்த மதத்தில் நான்கு சீடர்கள் முக்கியமானவர்கள். 1. மாத்ய மிகன், 2. யோகாசாரன், 3. வைபாஷிகன், 4. சௌத்ராந்திகன், மாத்யமிகன் சூன்யவாதி. யோகாசாரன் விக்ஞானவாதி. வைபாஷிகன் பாஹ்யார்த்த பிரத்யக்ஷவாதி. சௌராந்திகன் பாஹ்யார்த்த அநு மேயவாதி. இதன் விரிவை உரைக்கின் விரியுமென்று அஞ்சி யிங்ஙனம் விடுத்தனம்.

ஆலய விக்ஞானத்திற்கு நிலையிருக்குமானால் க்ஷணிக விக்ஞானம் பொருந்தாது. ஏனெனின்? ஆலய விக்ஞானம் நிலையுள்ளது. க்ஷணிக விக்ஞானம் நிலையில்லது. இவையிரண்டும் பின்னர் விரிவாக விளம்பப்படும். இதனாலும் பௌத்தமதம் நிந்திக்கத்தக்கது.

அவதாரிகை

அதிகமாயுரைப்பதில் பயமென்ன? பௌத்தமதம் முற்றிலும் முரண்பாடுடையது சூத்திரம் :-

## ஸூ: சர்வதா[2] அநுபபத்தேஸ்ச 32

சர்வதா, அநுபபத்தேஸ்ச என்று பிரிக்கவும்.

ப.உ. சர்வதா முற்றிலும். பௌத்தமதம் அநுபபத்தே :— பொருத்தமற்றதேயாம். ச = மேலும் வீடடைய விரும்புபவர்களுக்கு இம்மதம் புறக்கணிக்கத் தக்கது.

வி. உ. நிரம்ப மொழிவதால் ஒருபயனுமில்லை. சுருங்கச் சொல்லி விளங்கவைத்தல் என்னும் முறைப்படி சுருங்க உரைப்பது

நலம். புத்தமதத்தில் சிலநூல்கள் - அவைகளால் கூறப்படும் அவர்கள் மதம் மணற்கேணிபோல சரிந்துகொண்டே போகின்றது. நூல்கள் விநயபிடக - ஆ சா ர சம்பந்திநூல். அபிதம்மபிடக - தர்சனநூல். இவ்விரு நூல்களும் அவர்களுக்குரியவை. இவர்கள் மதத்தில் உறுதி யான பொருள் ஒன்றுங்காணேம்.

வை நாசிகமதமும், பாஷ்யார்த்தவாத, விக்ஞானவாதம், சூன்ய வாதம். இவைமூன்றும் உள்ளவாறு எம்மருந்தாலும் தீராதவாதமாகத் தான் இருக்கின்றன. இதற்கு ஒரே ம ரு ந் து ஆன்மஞானந்தான். வாதம் இரு பொருளைத்தரும். ஒன்று வாதம்—நோய், மற்ருென்று வாதாடுதல். இம்முறை கெட்டவாதங்களை பு த் த ம த அநுயாயிகள் மாகமாரி, பயில்வதுபோல பு னி த் பாரதமக்கள் உள்ளத்தில் பரப் பினர்கள். அதுகாற்றில் மேகங்கலைவதுபோல தள்ளியெறிய வேண்டு வதே மக்களின் கடமை. இம்மதத்தை தழுவுவதால் வீ டு பே று உண்டாகமாட்டாது.

## ஏகஸ்மின் அசம்பவ அதிகரணம்

### அவதாரிகை

சுகதமதத்தை இதுவரை விலக்கி இனி ஜைனமதம் விலக்கப் படும். சுகதமதம்—பௌத்தமதம். ஜைனமத சித்தாந்தத்தை நி ரூ பி த் து விலக்குவதற்காக சூத்திரம் வருமாறு:-

## சூ நைகஸ்மின் அசம்பவாத் 33

4

ந, ஏகஸ்மின், அசம்பவாத் என்று பிரிக்கவும்.

ப. உ. ஏகஸ்மின்=ஒரு உண்மையுள்ள பொருளில் அசம்பவாத் மாறுப்பட்ட தருமங்களை ந: கற்பிக்க முடியாது.

வி. உ. இதுவரை பௌத்தமதம் நிராகரிக்கப்பட்டது. இனி ஜைனமதத்தை விலக்கும் பொருட்டு அதன் விரிவை இவண் கூறப் படுகிறது. (இவண்—இங்கு) ஜை ஜ ன ம த த் தி ல் ஏழு பொருள்கள் கொள்ளப்படுகின்றன. அவை வருமாறு— (1) ஜீவன் (2) அஜீவன் (3) ஆஸ்ரவ (4) சம்வர (5) நிர்ஜா (6)பந்தம் (7)மோட்சம் சுருக்கமாகச் சொன்னல் ஜீவன், அஜீவன் எனும் இருபொருட்கள் கொள்ளப் படுகின்றன. ஏனைய ஐந்தும் இவ்விரண்டில் அடங்குகின்றன, என்பது

இவர்கள் மதம். இவர்கள்—ஜைனர்கள். இஃது அல்லாமலும் ஐந்து பொருள்களை இவர்கள் ஒப்புக்கொள்கிறார்கள். அவை:- 1. ஜீவாஸ்தி காயம் 2. புத்கலாஸ்திகாயம் 3. தர்மாஸ்திகாயம் 4. அதர்மாஸ்தி காயம் 5. ஆகாசாஸ்திகாயம். இவை முறையாக இருக்கின்றது என்னும் சொல்லுக்கு விஷயமாக இருப்பது அஸ்திகாயம். பூரித்தும் முடிவில் தவிழ்ந்து போவதால் புத்கலாஸ்திகாயம். (நிறைந்தும், நலிந்தும், அழிந்தும் போவதால் புத்கலாஸ்திகாயம்) தொழில்கள் மூலமாக அறியப்படுவது தர்மாஸ்திகாயம். மேல்நோக்கி செல்கின்ற ஜீவன் நிலைத்திருப்பதற்கு எந்ததேகம் உண்டோ அது அதர்மாஸ்தி காயம். மறைப்பு இன்றிய பொருள் ஆகாசம் அதில் நிலைத்திருப்ப தால் ஆகாசாஸ்திகாயம்.

ஆஸ்ரவ — பொய்யான ப்ரவர்த்தி ஆஸ்ரவ. மெய்யான ப்ரவ்ருத்திசம்வரம், நிர்ஜரம், ப்ரவ்ருத்தி = தொழில். சமம் = மன அடக்கம். தமம் = பொறியடக்கம் இவை இரண்டும் சம்வரம். பழை மையான பாவ புண்ணியத்தின் சம்ஸ்காரத்தை நாசம் பண்ணுவது நிர்ஜரம். எட்டுப் பிரகார கர்மங்கள் ஜன்மத்திற்கு ஏதுவாக இருப் பதால் அவை பந்தம். எல்லா விதமான துவேசமும் நீங்கி இன்பத்தின் ஆக்கம் மோட்சம் எனப்படும். இம்முறையாக ஜீவன், அஜீவன் என்னும் இருவருடைய விரிவு சுருக்கமாக உரைக்கப்பட்டது.

இது இவர்கள் மதத்தில் சப்த பங்கி நியாயம் என்று மொழியப் படுகின்றது. ஸ்யாதஸ்தி = ஒருவேளை. ஸ்யாத்நாஸ்தி = ஒருபோதும் இல்லை. கதஞ்சித் இவைகளைக் கூறுமிடத்து விரியும் என்று அஞ்சி இங்ஙனம் விடுத்தனம். கதஞ்சித் — ஒருவேளை.

வாதி சூத்திரக்காரர் பகவான் வ்யாசர் இந்த சூத்திரத்தின் மூலமாக இவர்கள் மதத்தை நிராகரிக்கிறார். பொருந்தாதென்று வெறுத்துத் தள்ளுவது பொருள். காரணம் யாதோவெனில்? எந்தப் பொருள் உண்மையாக இருக்கிறதோ அதில் பலவித வேற்றுமைகள் உண்டாகக்கூடும். ஆனால் விரோதங்கள் உண்டாகக்கூடாது. எந்தப் பொருள் உண்மையோ அதற்கு இன்மை என்பதில்லை. எது இல்லையோ அதற்கு இருப்புக் கிடையாது.

''நாசதோ வித்யதே பாவோ நாபாவோ வித்யதே சத:(ப.கீதை)
அசத் பொருளுக்கு உண்மை கிடையாது. சத் பொருளுக்கு

இன்மை கிடையாது. சத் சத்துதான். அசத் அசத்துதான். உண்மை உண்மையே; இன்மை இன்மையே என்று உணரவேண்டும் ஆகையால் இதற்குப் புறம்பானதால் ஜைனமதம் யுக்தி வாதமேயொழிய சாத்திரவாதமன்று. இதனுல் இவர்கள் மதம் வீடுபேற்றைத்தராது என்பது இனிது புலனும்.

அவதாரிகை

ஜைனர்கள் ஆத்மா தேகஅளவு என்றுதான் ஒப்புக் கொள்ளுகிருர்கள். அதை யகற்றும் பொருட்டு சூத்திரம் வருமாறு :-

## சூ. ஏவம்ச ஆத்மாகார்த்ஸ்ன்யம் 34

ஏவம், ச, ஆத்மா, அகார்த்ஸ்ன்யம் என்று பிரிக்கவும்.

ப.உ. ஏவம்ச - இம்மாதிரி ஜைன மதத்தில் ஆத்மா = ஆத்மாவில் அகார்த்ஸ்ந்யம் = பரிச்சின்னத்வதோஷம் உண்டாகும். இதனுல் ஆன்மா குடமுதலியப் பொருளைப்போல அநித்யமாகும். அநித்யம் — அழிவுள்ளதாகும்.

வி.உ. எவ்வாறு ஒருபொருளில் இரு வேறுபட்ட தருமங்களை யொப்புக் கொண்டால் முறையாகாதோ அதுபோல எங்கும் நிறைந்த ஆன்மாவை உடலளவுக்கு ஒப்புக் கொள்வதும் ஒவ்வாது. பொருந்தாதென்பதுக் குறிப்பு. ஏனெனின்? ஒருவன் சரீர அளவுள்ள ஆன்மா அவன் வினையின் பயனுக எறும்பு உடல் கிடைக்குமானுல் இந்த மனிதஅளவு ஆன்மா எறும்பு உடலளவு எங்ஙனம் ஆகமுடியும்? முடியாதல்லவா. இம்மாதிரி அவன் வினையின் பயனுக யானை யுடல் கிடைத்தது, மனித உடம்பு அளவுள்ள ஆன்மா யானை உடலளவு எவ்வாறு ஆகமுடியும், முடியாதென்பது கருத்து. மேலும் மனித உடலும் குழந்தைப் பருவத்திலுள்ள உடல் காளைப் பருவத்தில் இல்லை. அதுவும் முதியப் பருவத்தில் இல்லை. இங்ஙனம் இருக்க ஆன்மாவிற்கு எந்த அளவை யேற்றுக் கொள்வது? இஃதன்றியும் உடலிலுள்ள ஒரு உறுப்பு ஊனமுற்ருல் ஆன்மாவிற்கும் ஊனமுற வேண்டும். அங்ஙனங் காணேம். இப்படி விசாரிக்கும் பொழுது ஆத்மா உடலளவு என்பது உணர்வுடையோர் உரைக்கும் உரையன்று. எனவே ஜைன மதம் நிந்திக்கத்தக்க தென்பதுத் தெளிவு.

அவதாரிகை

ஒருவாறு ஆன்மா, சிறிய உடலில் சிறியதாகவும் பெரிய உடலில் பெரிதாகவும் இருக்கும். ஆகலின் எங்கள் மதம் போற்றத் தக்கதேயாம் என்று ஜைனர்கள் கூறும் பக்ஷத்தில் அதை விலக்கும் பொருட்டு சூத்திரம் வருமாறு :-

## சூ. நசபர்யாயாதபி அவிரோதோ விகாராதிப்ய: 35

ந.ச, பர்யாயாத், அபி, அவிரோத ;, விகாராதிப்ய : என்று பிரிக்கவும்.

ப.உ. பரியாயாதபி=முறையாக அவயவங்கள் விலகினும் அல்லது பொருந்தினும், ந அவிரோத :=சரீர பரிமாணத்திற்கு அவிரோதம் இல்லை. விரோதமிருக்கிறதென்பது பொருள். எதனாலோ வெனின் ? விகாராதிப்ய : அவயவங்களோடு ஆன்மாவை யொப்புக் கொண்டால் அதற்கு விகாரமுண்டாகும். (அதற்கு - ஆன்மாவிற்கு) ஆத்மா அநித்யமானால் பந்தம் மோக்ஷம் என்னும் முறை பங்கமாகும். பங்கம்-அழிவு.

வி.உ. ஆன்மா, எப்பொழுது சிறிய உடல் கிடைக்குமோ அப் பொழுது சிறியதாகவும், எப்பொழுது பெரிய உடல் கிடைக்குமோ அப்பொழுது பெரிதாகவும் ஆகிவிடும் என்று ஜைனர்கள் மொழிவா ரானால் அது முறையன்று. ஏனென்னின்? அவர்கள் மதானுசாரம் ஆத்மாவில் உள்ள குற்றம் விலகவில்லை. அவர்கள் முறைப்படி ஆத்மாவை ஏற்றுக்கொண்டால் அநேகக் குற்றங்கள் வரும். அவை விகாரி — மாறுபாடுடையது. உறுப்புக்களோடு கூடியது, அநித்யம். இம்மாதிரி இன்னும் அளவில் குற்றம் ஆன்மாவிற்கு வரும். எந்தப் பொருள் குறைதலும் மிகுதலும் உடையதோ அது அவயவமுடைய தாகும். ஆனால் ஆத்மா அவயவங்களோடு கூடியதன்று. மிகுதலும் குறைதலும் உள்ள ஆன்மா நிலையுள்ளதாக இருக்க முடியாது. ஆனால் ஆத்மா நிலையுள்ளதாக யாவரும் ஒப்புக்கொண்டிருக்கிறார்கள் ''மிகு தலும் குறைதலும் ஆக்கையின் கூறே'' பொருள் வெளி.

ஆத்மாவிற்கு விகாரமென்னுங் குற்றமும் வரும். ஆனால் ஆத்மா நிர்விகாரி. விகாரமற்றது. இம்மாதிரி சமயானுசாரம் ஆன்மா சிறிது பெரிதாக ஆகமுடியாது. அங்ஙனம் ஆனால் மேலே சொன்னக் குற்றம் அனைத்தும் உண்டாகும். எனவே ஜைனமதம் அறிஞர்களால் கொள் ளத்தக்கதன்று. எனபதுக் குறிப்பு.

### அவதாரிகை

ஜீவாத்மவை சரீர அளவுக்கு ஒப்புக்கொண்டால் முற்றிலும் பொருத்தமற்றதேயாம். என்பதை மீண்டும் நிலே நிறுத்தும் பொருட்டு அடுத்த சூத்திரம் வருமாறு:—

## சூ· அந்த்யாவஸ்த்தி தேஸ்சோபய நித்யத்வாத் அவிசேஷ: 36

அந்த்ய, அவஸ்த்திதே:, ச, உபய, நித்யத்வாத், அவிசேஷ: என்று பிரிக்கவும்.

ச = மேலும் அ ந் த் ய அவஸ்த்திதே: = முக்தி நிலேயில் ஜீவனுடைய (பரிமாணம்) அளவு அவனுக்கு எப்போதும் உள்ள நிலேயை ஒப்புக்கொள்ளப் பட்டிருக்கிறது. ஆகையால் உபயநித்யத்வாத் = அடியிலும், மையத்திலும் ஜீவனுக்குள்ள அளவு நித்தியமாகிவிடும். எனவே அவிசேஷ: = ஒரு விசேஷமும் உண்டாகிறதில்லே. எல்லா உடலிலும் ஆன்மாவின் அளவு ஒன்றுபோல ஆகிவிடும்.

வி. உ. ஜைனமதத்தில் முக்தி நிலேயில் ஜீவனுக்கு என்ன அளவு கொள்ளப்பட்டிருக்கிறதோ அது அந்த ஜீவனுக்கு உண்மையான அளவு என்று அவர்கள் ஒப்புக் கொண்டிருக்கிருர்கள். அவர்கள் —ஜைனர்கள். இந்நிலேயில் அளவு கூடுவதுமில்லே குறைவதுமில்லே. ஆகையால் அடியிலும் நடுவிலும் உள்ள அளவையும் ஆன்மாவிற்கு நித்யமென்றே ஒப்புக்கொண்டு ஆகவேண்டிய அவஸ்யம் நேரிடும். இதனுல் என்னவாகும்? இடையில் எந்த உடலிலும் இவ்வாத்மாவின் அளவு மாறுவதில்லே. இந்நிலேயில் எந்தச்சிறப்புமில்லே. இதனுல் ஆன்மாவை சரீரஅளவு ஒப்புக்கொள்ளுவது அறிஞருக்கும் ஆரணத்திற்கும், அநுபவத்திற்கும் பொருந்தாதென்பது குறிப்பு. ஆரணம்—வேதம்.

### பத்யதிகரணம்

இதுவரை கடவுள் இல்லேயென்னும் வாதிகள் மதத்தைப் புல்லெனத்தள்ளிவிட்டு இவண் பாசுபத மதத்தின் வரும் குற்றங்களேயகற்றும் பொருட்டு அடுத்தப் பிரகரணம் தொடக்கப்படுகிறது. சூத்திரம் வருமாறு:-

# ஸூ. பத்யுரஸாமஞ்ஜஸ்யாத் 37

பத்யு:, அஸாமஞ்ஜஸ்யாத் என்று பிரிக்கவும்.

ப. உ. பத்யு: = ஈசன், மாயை முதலிய காரணங்களுக்கு ஏவுதல் செய்வதால் உலகிற்கு நிமித்தக்காரணம் ஆகமாட்டான். அசாமஞ் ஜஸ்யாத் = படைப்பு மாறுபட்டு இருப்பதால் வெறுப்பும் விருப்பும் உண்டாகும். அவையிரண்டும் ஈசனைப் பற்றமாட்டா.

வி. உ. இங்கு ஈசன் இவ்வவனிக்கு நிமித்தக்காரண மட்டும் ஆவர் என்னும் மதத்தை விலக்கும் பொருட்டு 'பத்யு': என்றார். இது எங்ஙனம் தெரிகிறது எனின்? 'பிரகிருதிஸ்ச' ''அபித்யோபதேசாச்ச'' இந்த சூத்திரங்களில் ஆசாரிய சங்கரர் ஈசனை முதற்காரணரூபமாகவும் நிமித்தக் காரணரூபமாகவும் ஒப்புக் கொண்டிருக்கிறார். இங்கு முதற் காரணம் வேறு. முதற்காரணம் — உபாதானக் காரணம். நிமித்தக் காரணம் வேறு என்று சொன்னால் முன்னுக்குப்பின் முரணாகும்.

வேதத்தில் ஒப்புக் கொள்ளாத ஈசுவர வாதம் பல்வேறு வித மாக இருக்கின்றது. சிலர் பிரதானம் புருஷன் இவ்விருவருக்கும் புகலிடமாக இருக்கும் ஈசன் உலகிற்கு நிமித்தக் காரணன் என்று கூறுகின்றனர். இவர்கள் சாங்கிய மதத்தைத் தழுவியவர்கள். பிரதானம், புருஷன், ஈசுவரன் இவர் மூவரும் தனித்தனியே யென்- கின்றனர். காரியம், காரணயோகம், விதி, மோக்ஷம் இவை ஐந்தும் மஹேசுவரனால் பசுபாச ஜீவனது பந்தத்தை யொழிக்கும் பொருட்டு உபதேசிக்கப் பட்டிருக்கின்றன என்று பாசுபதமத அநுயாயிகள் பகர்கின்றனர். பகர்தல் — சொல்லுதல். ஈசன் நிமித்தக் காரணன் என்பது இவர்களுக்கும் உடன்பாடு. இவர்கள் — பாசுபதர்கள். பசுபதி மதத்தை யேற்றுக் கொள்பவ ரென்பதுக் குறிப்பு.

இவர்கள் மதத்தில் வரும் சிறியக் குற்றங்களை யினிது அகற்றும் பொருட்டு வாதி — ''பத்யு: அசாமஞ்ஜஸ்யாத்'' பதி — ஈசுவரன், பிர தானம், புருஷன் இவர்களுக்கு அதிஷ்ட்டான ரூபமாக ஜகத்திற்குக் காரணமாக மாட்டான். எதனாலோ வெனின்? பொருத்தமில்லாதத் தன்மையால். இவர்கள் கூறும் உபாயம் — ருத்ராக்ஷம், சூலம், விபூதி, ஜடைகுண்டலம் இவைகளைத் தரித்தால் முக்தியுண்டாகுமென்று மொழிகின்றனர். இதுவும் விந்தையாக இருக்கிறது. மேற்கூறிய

அடையாளங்களுக்கு முத்திரை யென்று பெயர். இவைகளை நெருப்பில் சுடவைத்து உடலில் முத்திரை யிடுவதால் இவைகளுக்கு முத்திரை யென்று பெயரிடப் பெற்றிருக்கிறது. ''பவமதனையற மாற்றும் பாங்கினில் ஓங்கிய ஞானம்'' தேவாரம். பெருமை பொருந்திய ஞானம். பவமதனை = பிறப்பும், இறப்பும், நிறைந்தத் துன்பத்தை. அற மாற்றும் = முற்றிலும் கெடுக்கும் என்பது பொருள். இதுதான் வேதப் பொருள். சின்னங்களைத் தரிப்பதால் முக்தியென்பது உபசாரம். இதனுல் பசுபதிமதம் தள்ளத்தக்கது.

அவதாரிகை

இப்பொழுது பாசுபத மதானுயாயிகள் ஈசுவரனை இவ்வுலகுக்கு நிமித்தக் காரணமாகக் கூறுவதை விலக்கும் பொருட்டு சூத்திரம் வருமாறு :-

## சூ. சம்ப[3]ந்தா[4]நுபபத்தேஸ்ச 38

ப.உ. பிரதானமும், புருஷனும், ஏவல் ஆள்(அடிமை) பிரதானம் — மாயை. ஈசன் இயக்குபவன். இவர்களுக்கு சம்பந்தம் = தொடர்பு. அநுபபத்தே := பொருத்தமற்றத் தன்மை.

வி.உ. எதிரி — பிரதானம், புருஷன், ஈசன் இம்மூவரும் தொடர்பற்றவர்கள் என்று பசுபதி மதஸ்தர்கள் கூறுகின்றுர்கள். முந்திய இருவரோடு சம்பந்தமில்லை யென்ருல் பிரதானத்தையும் புருஷனையும் எவ்வாறு ஈசன் ஏவமுடியும்? முடியாதென்பது கருத்து. இவர்களுக்கு சம்யோக சம்பந்தமுண்டாக முடியாது. நேரடி சம்பந்தம் பொருந்தாது. இவர்கள் மூவரும் எங்கும் நிறைந்தவர்கள், இவர்களுக்கு உறுப்புக்கள் இல்லை. வேதாந்த முறையாக விசாரம் பண்ணினுல் பிரஹ்மத்தைத் தவிர எல்லாப் பொருளும் அவயவங்களுடையனவாம். ஈசன் ஒருவனே அவயவமின்றியவன். ஈசுவரன் அவயவமுடையவனுனல் சம்பந்தமுண்டாகக் கூடும். இறைவன் உடல் உறுப்பு இவைகள் இன்றியவன். யாருக்கு வேதம் பிரமாணமோ அவர்களுக்கு யுக்தி வாதத்தினுல் பொருளை நிலைநிறுத்த வேண்டுவதில்லை. வேதம் இறைவனை யெவ்வாறு மொழிகின்றதோ அவ்வாறு அவர்கள் ஒப்புக்கொள்கின்றனர். ஆகையால் சர்வசக்திமான் இறைவன் இயல்பாக உபாதான காரணமாகவும் நிமித்தக் காரணமாகவும் இருக்கிருனென்று எண்ணுகிருர்கள்.

யுக்திவாதிக்கு யுக்திமுக்கியம், வேதத்தில் யாருக்கு (உண்மையான நிஷ்டடை) உறுதியான எண்ணம் இருக்கிறதோ அவர்க்கு யுக்தி தேவையில்லை. மரியாதையில்லை யென்பதுத் தெளிவு. வேதத்தில் என்ன உரைத்திருக்கிறதோ அதுவே சத்யம். யுக்திவாதம் புத்தி நிஷ்ட்டம். புத்தியைப் பற்றியிருக்கிறது. ஆனால் இந்தப் பாசுபதமதம் வேதத்தாலும் நிலையுள்ளதில்லை. யுக்தியாலும் நிலையுள்ளதல்ல. இதனால் இதையும் தூரத்தில் விட்டுவிட வேண்டும்.

அவதாரிகை

கூறிய மதத்தில் மீண்டும் குற்றந் தெரிவிக்கும் பொருட்டு அடுத்த சூத்திரம் வருமாறு :-

## ஸூ. அதிஷ்ட்டாநாநுபபத்தேஸ்ச 39

ப.உ. அதிஷ்ட்டான அநுபபத்தே := ஆதாரமின்மையால். இறைவனை வெரும் நிமித்த காரணமாகச் சொல்லக் கூடாது.

வி.உ, ஈசுவரனை நிமித்தக் காரணமாக ஒப்புக் கொள்ளும் பக்ஷத்தில் முறைகேடுகள் மீண்டும் வரும். எவ்வாறெனின்? குடம் ஒரு காரியப் பொருள். அதற்கு மண், உபாதான காரணம், குயவன் நிமித்தக்காரணம். தண்டம், சக்ரம் துணைக்காரணம். இவ்வாறு ஒரு காரியத்திற்குப் பல காரணம் உள. இதில் குயவன் சரீரம் உடையவனாய் இருப்பதால் மண் முதலியக் காரணங்களோடு சம்பந்தப்பட்டு குடத்திற்கு நிமித்தக் காரணமாக ஆகிறான். ஆனால் ஈசன் அங்ஙனமன்று. ஏனெனின்? ஈசனுக்கு உடல்இல்லை, யுறுப்பில்லை, ஒள்ளிய கருவிகரணங்களுமில்லை. குயவனும் மண்ணும் உருவமுடையவை, ஈசனோ உருவமற்றவன்; ஆகையால் இஜ்ஜகத்திற்கு ஈசன் நிமித்தக் காரணன் என்பது எள்ளளவும் பொருத்தமற்றதேயாம். சாங்கிய மதத்தில் பிரகிருதிக்கு உருவமில்லை, அருவமான பிரகிருதியைப் பற்றி இறைவன் இவ்வுலகத்திற்கு நிமித்தமாவது, மனிதன் தலையால் நடக்கிறான் என்பதோடொக்கும். அதுபோல உருவமில்லாத பிரதானத்தையொட்டி இறைவன் ஜகத்திற்கு நிமித்தமாவது. இதனால் பாசுபதமதம் தள்ளத்தக்கது.

அவதாரிகை

அங்ஙனமானால் இறைவனை அவயவங்களோடு கூடினவனாக ஏன் ஒப்புக்கொள்ளக் கூடாதெனின்?

## ஸூ. கரணவச்சேந் ந போகாதிப்ய: 40

கரணவத், சேத், ந, போகாதிப்ய: என்று பிரிக்கவும்.

ப.உ. கரணவத்=இந்திரியம், பிரத்யக்ஷமன்று. ஆனாலும் அவைகள் ஜீவனால் ஏவப்பட்டு தொழில் செய்கின்றன. அதுபோல் ஈசனும் அருவமான பிரகிருதியைப் பற்றி ஏன் நிமித்தக் காரணம் ஆகமுடியாதெனின்? போகாதிப்ய:=அவ்வாறு ஒப்புக் கொள்ளும் பக்ஷத்தில் ஜீவனைப் போல ஈசனுக்கும் இன்ப துன்பங்கள் நுகரும் படியாய் வரும்.

வி. உ. இந்திரியங்களும் அருபம் பிரதானமும் அருபம் பொறி களைப்போல பிரதானத்தையும் ஒப்புக்கொண்டு ஈசனை ஏவுபவனாகக் கொண்டால் ஜீவனுக்கு இன்பதுன்பங்கள் பொருந்துவதுபோல இறைவனுக்கும் பொருந்தும். இறைவனுக்கு இன்பதுன்பத்தை உண்டென்று உரைப்பது மதிஹீனம். புத்தியில்லாதத்தன்மை என்பது பொருள். உலகில் குடிகளுக்குத் தான்பற்றுக்கோடாகவும், உடல் உடையவனாகவும் இருந்துகொண்டு ஆள்பவனை நாட்டுக்கு அரசன் என்று சொல்லப்படுகிறது. மக்களைப் பற்றுமலும், உடல் இல்லாமலும் இருப்பவன் அரசன் ஆகமாட்டான். இந்த எடுத்துக் காட்டுமூலமாக அருவமுள்ள இறைவனுக்கு உருவமுள்ள உடல், இந்திரியம் இவைகளைக் கற்பிக்கவேண்டும். ஆனால் அவ்வாறு இறைவனுக்கு கற்பனை செய்ய இயலாது. ஏனெனின்? உடல், உறுப்பு, அவயவம் எல்லாம் படைப்புக்குப் பிறகுதான் உண்டாகும். படைப்புக்கு முன் இவைகள் இறைவனுக்கு எங்ஙனம் பொருந்தும்? பொருந்தா தென்பது பொருள்.

மேலும் இறைவனுக்கும் உலகத்தவர்போல் உடல், உறுப்பு உள்ளம் இவைகளைக் கள்ளமில்லாமல் கற்பித்தால் இறைவன் சம்சாரி ஆவான். பிறகு தோற்றமும் ஒடுக்கமும் துணிவென நிற்கும். கடவுள் என்னுந்தன்மை அழியும். எலியைப் பிடிக்கப்போய் புலிவாயில் அகப்பட்டார் போல ஆகிவிடும். அநீஸ்வரவாதம் மிஞ்சும் என்பது கருத்து. அநீஸ்வரவாதம்—ஈசன்இல்லை என்னும் வாதம். இதனாலும் பாசுபதமதம் குற்றமுடையதென்பது இனிது புலனாம்.

அவதாரிகை

இன்னும் இம்மதத்தை இனிது விலக்கும் பொருட்டு சூத்திரம்.

## ஸூ. அந்தவத்வம் அஸர்வக்ஞதாவா 41

அந்தவத்வம், அஸர்வக்ஞதா, வா, என்று பிரிக்கவும்.

ப. உ. அந்தவத்வம்=அளவுள்ள எண்ணும் அளவுமுண்டாகும் வா=மேலும் அசர்வக்ஞதா=ஈசன் அற்பமதியை உடையவனுவான்.

வி. உ. பிரதானத்தையும், ஜீவனையும், தனதளவையும் ஈசன் அறிகிருனு, இல்லையா என்பது முதற்பக்ஷம். முதற்பக்ஷத்தை ஒப்புக் கொள்ளின் 'அந்தவத்வம்' பரிச்சின்னத்வம், அளவும், இங்கு அளவு என்பது எண்—தொகை. பரிச்சின்ன பரிமாணம் இவையெல்லாம் உண்டாகும். எனவே நாசமும் ஏற்படும். குடத்தைப்போல அழியு மென்பது கருத்து. இரண்டாவது பக்ஷத்தில், ஈசன் இவைகளையறிய வில்லை. என்னும் பக்ஷத்தில்— 'அசர்வக்ஞதா' சிற்றறிவுடையவன் மகேசன் என்னுங் குற்றம் உண்டாகும்.

எதிரியின் மதத்தில் ஈசன் அநந்தன், சர்வக்ஞன். இம்மாதிரி பிரகிருதி, ஜீவன், இவர்களும் அனந்தம். அதனுல் ஜீவன் எத்தனை பிரகிருதிக்கு இலக்கணமியாது என்று இறைவன் அறிகிருனு இல்லையா என்பது கேள்வி? அவர் அறிவுக்குள் வரும் ஜீவனுக்கும் பிரகிருதிக்கும் அவர்க்கும் அழிவு திண்ணம். அவர்—ஈசர். இதற்காக ஈசன் அறிய வில்லை என்பார்களானுல் சிற்றறிவுடையவர் என்றுப் புகலப்படும். ஜீவனையும், பிரகிருதியையும் அந்தமுள்ளவர்கள் என்று ஒப்புக்கொள்ள வேண்டும். அல்லது ஈசுவரனைச் சிற்றறிவுடையவன் என்று செப்ப வேண்டும். இம்மாதிரி கூற இயலாததால் அவர்கள் மதத்தில் உள்ள குற்றம் அப்படியே இருக்கிறது. எனவே இம்மதம் இனியதல்ல என்பது துணிபு.

### உத்பத்தியதிகரணம்

அவதாரிகை

இதுவரை ஈசுவரனை நிமித்தக் காரணமட்டும் ஒப்புக்கொண்ட பாசுபதமதம் விலக்கப்பெற்றது. இனி பாஞ்சராத்திரமதம் சிறிது பரிசீலிக்கப்படுகிறது. சூத்திரம் வருமாறு:-

# ஸூ. உத்பத்திய சம்ப்வாத் 42

உத்பத்தி, அசம்பவாத் என்று பிரிக்கவும்.

ப. உ. ஜீவனுக்கு உத்பத்தி சம்பவமில்லை. ஜீவனுக்குத் தோற்றம் உண்டென்பது முறையன்று.

வி. உ. வைஷ்ணவர்களுக்கு முக்கியமான நூல் பாகவதம். அங்கு பாஞ்சராத்திர பிரகரணம் கூறப் பெற்றிருக்கிறது. அவை— பகவான் வாசுதேவன், சங்கர்ஷணன், பிரத்யும்னன், அநிருத்தன், பாகவத நூலுக்கு பாஞ்சராத்திர ஆகமமென்று பெயர், பரப்பிரஹ்மத்திலிருந்து வாசுதேவன் என்னும் பெயரும் வாசுதேவனிலிருந்து சங்கர்ஷணன் என்னும் பெயரும் சங்கர்ஷணனிலிருந்து பிரத்யும்னன் என்னும் பெயரும், பிரத்யும்னனிலிருந்து அநிருத்தன் எனும் பெயரும் உண்டாயின. முறையாக பகவான், ஜீவன், மனம் அகங்காரமெனப் பெயர் பெறுகின்றன. இவ்வாறு வாசுதேவன் நான்கு வியூகங்களைக் கற்பிக்கிறார். இவர்களில் வாசுதேவன் பரமாத்மா எனப்படுவர். மேலும் வாசுதேவனை பராபிரகிருதியென்றும் மற்றையவரை காரியரூபம் என்றும் சொல்லுவார்கள்.

இம்மாதிரி பரமேசுவரனுடைய பக்கம் செல்லுதல்; உபதானம்— பூஜைக்கு வேண்டிய பொருள்களை சேகரிப்பது. இஜ்யா - பூஜை. ஸ்வாத்யாயம்—அவன் நாமங்களை ஜெபிப்பது. இங்ஙனம் நீண்ட காலம் இறைவனை வழிப்பட்டால் எல்லாத்துன்பங்களும் விலகி பகவானைச் சேருவார்கள் என்பது அவர்கள் மதம். அவர்கள் வைஷ்ணவர்கள். ஒருவன் அநேக ரூபமாவது குற்றமில்லை. அஃதல்லாமலும் பகவானுக்கு வழிபாடுகள் செய்து அவனைப் பெறுதலும் குற்றமில்லை. இவைகளுக்கு விரோதமுமில்லை. இவைகள் சுருதிகளால் கொள்ளப் படுகின்றன.

ஆனால் வாசுதேவனிலிருந்து சங்கர்ஷணன் உத்பத்தியாகின்றான், சங்கர்ஷணனிலிருந்து பிரத்யும்னன், பிரத்யும்னனிலிருந்து அநிருத்தன் உண்டாகிறான் என்பது பொருத்தமற்றதேயாகும். ஏனெனின்? வாசுவேன் என்னும் பரமாத்மாவிலிருந்து சங்கர்ஷணன் என்னும் ஜீவன் உண்டாகிறான் என்பது பொருந்தாது, இதனால் அநித்யத்வ முதலியக் குற்றங்கள் நிகழும். இஃதல்லாமலும் இறைவனையும் அடைய முடியாது. மோக்ஷமில்லையென்பது முடிவு. எதனாலோவெனின்? காரணத்தையடைவதில் காரியத்திற்கு ஒடுக்கம் உண்டாகும். சுருதிகளில் ஜீவனுக்கு உத்பத்தி உரைக்கவில்லை.

''நாத்மா அஸ்ருதே :'' சூ. ஜீவனுக்குத் தோற்றமில்லை. சுருதிகளில் சொல்லாததால் என்பது சூத்திரத்தின் பொருள். இதற்கு மாருக ஜீவனை நித்யமென்று நிகழ்த்தியிருக்கிறது. நிகழ்த்துதல் — சொல்லு தல். இதனுல் இவர்கள் கற்பனை நியாயமற்றது.

அவதாரிகை

இன்னும் பலக் குற்றங்கள் இவர்கள் மதத்திலிருக்கின்றன. அவற்றையும் அகற்றும் பொருட்டு அடுத்த சூத்திரம் :-

## சூ. நசகர்த்து: கரணம் 43

ந, ச, கர்த்து:, கரணம் என்று பிரிக்கவும்.

ப.உ. ச = மேலும்; கர்த்து: - கர்த்தாவிலிருந்து. கரணம் = கரணத்திற்கு. ந = உ த்பத்தியில்லை.

வி.உ. அவர்கள் கூறும் மதத்தில் இன்னும் பல குற்றங்கள் உள்ளன. எங்ஙனமெனின் ? உலகில் கர்த்தாவாகிய ஒரு மனிதனி லிருந்து கரணமாகிய கோடாலி, அல்லது அரிவாள், அகப்பை, முதலிய சாதனங்கள் உண்டாவதில்லை. ஆனுல் வைஷ்ணவ மதத்தில் கர்த்தாவாகிய ஜீவனிடத்திலிருந்து பிரத்யும்னன் என்னும் கரணரூப மனம் உண்டாகிறதென்று அவர்கள் கூறுகிருர்கள். ஜீவனிடத்தி லிருந்து மனம் உண்டாகிறதென்பது அருத்தமற்றதேயாம். திருஷ் டாந்தமில்லாமலும் சுருதிப் பிரமாணமில்லாமலும் ஒரு பொருளைக் கொள்வது ஒவ்வாது என்பது கருத்து.

அவதாரிகை

மேலே சொன்ன நால்வரும் ஜீவ வடிவமாகக் கொள்ளவில்லை ஈசுவர பாவமாகக் கொள்ளப்படுகிருர்கள் எனின் சூத்திரம்.

## சூ. விக்ஞாநாதிபாவே வா தத்பிரதிஷேத: 44

விக்ஞானதி, பாவே, வா, தத், அப்ரதிஷேத: என்று பிரிக்கவும்.

ப.உ. விக்ஞானுதிபாவே வா=சங்கர்ஷணன் முதலிய மூவரும் வாசுதேவனுக்கு நிகராக ஞானவடிவம் அல்லது சொரூபம் ஆக இருந்தாலும், தத் அப்ரதிஷேத: = உத்பத்தியாகிருன் என்னும் குற்றம் நீங்கவில்லை.

வி.உ. ''ஏஷ மஹான் அஜ ஆத்மா'' என்பது சுருதி. இது மஹான் = பெரியது. அஜன் = தோற்றமில்லாதவன். இது என்பது ஆன்மா. ''அஜோ நித்ய: சாஸ்வதோ அயம் புராண:'' என்பது கீதை. ஆன்மா பிறப்பற்றவன், நிலையுள்ளவன், புராணன்—பழமை யானவன் என்று சுருதிகளும் ஸ்மிருதிகளும் முழங்குகின்றன. இதனுல் இவர்கள் கூறும் ஆகம வாக்கியம் அப்ராமாணிகம்—பிரமாணமல்ல.

எதிரி – சங்கர்ஷணுதி மூவரும் உள்ளபடியே ஐஸ்வரியம், சக்தி, பலம், வீரியம், ஒளிமயம் இவைகளோடு கூடிய ஈசுவரர் என்றே யொப்புக் கொள்கிரேமென்று வைஷ்ணவர்கள் கூறுகிருர்கள். இதனுல் எல்லோரும் ஈசன் வடிவமாகையால் இறைவனேயாவர் என்பதும் அவர்கள் மதம். வாதி—அவ்வாறு ஆனுலும் குற்றம் ஒழியவில்லை. ஏனெனின்? வாசுதேவன் என்னும் ஒரு இறைவனுல் எல்லாக் காரியங்-களும் எளிய முறையில் முடிவதால் ஏனைய மூன்று இறைவன் எதற்காக? இவர்கள் நால்வரும் சமானமாக இருப்பதால் இவருள் யார் பெரியவர் சிறியவர் எனும் போராட்டம் நடக்கும். எனவே மூன்று ஈசுவர கல்பனை பயனற்றதாகும்.

எதிரி—ஈசன் ஒருவனே, அவனுக்கு நான்கு வியூகம். நான்கு பிரிவு என்பாயாகில் அதுவும் பொருந்தாது. ஏனெனின்? உத்பத்தி விஷயத்திலும், காரிய காரண பாவத்திலும் ஏற்றந் தாழ்வுண்டாகும். காரணத்தை நோக்கும் போது காரியங் குறைந்த நிலையில் உள்ளது. அங்ஙனமாயின் சமானத்வம் பொருந்தாது. மண்ணும் குடமும் போல. ஏற்றந்தாழ்வு இல்லாது போனுல் இது காரணம் இது காரியம் என்று எங்ஙனம் தெரியும்? தெரியாது என்பது துணிபு. மேலும் சிறிது சிந்திப்போமானுல் பகவானுக்கு நான்கு ரூபமட்டும் ஏன்? எல்லா உருவமும் அவன் உருவமாக இருக்க, நான்கு உருவமட்டும் என்பது விந்தையாக இருக்கிறது. இதனுல் இவர்கள் மதம் குற்றமுடைய தென்று முற்றிலும் விட்டுவிடவேண்டும் என்பது கருத்து.

அவதாரிகை

இவர்கள் மதத்தில்குண, குணிபாவம் என்னும் குற்றமும் உண்டு அதையகற்றும் பொருட்டு அடுத்த சூத்திரம்—

## சூ. விப்ரதிஷேதாச்ச 45

ப. உ. ச = மேலும் ஒன்றுக் கொன்று மாறுபட்ட கருத்தால் இந்த மதம் விப்ரதிஷேதாத் = வேறுபட்டதன்மையுடையது.

வி.உ. வைஷ்ணவ மதத்தில் குண குணித்வ கற்பனை முதலிய தோஷங்கள் நிரம்பி வழிகின்றன. ஞானம், ஐஸ்வரியம், சக்தி, பலம், வீரியம், ஒளி, யிவை யெல்லாம் பகவானுடைய குணங்கள். பகவான்—ஆத்மா. "ஆத்மாச பிரஹ்ம" என்பது சங்கரபாஷ்யம். ஆன்மா பிரஹ்ம சொரூபம் என்பது பொருள். ஆன்மா வாசுதேவன் இதில் ஐயமில்லை. இவர்கள் கூறும் கூற்றில் குற்றமும் உள்ளது. அவை வருமாறு—நான்கு வேதங்களை நன்கு ஆராய்ந்தும் அவ்வேதங்களில் முக்திக்கிடைக்காமல் சாண்டில்ய ரிஷி இந்தப்பாஞ்ச ராத்திர மென்னும் நூலைக் கையாண்டு கதியை அடைந்ததாகக் கூறுகின்றார்கள். இது என்னப்புதுமையென்பதை யெல்லோரும் எண்ணி நோக்குக. இது மூலமாக இவர்கள் வேதத்தை நிந்திப்பதிலும் எவ்வளவு முனைந்திருக்கிறார்கள் என்பதுத் தெளிவாகின்றது. இவர்களுடைய கற்பனை ஆகாயத்தில் வெள்ளைக் காக்கை பறப்பதோடு ஒக்கும். இதனால் இவர்கள் (வைஷ்ணவர்மதம்) பொருத்தமற்றதென்றுப் புறக்கணிக்கப்படும்.

பிரஹ்ம சூத்திரத்தினுடைய இரண்டாவது அத்யாயத்தின் இரண்டாவது பாதமுற்றுப் பெற்றது.

சுபம்.

## இரண்டாவது அத்தியாயத்தின்

### மூன்ருவதுபாதம்

இந்த பாதத்தில் ஐந்து மஹாபூதங்களுக்கும் ஜீவஆதிகளுக்கும் சுருதியில் வருகிற விரோதங்களை விலக்குவது.

### 1. வியத்அதிகரணம்

## சூ. ந வியத் அஸ்ருதே: 1

ப. உ. வியத் = ஆகாசம். ந = உத்பத்தி ஆகிறதில்லை அஸ்ருதே: (ஆகாசம் உத்பத்தியாகிறதென்பதற்கு) சுருதிப் பிரமாணமின்மையால்.

வேதாந்தத்தில் அநேக பொருள்களுக்கு உத்பத்திப் பிரகரணங்கள் வந்திருக்கின்றன. ஆங்காங்கு சுருதிப் பிரமாணமும் கிடைக்கின்றன. சில இடங்களில் சுருதி, ஆகாசத்திற்கு உத்பத்திக் கூறுகிறது சில இடங்களில் உத்பத்திக் கூறவில்லை. சில சுருதிகள் வாயுவிற்கு உத்பத்திக் கூறுகின்றன, சில சுருதிகள் கூறவில்லை. சில சுருதிகள் ஜீவனுக்கு உத்பத்திக் கூறுகின்றன, சில சுருதிகள் கூறவில்லை. இந்த மாதிரி பிராணனுக்கும் உத்பத்தி உண்டென்றும், இல்லையென்றும் சுருதிகள் மொழிகின்றன.

இவ்வாறு சுருதிகளில் ஒன்றுக்கொன்று விரோதம் காணப் படுகின்றது. இவ்விரோதத்தால் எது உண்மை, எது இன்மை என்பதில் ஐயம் எழுகின்றது. ஐயம் — சந்தேகம். இந்த ஐயத்தை அகற்றுவதற்காக வியத்அதிகரணம் தொடக்கப்படுகின்றது. பூர்வ பக்ஷியின் சங்கை நிவாரணம் சித்தாந்தப் பக்ஷத்திற்குப் புனிதத் தன்மையாகும். ஆகையால் முதலாவது ஆகாசத்தைப்பற்றி விசாரிக்கப்படுகிறது. ஆகாசத்திற்கு உத்பத்தியுண்டா இல்லையா? இந்த விஷயத்தில் பூர்வபக்ஷி — ந வியத் — ஆகாசத்திற்கு உத்பத்தியில்லை, எதனாலோவெனின்? சுருதிப் பிரமாணம் இன்மையால். மேலும் சாந்தோக்கிய சுருதியில் உலக உத்பத்தியைக் கூறுமிடத்து ஐந்து பூதங்களில் நெருப்பு, நீர், நிலம் என்னும் மூன்று பூதங்களுக்கு உத்பத்திக் கூருமலுமிருக்கிறது. வானும் வளியும் பொறிகளுக்குப் புலனுகாமையால் அவையிரண்டிற்கும் உத்பத்திக் கூறவில்லை. வான் — ஆகாசம். வளி — காற்று அதீந்திரிய விஷயத்தில் எங்களுக்கு சுருதிப் பிரமாணம்

அதீந்திரியம்—பொறிகளுக்கு எட்டாதது. சாராம்சம்—ஆகாசத்திற்கு உத்பத்தியில்லையென்பது கருத்து. எனவே ஆகாசம் நித்யமென்பது குறிப்பு.

அவதாரிகை

இப்பொழுது மேற்கூறிய ஆகாசத்திற்கு உத்பத்தியில்லை. ஆகையால் நித்யம் என்னும் மதத்தை நிராகரிக்கும் பொருட்டு அடுத்த சூத்திரம் வருமாறு.

## ஸூ. அஸ்திது 2

ப. உ. துசப்தம் பூர்வ பக்ஷத்தை விலக்கும் பொருட்டு அஸ்தி= (ஆகாசம் தோன்றியிருக்கிற தென்பதற்குப் பிரமாணமிருக்கிறது) சாந்தோக்ய சுருதியில் ஆகாசத்திற்கு உத்பத்திக் கூருதிருப்பினும் தைத்திரிய சுருதியில் உத்பத்தி கூறியிருக்கிறது. ஆகலின் அவை வருமாறு— ''ஆத்மன ஆகாச சம்பூத:'' என்று மொழிந்திருக்கிறதே யெனின் (பூர்வபக்ஷி) அது பொருத்தாது. பரஸ்பர விரோதத்வாத் முன்னும் பின்னும் முரணுக இருப்பதால். சில இடங்களில் நெருப்பு முதலியப் பொருள்களுக்கு உத்பத்தியும், சில இடங்களில் ஆகாசம் முதலிய வஸ்துக்களுக்கு உத்பத்தியும் கூறியிருக்கிறது. இதை நினைக்கின்றபொழுது முரண் காணப்படுகிறதே என்பாயாகில் அது பொருந்தாது. ஏனெனின்? ஒன்றுக்கொன்று முரண் காணப்பட்டாலும் இந்தச் சுருதிகளில் ஏகவாக்யதா—ஒற்றுமை வாக்கியம் காணப்படுகின்றது. பூர்வபக்ஷி — ஏகவாக்யம் பொருந்தாது. எதனுலோ வெனின், ஒரு இடத்தில் தேஜ முதலிய பொருள்களைப் படைத்துவிட்டுப் பிறகு ஆகாசம் முதலியப் பொருளைப் படைத்தாரென்பதுப் பொருத்தமற்ற தாகும். சித்தாந்தி, நன்று சொன்னுய் சாம்பார் செய்தபிறகு அன்னம் சமைக்கிருன் என்று உலகத்தில் சொல்லப்படுகிறதே, அதுபோல ஆகாசம் முதலிய பூதங்களைப் படைத்தப்பிறகு நெருப்பு முதலிய பூதங்களையுண்டு பண்ணினுரென்பதில் என்ன குற்றம்?

பூர்வபக்ஷி, அதுவும் பொருந்தாது. ஏனெனின் சாந்தோக்கியத்தில் முன்னர் நெருப்பு முதலிய பூதங்களைப் படைத்ததாகக்கூறி இருக்கிறது. அதுபோல தைத்திரியத்திலும் ஆகாசத்தை முன்னே படைத்ததாக உரைத்திருக்கிறது. இவ்வாறிருக்க இவ்விரண்டையும் ஒருவனே படைத்தான் என்பது எவ்வாறு பொருந்தும். பொருந்தா தென்பது பூர்வபக்ஷம்.

அவதாரிகை

இவ்வாறு பூர்வபக்ஷியும் சித்தாந்தியும் போராடிக் கொண்டிருக்கும் பொழுது ''த்வயோ:கலஹே திருதீயஸ்ய லாப:'' என்பது நியாயம். இருவர் சண்டையிட்டுக் கொண்டிருந்தால் மூன்றுமவனுக்கு லாபமென்பது ஒரு நியாயம். அதுபோல மூன்றுமன் கூறுகிருன்.

# ஸூ. கௌண்யஸம்பவாத் 3

கௌணி, அசம்பவாத் என்று பிரிக்கவும்.

ப. உ. கௌணி – (ஆகாசத்திற்கு உத்பத்தி சொன்ன சுருதி முக்கியமல்ல. ஏனெனின், அசம்பவாத் = பொருத்தமற்றத் தன்மையால். காரணமின்மையால் என்பது கருத்து. நியாய மதத்தில் சமவாயி அசமவாயி காரணமில்லாமல் ஒரு காரியமும் நிகழமாட்டாது. சமவாயி—அசமவாயி = உபாதானம், நிமித்தமென்பது பொருள். ஆகாசம் உண்டாகிறதென்பதில் மேற்கூறிய காரணம் இன்மையால் ஆகாசம் எவ்வாறு உண்டாகக் கூடும்? உண்டாக மாட்டாதென்பது குறிப்பு. ஒரு ஜாதியில் உள்ள பல்வேறு நூல்கள் சேர்ந்து ஆடைக்கு காரணமாகின்றன. அவ்வாறு காரணங்கள் முன்னின்மையால் ஆகாசம் உண்டாகிறதென்பது பொருத்தமற்றதேயாம். வான் உண்டாவதற்கு முன் அனவகாசம் – அவகாச மற்றிருந்தது, துவாரமின்றிருந்தது, இடைவெளியற்றிருந்தது என்று இயம்ப முடியாது. நில முதலிய பூதங்களுக்கு வேருக இருப்பதாலும் (விபுத்வம்) வியாபகமாயிருப்பதாலும் ஆகாசம் அஜமென்பது சித்தம். அஜம் – பிறப்பற்றது. எவ்வாறு உலகத்தில் ஆகாசத்தைச் செய், கடாகாசம், கரகாகாசம், மடாகாசம் என்பன ஆகாசத்தில் பேதம் கௌணமாகக் கொள்ளப் படுகிறதோ, மேலும் வனவாசி விலங்குகளே ஆகாசத்தில் கட்டட்டும் என்று வேதத்தில் விளம்பப்பட்டிருக்கிறது. அது கௌணம். எனவே ஆகாசத்திற்கு உத்பத்தி சொன்ன சுருதியும் கௌணியென்பது சித்தம். கௌணி முக்கியமல்லாதது.

அவதாரிகை

பூர்வபக்ஷி, தமது சித்தாந்தத்தை யுறுதிப்படுத்தும் பொருட்டு அடுத்தச் சூத்திரத்தைத் துவக்கின்ருர் —

# ஸூ. சப்தாச்ச 4

சப்தாத், ச, என்று பிரிக்கவும்.

ப. உ. சப்தாத் = சுருதியில் கூறியிருப்பதால். ச = மேலும். ''வாயுஸ்ச அந்தரிக்ஷம் சைதத் அம்ருதம்'' வாயு : வாயுவும் அந்த ரிக்ஷம் = ஆகாசமும், ச என்பது உம்மையைக் குறிக்கும் சொல். அமிருதம் = அழிவற்றவை என்பது மேற்கூறிய சுருதியின் பொருள். இந்தச் சுருதியினால் ஆகாசத்திற்கும், வாயுவிற்கும் உத்பத்தியில்லை யென்பது தெளிவாகின்றது.

ஆகாசம் அஜம். அஜம் — பிறப்பற்றது. மிருதம் — தோற்றம் ஒடுக்கமுடையது. நமிருதமிதி அமிருதம். உத்பத்தி நாசமற்ற தென்பது பொருள். ''ஆகாசவத் சர்வ கதஸ்ச நித்ய : '' சா. உ. 3/14/3/ ஆத்மாவை வியாபகமென்று நிகழ்த்துவதற்கு ஆகாசத்தை யுவமானமாகக் கூறப்பெற்றிருக்கிறது. ஆத்மா, ஆகாச வத் = ஆகா சத்தைப் போல, சர்வகதஸ்ச = எங்கும் நிறைந்தது. நித்ய : = என்று முள்ளது. ஆத்மாவென்று வருவித்துக் கொள்ளவும். எங்கும் நிறைந் ததென்றதனால் தேச அளவையும் நித்ய : என்றதனால் கால அள- வையும் வஸ்து அளவையும் விலக்கப்படுகின்றன.

ஆத்மாவிற்கு ஆகாசத்தை யுவமானமாகக் கூறியிருப்பதால் ஆத்மாவைப் போல ஆகாசமும் நித்யமாகின்றது. அவ்வாறிருக்க ஆகாசம் எவ்வாறு உத்பத்தியாக முடியும்? மேலும் ''ஆகாச சரீரம் பிரஹ்ம'' பிரஹ்மம் ஆகாசத்தை சரீரமாகக் கொண்டிருக்கிறது. எங்ஙனம் ஆகாசமனந்தமோ அங்ஙனம் ஆத்மாவும் அனந்தம் என்றும், ஆகாச ஆத்மாவென்றும், மொழிந்திருக்கிறது. உத்பத்தியோடு கூடிய ஆகாசத்தை யுத்பத்தியின்றிய பிரஹ்மத்திற்கு விசேஷணமாக எவ் வாறு கூற இயலும்? இயலாதல்லவா! நீலம் உத்பலம் என்னு மிடத்தில் நீலமும் உத்பலமும் தோற்றம் ஒடுக்கமுடையவை ஆகை யால் விசேஷண விசேஷ்யம் பொருந்தும். ஆகாசத்திற்குத் தோற்ற முண்டானால் தோற்றமற்ற பிரஹ்மத்திற்கு ஆகாசத்தை விசேஷண மாகக் கூறுவது பொருத்தமற்றதேயாம். இதனால் ஆகாசம் உத் பத்தியற்ற தென்பதுத் தெற்றெனத் தெளிவாம்.

அவதாரிகை

பூர்வபக்ஷி பலவிதவினுக்களைக் கிளப்பி மீண்டும் தன் சித்தாந்தத்தை நிலைநிறுத்துதல்.

## ஸூ. ஸ்யாச்சைகஸ்ய ப்ரஹ்ம சப்தவத் 5

ஸ்யாத்,ச, ஏகஸ்ய, பிரஹ்ம, சப்தவத்.

ப. உ. பிரஹ்மசப்தவத்=பிரஹ்மசப்தத்தைப் போல. ஏகஸ்ய =ஒருசம்பூத சப்தம் முக்கியமாகவும் கௌணமாகவும், ஸ்யாத் = சொல்லப்படுகிறது.

வி.உ. பிரஹ்ம சப்தவத்—ஒரு இடத்தில் அன்னம் பிரஹ்மமென்று உரைத்திருக்கிறது. அங்கு கௌணம், ஆனந்தம் பிரஹ்மமென்று மற்றொரு இடத்தில் கூறப்பட்டிருக்கிறது, அங்கு முக்கியம். இவ்வாறு இடபேதத்தினுலும் விஷயபேதத்தினுலும் பிரஹ்மமொன்றே கௌண முக்கிய ரூபமாகக் கொள்ளப் படுகிறதோ அதுபோன்று விஷய பேதத்தினுல் சம்பூத சப்தமும் பிரஹ்மத்தைப் போல அக்னியாதி சப்தங்களோடு முக்கியமாகவும் ஆகாசத்தோடு கௌணமாகவும் சொல்வதால் என்னைக் குற்றம்? ஒன்றுமில்லை யென்பது உறுதி.

ச.மேலும் ''தபஸா பிரஹ்ம விஜிக்ஞாஸஸ்வ'' தபஸால் பிரஹ்மத்தை அறிய விரும்பு என்னும் சுருதி தபசை பி ர ஹ் ம மென்று கூறுகிறது. இது கௌணமாகும் இது இங்கு கௌணமெனப்படும். சித்தாந்தி, ஆகாசத்திற்கு உத்பத்தி யில்லையெனின் ''ஏகமேவாத்விதீயம்'' என்னும் சுருதி எவ்வாறு பொருந்தும்? ஒன்ருயும் இரண்டற்றதாயும் இருக்கும் பிரஹ்மத்தைத்தவிர மற்றவை யெல்லாம் தோன்றியொடுங்குந் தன்மையின என்பது மேற்கூறிய சுருதியின் பொருள். பிரஹ்மத்திற்கு வேருக ஆகாசமும் நித்தியமாக இருந்தால் பிரஹ்மத்தை யறிந்த மாத்திரத்தில் ஆகாசத்தை யறிந்ததாகாது. இந்த முரண் உண்டாகுமே யென்று சித்தாந்திக் கூறும் பக்ஷத்தில். பூர்வபக்ஷி—அதுமுரணுகாது,உலகில் குயவரில்லத்தில் மண்,தண்டம், சக்ரம் முதலியவைகளைப் பார்த்து மறுநாள் பலமட்கலங்களைக் கண்டு ஒருவர் முன்னுள் குயவரில்லத்தில் மண்மட்டுமிருந்தது என்று சொன்ஞர். அதற்குப் பொருள் என்னை? தண்டம் சக்ரமில்லை யென்பது

அர்த்தமல்ல· பின்னைக் காரியரூப மட்கலமில்லை யென்பதுதான் பொருள். அதுபோல அத்விதீயமென்னும் சொல்லுக்குப் பொருள், பிரஹ்மத்திற்கு வேருகப் பிரபஞ்சத்திற்கு (அதிஷ்டாநா) கர்த்தா இல்லையென்பதாகும். ஆகாசமில்லை யென்று அர்த்தமல்ல.

மேலும் இலக்கண பேதத்தால் பலவாகக் காணப்படுகின்றது சிருஷ்டிக்கு முன்னே இலக்கண பேதமின்மையால் துவிதீயம் நிலை பெருது. பிரஹ்மத்தை யறிவதால் ஆகாசமும் அறிந்ததாகும். எவ்வாறு பாலைக் கொள்ளுமிடத்து அதில் விழுந்தநீரும் கொள்ளப்படுகிறதோ அதுபோலறிக. முந்தி சுருதிக்கு முரணுகாமையால் ஆகாசத்திற்கு உத்பத்திக் கூறிய சுருதி கௌணி — முக்கியமல்லாதது என்பது கருத்து. இதுவரை பூர்வபக்ஷம். இனியிதை யகற்றுவதற்கு சித்தாந்த சூத்திரம் வருமாறு.

## சூ. பிரதிக்ஞா அஹானிரவ்யதிரேகாத் சப்தேப்ய: 6

பிரதிக்ஞா, அஹாநி; அவ்யதிரேகாத், சப்தேப்ய: என்று பிரிக்கவும்.

ப. உ. அவ்யதிரேகாத்= (உபநிஷத்) கூறப்பெற்ற பிரஹ்மத்திற்கு வேருக ஒருபொருளும் இல்லாமையால், பிரதிக்ஞா அஹாநி. பிரதிக்ஞை (சூளுரை) பங்கமாகிறதில்லை. பங்கம்—அழிவு. இல்லை யென்பது பொருள். சப்தேப்ய: = மறை மொழிகின்றபடி. மறை-வேதம்.

வி.உ. பிரதிக்ஞை யென்பது என்னை? எதையொன்றைக் கேட்ட மாத்திரத்தில் எல்லாங் கேட்டதாகின்றதோ, எதையொன்றை நினைத்தால் எல்லாம் நினைத்ததாகின்றதோ, எதையொன்றை அறிந்தால் எல்லாம் அறிந்ததாகின்றதோ அதை நீகேட்டாயா என்பதுதான் (சூளுரை) பிரதிக்ஞை. எல்லாம் பிரஹ்ம சொரூபமாக இருப்பதால் பிரஹ்மத்தைத் தெரிந்தால் எல்லாம் தெரிந்ததாகின்றன. இதனுல் பிரதிக்ஞை கெடுகிறதில்லை. மேலும் ''ஆத்மனி விதிதேசர்வம் விதிதம்'' ஆத்மாவை யறிந்தால் அனைத்தும் அறிந்ததாகின்றன என்பது மறையின் பொருள். எல்லாப்பொருளும் பிரஹ்மத்திற்கு அபின்னமாக இருப்பதால் பிரதிக்ஞை நிலைத்திருக்கிறது. மண்ணும் குடமும்போல காரியமும் காரணமும் ஒன்று என்பது ஒள்ளியவேதாந்தத்தின் உறுதிப் பொருள் சப்தேப்ய:-தண்ணளி நிறைந்தத் தனையனைத்தழுவி பிரிய மைந்த! நினது வினுவிற்கு விடை கூறுகிறேன். நீ, கேட்பாயாக.

[illegible] உலகு வருவதற்கு முன் மன்னியசத்தொன்றே யிருந்தது. மன்னிய — நிலை பெற்ற. அந்தசத்து அகில உலகத்தை ஆக்கவேண்டும் என்று நினைத்தது பார்த்தது. பிறகு நெருப்பு, நீர், நிலம் இவை மூன்றையும் படைத்தது. இங்ஙனம் காரிய சமூகத்தை யுண்டுபண்ணி முடிவில் ஈதனைத்தும் பிரஹ்மமே யென்னும் முறைப்படி நிகிலமும் நிர்மல பிரஹ்மமே யென்று சுருதியுபதேசிக் கின்றது. இதனால் 'அவ் யதிரேகம், அபேதம் — ஒற்றுமை யுரைக்கப் பெற்றது. நிகிலம் — எல்லாம்.

இதனால் என்னை தெரிகிறது? ஆகாசத்திற்கு உத்பத்தியுண்டு என்பது தெளிவு. ஆகாசம் மற்றைப் பூதங்கள்போல தோன்றுதிருப் பின் பிரஹ்மத்தை யறிந்தால் ஆகாசமறியப் படமாட்டாது. அதனால் பிரதிக்ஞை பாதமாகும். பாதம் — பங்கம், அழிவு, அதனால்மறைமொழிப் பொய்யாகப்போகும். ''மறைகள் பொய்யாது கண்டாய்'' கைவல் யம். பொருள்வெளி. யாண்டு நெருப்பு, நீர், நிலம் பரமனால் படைக்கப் பட்டிருக்கின்றனவோ ஆண்டு ஆகாசம்வாயு இவையிரண் டையும் படைத்தப்பிறகு ஏனைய மூன்றையும் படைத்தாரென்பது பொருள். யாண்டு — எங்கே. ஆண்டு அங்கே. தைத்திரீயத்தை முன்னே வைத்துச் சாந்தோக்யத்தை பின்னேவைத்துப் பொருள் கொள்ளின் இரண்டிற்கும் ஏகவாக்யதா — ஒற்றுமை வந்து உறும். உறும் — பொ ருந்தும். விரோதம் விரைந்தோடும்.

மேலும் ''சர்வம் கல்விதம் பிரஹ்ம'' இதனாலும் எல்லாம் பிரஹ்மரூப மென்று தெரிகிறது. ''வாசுதேவ: சர்வம்'' கீதை. சர்வம் = எல்லாம் — உலகமனைத்தும் வாசுதேவ :- வாசுதேவன் பர மாத்மா ஈதனைத்தும் அவரது வடிவமே யென்பது கீதையின் பொருள். ''மதிபருதியெரிநீர்கால் வானவனி யியமானன் வடிவாய் எல்லா அதி பதியாய் என்னும் சசிவன்ன போதத்தாலும் அறிக. மதிபரிதி — சூரிய சந்திரன். கால் — காற்று. வான் — ஆகாசம். இயமானன் — ஆத்மா. ஆகையால் ஆகாசத்திற்கு உத்பத்தியுண்டென்பது உறுதி.

### அவதாரிகை

ஆகாசத்திற்கு உத்பத்தியுரைத்த சுருதி கௌணி யென்றுபூர்வ பக்ஷிபுலம்பினனே அதற்குப்பதில் சூத்திரம் வருமாறு —

## சூ. யாவத் விகாரந்து விபாகோ லோகவத்7

யாவத், விகாரம்,து, விபாக:, லோகவத் என்று பிரிக்கவும்.

து சப்தம் பூர்வபக்ஷத்தை விலக்கும் பொருட்டு. யாவத் விகாரம் - எத்தனை குடம், சட்டி, சால் முதலிய விகாரமுள்ள பொருள்கள் இருக்கின்றனவோ அத்தனைப் பொருள்களுக்கும் விபாகம்—வேற்றுத் தன்மையுண்டு. வெளிப்படையாகவும் தனித்தனியாகவும் இருப்பதால் காரிய ரூபமாகும். லோகவத் - உலகத்திற்காணப்படுகின்றப் பொருளைப் போல ஆகாசமும் வேருனதால் காரியரூபமாகும்.

வி.உ. ஆகாசமுண்டாகிற தென்னும் விஷயத்தில் ஐயங் கொள்ளக் கூடாது. ஏனெனின்? குடம், சட்டி, கலசம் முதலிய பொருள்கள் அல்லது வளையல், வடம். குண்டலம் முதலிய அணிகள், ஊசி, கத்தி, வாள் முதலிய பொருள்கள் காணப்படுகின்றனவோ அவையனைத்தும் விகாரமாகவும் விபக்தமாகவும் பொறிபுலன்களுக்குக் காணப்படுகின்றன. விகாரம்—காரியம். விபக்தம் வெளிப்படை. அவ்யக்தப்பொருள் எதற்கும் வெளிப்படாது அவ்யக்தம் பொறிக்குப் புலனுகாதது. ஆகாசம் நிலம் முதலிய பூதங்களுக்கு வேருகப்புலனுகிறது. எனவே அதுவும் காரியமாகத்தானிருக்கமுடியும். அதுவும் என்பது ஆகாசத்தை. இதனுல் வாயு, திசை காலம், பரமாணு ஆதி பொருள்களும் காரியமென்றேக் கொள்ளப்படுகின்றன. ஆத்மாவும் காரியம் என்று சொன்னுலென்னை? அது பொருந்தாது. தோற்றமின்றி யிருப்பதால் என்று ஊகித்துக் கொள்க. மேலும் எல்லாங்காரிய ரூபமென்றுல் நிராத்மபிரசங்கம் வந்துபொருந்தும். நிராத்மபிரசங்கம்—சூன்யவாதம். ஆத்மா இயல்பாக உள்ளது: ஒன்றினுல் உண்டான தன்று. பிரமாணமும் ஆத்மாவிற்கல்ல:பின்னை பிரமேயத்தை விலக்கும். பொருட்டு. பிரமேயம்—சம்சாரம். ஆத்மாவை நிராகரிப்பது தன்னை யில்லையென்று சொல்வதோடொக்கும். தானில்லையென்றும் ஒருவன் சொல்வானுனல் அவனைப்போலமடையன் யாருமிலன்.

நிலத்திலிருந்து கடினத்தன்மையையும் நீரிலிருந்து குளிர்ச் சியையும் நெருப்பிலிருந்து கொதிப்பையும் இல்லையென்று யாரால் சொல்லமுடியும்? தன்னிடத்திலிருந்து தன்னை நிராகரணஞ் செய்பவர் யார்? ஒருவருமிலரென்பது குறிப்பு. ஆகையால் ஆகாசம் காரியம் ஆத்மா அகாரியம் ஆகாசத்தையும் வாயுவையும் அமிருதமென்றது.

உபசாரம், புகழ்ந்து பேசுவது. வானவர்களையும் புகழ்ந்து அமரா: அமரர்கள் என்று கூறப்படுகிறது. அதற்காக அவர்களுக்கு அழிவில்லை யென்று கூறஇயலாது. அது போல வாயு ஆகாசாதி களும் அழியுமென்பது உறுதி. தோன்றின மறையும்; மறைந்தன தோன்றும் என்பது மறைமொழி. ஏ பிரஹ்மன்! வாயுராகாசே பிர லீயதே ஆகாச ஆத்மனி சம்பிரலீயதே'. வாயு ஆகாசத்திலும் ஆகாசம் ஆத்மாவிலும் ஒடுங்குகின்றன என்று உரைக்கப்படுகிறது.

மேலும் ''ஆகாசவத்நித்ய''. என்று சுருதியும் பிரஹ்மத்தின் மஹத்துவத்தை விளக்குவதற்காகக் கூறியதே தவிர ஆகாசத்தை நித்ய மென்பதற்காக அன்று. எவ்வாறு அம்பைப் போல ஆதித்யன் விரை கிறுன் என்ருல் ஆதித்யன் வேகமாக செல்கிருனென்பதில் பொருளே தவிர அம்பும் ஆதித்யனும் ஒன்றென்பதில் தாத்பரியமன்று. இதல் லாமலும் ஆகாசத்தைப் பார்க்கிலும் ஆத்மாவை அதிகமாக மறை களில் மொழியப் பட்டிருக்கிறது. ஜ்யாயான் ஆகாசத் ஜ்யாயான் பிருதிவ்யா:'' ஆகாசத்தைப் பார்க்கிலும் அவனியைப் பார்க்கிலும் ஆத்மா பெரிய தென்பது பொருள். இதனுல் ஆத்மாவை நோக்க ஆகாசத்தின் அளவு குறைந்த தென்பதுத் தெளிவு. அதோ அந்ய தார்த்தம். பி.உ. ஆத்மா நீங்கலாக மற்றையப் பொருள்கள் அழி வுடையவை யென்பது சுருதியின் பொருள். இதனுல் ஆகாசம் பிரஹ் மத்தின் காரியமென்பது குறிப்பு.

## (மாதரிஸ்வா) வாயு அதிகரணம்.[4]

## ஸூ. ஏதேன மாதரிஸ்வாவ்யாக்யாத: 8[2]

ஏதேன, மாதரிஸ்வா, வ்யாக்யாத: என்று பிரிக்கவும்.

ப.உ. ஏதேன=இந்த ஆகாசத்தை விலக்கியதால். மாதரிஸ்வா =வாயுவும் விலக்கப்பட்டது.

வி.உ. அயம் அதிதேஸ: என்பது சங்கரபாஷ்யம். ஆகாசமும் வாயுவும் உண்டான பிறகு நெருப்பு நீர் முதலிய பூதங்கள் உண் டாயின என்று தைத்திரீயத்தில் உரைக்கப் பெற்றிருக்கிறது என்பது அதிதேசம். ஆகாசத்திற்கு என்னநிலையோ அந்நிலைதான் வாயுவுக்கும். தமையனுக்குள்ள கதிதான் தம்பிக்குமென்ற நியாயம் போல வென் றறிக. வாயுத்தோன்ற வில்லை. நித்யமாக இருப்பதால் என்பது பூர்வ

பக்ஷம். மேலும் ''ஸைஷானஸ்தமிதா தேவதாயத்வாயு'' வாயு தேவதைக்கு(தோற்றமும்)ஒடுக்கமும் இன்றென்பது சுருதியின்பொருள். இதுவும் பூர்வபக்ஷமே. இந்தச்சுருதி அபர வித்யா விஷயமாகவும் உபசாரமாகவும் உரைத்திருக்கிறது என சித்தாந்தப்பக்ஷம். மற்றைய முறைகளெல்லாம் ஆகாசத்தைப்போல வென்றறியவும், வாயுவுக்கும் உத்பத்தி நாசமுண்டென்பது உறுதி.

## அசம்பவாதிகரணம்

### அவதாரிகை

ஆகாசவாயு முதலிய பூதங்களுக்கு உத்பத்தி யுண்டென்றால் ஆத்மாவிற்கும் தோற்றமுண்டென்று நாங்கள் கூறுவோமென்றுபூர்வ பக்ஷிக்கூறுமிடத்துப்பதில் சூத்திரம் வருமாறு—

## ஸூ. அஸம்பவஸ்து ஸதோ அநுபபத்தே: 9

அசம்பவ:, து, சத: அநுபபத்தே: என்று பிரிக்கவும்.

ப.உ.து= பூர்வபக்ஷிமதத்தை மாற்றும் பொருட்டு 'து' என்னும் சொல். சத:=சத்ரூப பிரஹ்மத்திற்கு, (உத்பத்தி) அசம்பவ:= பொருந்தாது. அநுபபத்தே:=விருத்தமாவதால் விருத்தம்—பகைமை

வி.உ. ஒருவனுக்கு மூக்குஇல்லை யென்றால் எல்லாருக்கும் மூக்கு இல்லை யென்பது அர்த்தமில்லை. அதுபோல ஆகாசம் வாயுமுதலிய பொருள்களுக்கு உத்பத்திக்கூறி யிருப்பதால் ஆத்மாவிற்குத் தோற்ற மிருக்க வேண்டுமென்பதில்லை. தோற்றம்—உத்பத்தி. சன்மாத்திரம் பிரஹ்மம். அதையுண்டுபண்ணுவது யார்? அதற்கும் காரணங் கூறினால் காரணத்திற்கு வரம்பில்லாமல்போகும். வரம்பு—முடிவு. அது மட்டுமன்றி சத்ரூப பிரஹ்மத்திற்கு அழிவுண்டாகும். அது அழிந்தால் வாழ்பவர்யார்? ஒருவருமிலர் என்பது உறுதி. ''நதஸ்ய காரியங் கரணஞ்ச வித்யதே'' என்பது சுருதி. தஸ்ய=ஆத்மாவிற்கு. ந காரியம் வித்யதே=காரியம் இல்லை. கரணம் ச ந வித்யதே=கரணம் —காரணமும் இல்லையென்பது மேற்கூறிய சுருதியின் பொருள். இதனாலும் பிரஹ்மத்திற்குத் தோற்றமில்லை யென்பதுத் தெளிவாகின்றது.

விசேஷணத்தோடு கூடிய பொருளுக்குத் தோற்றமுண்டு. நிர்விசேஷ பொருளுக்குத் தோற்றம் எவ்வாறு பொருந்தும்? பொருந்தாதென்பது குறிப்பு. நிர்விசேஷம் மண்போல, சவிசேஷம் குடம் போல. ஆத்மாவிற்கு வேறு ஒரு பொருளிருக்குமானல் அது அசத். அசத்திலிருந்து சத்துக்குத் தோற்றமெவ்வாறு உண்டாம்? அதனல் தான் "கதம் அசத: சஜ்ஜாயேத"[2] தை.உ. அசத்திலிருந்து சத்து எங்ஙனம் உண்டாகக்கூடும்? என்பது சுருதிப் பொருள். அந்த ஆத்மாவிற்கு ஜனகனுமில்லை சுவாமியுமில்லை. ஜனகன்—செய்பவன். சுவாமி—தலைவன். அது எல்லாவற்றிருக்கும் காரணமாகவும் தலைவனுகவுமிருக்கிறது. அது என்பது ஆத்மா. இதுவரை ஆகாசத்திற்கும் வாயுவுக்கும் தோற்றமுண்டு; ஆத்மாவிற்குத் தோற்றமில்லையென்பதுத் தெற்றெனத் தெளிவாகின்றது". வாளுகி மண்ணுகி வளியாகி யென்பது திருவாசகம். இதனுலும் ஆகாசாதிகளுக்குத் தோற்றமும் ஆத்மாவிற்குத் தோற்றமின்மையும் இனிது புலனும்.

## தேஜோதிகரணம்.[4]

### அவதாரிகை

சாந்தோக்கியத்தில் சத் நெருப்புக்குக் காரணமென்றும், தைத்திரீயத்தில் வாயு காரணமென்றும் சொல்லியிருக்கிறது. அங்ஙனமிருக்க அனலுக்குக் காரணம் சத்ரூப ஆன்மாவா? சதாகதியா என்பது ஐயம். சதாகதி—காற்று. கனலுக்குக் காரணம் காற்ரு அல்லது கனிந்த ஆத்மாவா என்பது சந்தேகம். இச்சந்தேகத்தை நீக்கும் பொருட்டு அடுத்த சூத்திரம் வருமாறு:—

## சூ. தேஜோ அதஸ்ததா ஹி ஆஹ 10

தேஜ:, அத;, ததா, ஹி, ஆஹ என்று பிரிக்கவும்.
தேஜ: = நெருப்பு, அத: = வாயுவிலிருந்து, (உண்டாகிறது) ஹி = ஏனென்ருல், ததா = அவ்வாறு, ஆஹ = கூறுகின்றது என்பது சுருதி.

வி.உ. சாந்தோக்கிய சுருதியில் சத்ரூப பிரஹ்மத்திலிருந்து அக்னியுண்டாயிற்று என்றும் தைத்திரியத்தில் கனலுக்கு வாயு காரணமென்றும் கூறியிருக்கிறது. இதனல் சத்தும் வாயுவும் தீக்குக் காரணமென்பதுத் தெளிவாகிறது. ஒரு கதவுக்கு இரட்டைத் தாழ்ப்-

பாள்போல ஒரு காரியத்திற்கு இரண்டு காரணமாகின்றதே அது எவ்வாறு பொருந்தும்? என்பது பூர்வபக்ஷம். அதற்குச் சமாதானம் — நெருப்பு வாயுவையும் சத்தையும் காரணமாகக் கொள்ளுமிடத்து ஒன்றுக்கொன்று விரோதங் காணப்படினும் சத்காரண வாதத்தைக் கொள்ளவேண்டும். எங்ஙனமெனின்? ''சன்மூலா: சோம்ய! இமா: ப்ரஜா:'' சா.உ. சுருதி. பிரிய குழந்தாய்! சத்ரூப பிரஹ்மத்தை (மூலம்) காரணமாகக் கொண்டிருக்கின்றன என்பது சுருதியின் பொருள். அஃதல்லாமலும் தணலும் பிரஹ்ம காரியமாயிருந்தால்தான் சர்வ விக்ஞானரூப சூளுரை நிலைக்கும். பூர்வபக்ஷி – அஃது சரியன்று. ஏனெனின்? வாயுவிற்கும் அக்னிக்கும் கிட்ட அன்வயமிருக்கிறது. சத்துக்கும் நெருப்புக்கும் தூரான்வயம் இருக்கிறது. அன்வயம் — சம்பந்தம். இதற்குப் பதில் சித்தாந்தி - சம்பந்தம் சமீபமிருந்தாலும் காரியரூபவாயு அக்னிக்குக் காரணமாக மாட்டாது. ஏனெனின்? அது ஸ்வயம் காரியம். அஃது என்பது வாயுவை. வாயுவிலிருந்து அனல் தோன்றிய தென்பதற்குப் பொருள் வாயு விசிஷ்ட ஆத்மாவிலிருந்து என்பது கருத்து.

மேலும் ''தஸ்யா: சிருதம்'' பசுவின் பால், பசுவின் தயிர் பசுவின் மோர் பசுவின் நெய் என்பது போல எல்லாம் பிரஹ்மத் தினுடையவை. ஆகலின் அனைத்திற்கும் ஆன்மா காரணமாயிருப்பது போல அக்னிக்கும் அதுவே காரணம் என்பது இனிது புலனும். ''காற்றிற்றீ கனலில் நீர்'' இதுபோன்ற வாக்யங்களாலும் ஊகித் துணர்க. ''பவந்தி பாவா பூதானும் மத்த ஏவ பிருதக்விதா:'' ப.கீதை. என்னிடத்திலிருந்து எல்லாமுண்டாகின்றன வென்று யது நந்தனன் இனிது இயம்புகின்றார். இயம்புதல் — சொல்கின்றார் என்பது கருத்து. இதனாலும் அனலுக்கு ஆத்மா காரணமென்பது தெளிவு.

## ஆப அதிகரணம்.

### அவதாரிகை

ஈண்டு முன் போலவே சங்கை. ''அக்னேராப:'' அக்னியி லிருந்து ஆப: = நீர் தோன்றியிருக்கிறதென்பது சுருதி. இச்சங்கையை அகற்றும் பொருட்டு சூத்திரம் வருமாறு :—

## ஸூ. ஆப: 11

நீர் நெருப்பிலிருந்து உண்டாயிருக்கிறதென்பது பூர்வபக்ஷம். ஆத்மாவிலிருந்து என்பது சித்தாந்தபக்ஷம். நெருப்பிலிருந்து நீருண்டாலும் நெருப்பு நீருக்குக் காரணமன்று. ''தேஜோ அதஸ் ததாஹ்யாஹ'' என்னும் சூத்திரத்தில் இருந்துத் தொடர்ச்சிவருகிறது. ஆகையால் அக்னிக்கு எங்ஙனம் ஆத்மா காரணமோ அங்ஙனம் அழகிய புனலுக்கும் ஆன்மாவே காரணம். புனல்—நீர். அக்கினியிலிருந்து நீருண்டாயிற்று என்று சுருதியில் கூறியபோதிலும் நெருப்புவிசிஷ்ட—(விசிஷ்டம்—உபாதி.) பிரஹ்மத்திலிருந்துதான் நீருண்டாயிற்றென்பது கருத்து. நெருப்புக்கும் நிலத்திற்குமிடையில் நீர் வருகின்றபடியால் நீரையும் படைத்தாரென்று பகவான் பாதராயணர் சூத்திரத்தை அமைத்தார்.

### பிருதிவி அதிகரணம்

#### அவதாரிகை

'தா ஆப ஐக்ஷந்த' ஒருவனாகிய நான் அநேகனாவேனென்று (இச்சித்தது) ஈக்ஷித்தது என்பது சுருதிவாக்கியம். இச்சிப்பது—எண்ணுவது. ஈக்ஷிப்பது—பார்ப்பது. இவ்வாக்கியத்திற்கிணங்க நீர் நிலத்தையுண்டுபண்ணியது ''அத்ப்யபிருதிவீ'' புனலிலிருந்து பூமியுண்டாயிற்றென்பது சுருதிவாக்கியம். இங்கும் மேற்கூறிய ஐயமெழுகின்றது. அதையகற்றுவதற்கு அடுத்த சூத்திரம்'' வருமாறு

## ஸூ. பிருதீ[2]வ்யதி[4]காரரூப சப்[3]தா[4]ந்தரேப்ய: 12

பிரதிவீ, அதிகாரரூப, சப்தாந்தரேப்ய என்று பிரிக்கவும்.

ப.உ. பிருதிவீ=(சுருதியில் சொன்ன அன்னசப்தம் இங்கு பூமியைக்குறிக்கிறது. உணவைக்குறிப்பதன்று. எங்ஙனம் தெரிகிறதெனின்? அதிகாரரூப சப்தாந்தரேப்ய: =அதிகாரம்—பிரகரணம். பூமியைப்பற்றி வருகிற பிரகரணம். ஆகையால் அன்னமென்னும் சொல்லால் நிலத்தைக் கொள்வது முறை. இங்கு நெல் புல் தவசங்கள் கொள்ளப்படவில்லை. மேலும்பக்குவ அந்நம் (சாதம்) சோறு மற்றைய பலகாரங்களைக் கொள்ள இயலாது. விருஷ்டேரன்னம்'' ம. ஸ்மிருதி

(உரிய) மழையால் உணவுண்டாகிற தென்பது முந்திய வாக்கியத்தின் பொருள். இதனுல் அன்னமென்பது உணவு என்று தெரிகிறது. ''பர்ஜன்யாதன்ன சம்பவ:''ப.கீதை. இதனுனும் அன்னம் உணவென்பது இனிது புலனும். இதனுல் நீரிலிருந்து நிலமுதிக்கின்றதா அல்லது உணவு உதிக்கின்றதாவென்பது பூர்வபக்ஷியின் ஐயம், சித்தாந்தி – இங்கு அன்னமென்னுஞ் சொல்லால் நிலங்கொள்ளப்படுகிறது. எதனுலோவெனின்? பூத உற்பத்தி யதிகாரத்தால். அன்னமெவ்வாறு உத்பத்தியாகிற தென்பதல்ல, பின்னை பூதங்கள் எவ்வாறுத் தோன்றுகின்றன என்பதுதான். பிரகரணுனுசாரம் பொருள் கொள்வது புலவர் மரபு. புலவர் – ஞானிகள். முறை திறம்பாமல் மொழியவேண்டுமென்பது முதுமொழி. அதிகாரம் வருமாறு – ''தத்தேஜோ அசிருஜத'' ''ததபோ அசிருஜத'' அப்பிரஹ்மம் அனலைப்படைத்தது. அந்த ஆன்மா புனலை ஆக்கியது என்பது வேதப்பொருள். இதனுல் ஈண்டு அன்னமென்னுஞ் சொல்லால் அ வ னி யை க் கொள்ளவேண்டும். நிரையாக வந்த நிலத்தைவிட்டு உணவைக் கொள்வது நெறியன்று. நிரை – வரிசை.

கருப்பாக இருப்பதால் அன்னமும் சிவப்பாயிருப்பதால் (ரூபம்) நெருப்பும், வெண்மையாயிருப்பதால் நீருங்கொள்ளப்படுகின்றன. இதனுலும் அன்னத்தின் உருவமும் அவனியின் உருவமும் ஒப்பாக இ ரு ப் ப தா ல் அன்னமென்பதால் அவனியைக்கொள்வது சாலப் பொருத்தம். உருவம் - நிறம். கலையுணர்ந்த கலைஞர்களும் நிலத்தின் நிழலை (நிசி) இரவென்று கூறுகிருர்கள். இதனுலும் நிசி கருநிறமாயிருப்பது போல நிலமும் கருநிறம் என்பது நனி பொருத்தம் நனி - நன்ருக. மேலும் பூமியிலிருந்து ஓஷதியும் ஓஷதியிலிருந்து அன்னமுண்டாகிறதென்னும் வாக்கியத்தாலும் தண்ணீரிலிருந்து தவசமுண்டாவதில்லை யென்பது உறுதி. தவசம் - உணவுப் பொருள். ஆகையால் அன்னமென்றதனுல் புவியைக் கொள்ள வேண்டுமென்பது புலனும். தெளிவென்பது கருத்து. இவ்வவனியும் முன்போல ஆத்மாவிலிருந்து உண்டாகிறதென்பது தெற்றெனத் தெளிவு. இதுவரை ஐம்பெரும்பூதங்களும் ஆன்மாவிலிருந்துண்டாயினவென்று அருளப் பெற்றது.

## 4 4
## தத் அபித்யான அதிகரணம்

அவதாரிகை

ஆகாசமுதல் அவனியீருக உள்ள ஐம்பெரும் பூதங்களும் இயல்பாக உண்டாயினவா அல்லது இறையருளால் உண்டாயினவா என்பது ஐயம். அதற்குப்பதில் சூத்திரம்—

## ரூ. தத்பித்யாணுதேவது தல்லிங்காத்ச : 13

தத், அபித்யாணுத் ஏவது தல்லிங்காத் ச: என்று பிரிக்கவும்.

ப.உ.து = ஐயத்தையகற்றும் பொருட்டு. ச: = அவ்விறைவன். தத் அபித்யாணுதேவ = அந்தந்த பூதத்தின் (அதிஷ்டான ரூபமாயிருந்து கொண்டு) சங்கற்பத்திஞல் அந்தந்த காரியத்தை யுண்டு பண்ணுகிருன். தல்லிங்காத் = படைப்பது. பரமன் செயல். பரமன்.— பரமாத்மா.

வி.உ. ஆகாசமுதலிய பூதங்கள் தாஞகவே தனதுகாரியங்களை யுண்டு பண்ணுகின்றனவா? அல்லது பரம்பொருளா என்பது பூர்வ பக்ஷியின் பொறுமை யில்லாதஐயம். உன் மதம் எங்ஙனமென்று உரைக்க, பூர்வபக்ஷி — தரணிமுதலிய பூதங்கள் தாமாகவே தமது விகாரங்களைச் செய்கின்றன. எவ்வாறு என்று சித்தாந்திக் கேட்பா யாகில், ''ஆகாசாத்வாயு: வாயோரக்னி:'' என்று சுவதந்த்ர வாக்கிய மாயிருப்பதால். சுருதிப்பொருள்வெளி. அசேதனப் பொருளுக்கு சுவ தந்த்ரம் எங்ஙனங் கூடுமென்பாயாகில், குற்றமன்று. நெருப்பு எண் ணியது, நீர் எண்ணிப்பார்த்தது என்றெல்லாம் மறைகளில் கண் டோமே. அதுபோல இப்பூதங்களும் தாமாகவே தமது காரியங்களைச் செய்வதால் என்னதவறு? இதுவரை பூர்வபக்ஷம் இனிசித்தாந்தி — பூர்வ பக்ஷிப்புலம்புவது புன்மையாகும். புன்மைஇழிவு. இறைவன் அந்தந்த ரூபமாக ஆவேனென்று ஆராய்ந்து, (ஆராய்வது எண்ணுதல்) நிஜ சத்யசங்கற்பத்தால் அப்பொருள் வடிவமாஞன் என்பது மறைமொழி. அதுதான் அதற்குலிங்கம். இங்கு லிங்கமென்பது மறைமொழி. அவை வருமாறு—

''ய: பிருதிவ்யாம் திஷ்டன்'' எது, பூமியில் இருந்துகொண்டு பூமியை இயக்கிவைக்கின்றதோ என்றவாக்கிய மெல்லாம் சேதனத் தோடு கூடியபொருளுக்குத் தோற்றமும் ஒடுக்கமுங் காணப் படுகின்றதேயொழிய சேதனவிஹீனபொருளுக்குப் பிரவிருத்திக் காணப் படவில்லை. பிரவிருத்தி — தொழில். ''ஸோ அகாமயத'' அந்த ஆத்மா

(அனேகனுவேன்) என்று விரும்பியது. ''சச்சத்யச்ச அபவத்'' அது உருவமும் அருவமுமானது. அது — ஆத்மா உருவம் — நிலம், நீர், நெருப்பு. அருவம் — வெளி. வளி. வெளி — ஆகாசம். வளி — காற்று. நெருப்புப்படைத்தது, நீர் படைத்தது, நிலம்படைத்தது என்ற வாக்கியத்திற்குப் பொருள் நீகூறுவதுபோலன்று. பின்னை? அந்தந்த பொருளில் ஆவேசமான சேதனமென்பது பொருள். ஆவேசம் — நுழைதல். ஆன்மாவைத்தவிர பார்ப்பவன் யாருமில்லை யென்னும் வாக்கியத்தாலும் உணர்க. இதனுல் எண்ணிப்பார்த்துப் படைக்கும் வலிமை ஆத்மாவிற்கு உரியவை. பிரகரணுத்தென்னும் சூத்திரத் தாலும் புலனும். ''ஆக்குவாய் காப்பாய் அழிப்பாய் அருள் தருவாய் என்னும் திருவாக்காலும் தெள்ளியுணர்க. மணிவாசகத்தாலும் மறை முடிவு தெளிவாகின்றது. மறைமுடிவு — வேதாந்தம்.

## விபரியயாதிகரணம்.

### அவதாரிகை

பூதஉத்பத்தி இதுவரைச் சிந்திக்கப் பெற்றது இனி லயத்தைப்பற்றிச் சிந்திக்கப்படுகிறது. சூத்திரம்வருமாறு.

# சூ. விபர்யயேணது க்ரமோத உபபத்யதேச 14

விபரியயேண, து, க்ரம:, அத:, உபபத்யதேச என்று பிரிக்கவும். ப.உ.து — ஆனுல். அத: = தோற்றத்தின் விபரியயேண = மாறு பட்ட முறையாகவே இலயம் ஆகின்றது.

வி. உ. பூதத் தோற்றத்தைப்பற்றி இதுவரை விசாரிக்கப் பட்டது. இனி இலயமுறை சிந்திக்கப்படுகிறது. முறையில் லாமல் இலயமாகின்றதா அல்லது தோற்றத்தின் முறையாக லய மாகின்றதா என்பது ஐயம். மேலும் தோன்றியவாறு ஒடுங்குகிறதா அல்லது வேறுபட்ட முறையாக ஒடுங்குகிறதா வென்றும் ஐயமுண்டா கிறது. ''யதோவா என்ற சுருதி ஆக்கலும், காத்தலும், அழித்தலும் பிரஹ்மத்தின் வயமென்று கூறுகிறது. முத்தொழிலையும் பொதுவாக மொழிந்திருக்கிறதேயன்றி விரிவாக லயத்தைப்பற்றி விளம்பவில்லை.

ஆகையால் ஐயமெழுவது இயல்பே. அதை யகற்றுவதும் மரபே. சித்தாந்தி — இலயத்தின் முறை படைப்பின் முறைக்கு மாறு பட்டதாகவே இருக்கவேண்டும். எங்ஙனம் எனின்? உலகில் படியேறு

கிறவன் ஏறும்போது கீழேயிருந்தும் இறங்கும்போது மேலேயிருந்தும் செயல்படுகிறுன். அதுபோல வென்று அறிக. மண்ணிலிருந்து உண்டான குடமுதலிய மட்கலங்கள் மண்ணிலும் நீரிலிருந்துண்டான தரங்கங்கள் நீரிலும் ஒடுங்குகின்றன என்பது தெளிவாகிறது. மேலும் நிலத்திலிருந்துண்டான காரியங்களனைத்தும் நிலத்திலும் நிலம், நீரிலும், நீர் நெருப்பிலும், நெருப்பு நிறைந்த வாயுவிலும், வாயு நிகழ் விசும்பிலும், விசும்பு நின்மல ஆன்மாவிலுமொடுங்குகின்றன வென்று புராணங்கள் புகலுகின்றன. இதனுலும் தோற்றத்திற்கு மாருக ஒடுக்கமென்பதுத் தெளிவு. தூலம் சூக்குமம் காரணம் காரணுதீதம் முதலிய எல்லாப் பொருளும் பரம காரண ஆன்மாவில் ஒடுங்குமென்பது உறுதி. ஆனுல் ஆன்மாவிற்கு ஒடுக்கமில்லை. காரியங்கள் ஒடுங்கும் பொழுது காரணமொடுங்க வேண்டுமென்று நியாயமில்லை. அதுவும் ஒடுங்கினுல் காரியத்திற்கு நிலையில்லாது போகும். ஆதலின் தோற்றம்போல் ஒடுக்கமுமிருக்க வேண்டுவதில்லை. காரணமிஞ்சியிருப்பது முறையே. ''பூர்ணமேவ அவசிஷ்யதே'' என்ற சுருதி வாக்கியமும் இதைப்புலனுக்குகின்றது.

### அந்தரா விக்ஞாளுதிகரணம்

அவதாரிகை

பூதங்களின் தோற்றமும் அதன் மாறுபட்ட ஒடுக்கங்களும் உரைக்கப் பெற்றன. ஆத்மாவை ஆதியாகக் கொண்டு சிருஷ்டியும் அதையந்தமாகக் கொண்டு லயமும் மொழியப்பட்டன. இனிப்பொறிகளுக்கும் மனம் புத்திகளுக்கும் தோற்றமுண்டா? உண்டானுல் அது எவ்வாறு? இதற்குப் பதில் சூத்திரம் வருமாறு—

## சூ. அந்தரா விக்ஞான மனஸீக்ரமேண தல்லிங்காதிதிசேந் ந அவிசேஷாத் 15

அந்தரா, விக்ஞானமநஸீ, க்ரமேண, தல்லிங்காத், இதி, சேந், ந, அவிசேஷாத், என்று பிரிக்கவும்.

ப.உ, அந்தரா = ஆத்மாவிற்கும் பூதங்களுக்கும் இடையில். தல்லிங்காத் = மறைமொழிகளால் (ஏதஸ்மாத் ஜாயதே யென்ற வாக்கியத்தால்) விக்ஞான மனசீ = மதிபொறி மனம் என்பவைகள் முறையாக உண்டாகின்றன. இதனுல் படைப்பு முறைக்குப் பங்க

முண்டாகும் என்பாயாகில். இதிசேத்ந = இவ்வாறு கூறுவாயாகில் அது பொருந்தாது. அவிசேஷாத் = மேற்கூறிய பொறி மன முத லியவைகள் பூதகாரியமாவதால் அந்த முறைப்படி ஆவதில் குற்ற மொன்றுமில்லையாம்.

வி. உ. பூதத்தின் படைப்பை முறையாக மொழிந்துவிட்டு பிராணாதி பொறிகளின் சிருஷ்டியைப் பற்றிச் சிறிதுச் சிந்திக்கின் றோம். பல இடங்களில் பொறிகளையும் மனம் புத்தியையும் (சத்பாவ) நிலையுள்ளதாகக் கூறியிருக்கிறது. கடவல்லியில் பொறிகளைக் குதி ரையாகவும், மனதைக் கடிவாளமாகவும், மதியை நடத்துபவனாகவும், கூறியிருக்கிறது. இதனால் இவைகளுக்குத் தோற்றமுண்டோ இல் லையோ வென்ற ஐயம் எழுகின்றது. இதை யகற்றும் பொருட்டு சுருதி " ஏதஸ்மாத்ஜாயதே பிராணோ மன சர்வேந்திரியாணிச " என்ற அதர்வண சுருதியினால் தெரிகின்றது. ஏதஸ்மாத் = இப்பிரஹ் மத்திலிருந்து பிராணன் மனம் புத்தி யிந்திரியங்கள் உண்டாகின்றன வென்று சுருதி மொழிகின்றது. எல்லாமுண்டாகின்ற போது இவை மட்டும் ஏன் உண்டாகமாட்டா? உண்டாகும் என்பது உறுதி. ஆனால் அச்சுருதியின் முறைப்படி யாராய்ந்தால் ஆத்மாவிற்கும் ஐம்பூதங் களுக்கும் இடையில் உண்டாகின்றன என்பதுத் தெளிவாகிறது. இதனால் முன்மொழிந்த பூதக்கிரமத்திற்கு முரணாகுமேயென்பாயாகில் அது சரியன்று. ஏனெனின்? பூதங்களுக்கு வேறாகக் காரணமிருக்கு மானால் அதை நாம் தேட வேண்டும். பூதகாரியமாக இருப்பதால் அன்ய காரணத்தைத் தேடவேண்டாம், பிரிய மகனே! மனம் அன்ன மயம், பிராணன் ஜலமயம் வாக்கு நெருப்புமயம் என்று மறைகளில் கூறக்காண்கின்றோம். மயம் – காரியம். அவிசேஷம் – விசேஷமற்றது. இதனால் இந்திரியங்கள் பூதகாரியமென்பதில் லிங்கம். இனிது புலனாம். அடையாளங்கள் – லிங்கம், அடையாளம், குறி, சின்னம், சுருதி, வாக்கியமென்பன ஒரு பொருளைத் தருகின்ற பல சொற்கள்.

சிற்சில இடங்களில் பிராஹ்மண பரிவிராஜக நியாயம் போல பூதமென்னும் சொல்லால் பொறிகளையும் கொள்ளவேண்டும். பிராஹ் மண பரிவிராஜக நியாயம் – அந்தணரை யழைத்து வாருங்கள் என்னுஞ் சொல்லால் அடியார்களையும் அழைத்து வரவேண்டுமென்பது பொருள். அந்தணர் – பிராஹ்மணர். அடியவர் – பரிவிராஜகர் – சந்நியாசி, நியாயம்முறை. சில இடங்களில் பூதத்தை முந்தியும் பொறிகளைப் பிந்தியும், சில இடங்களில் பொறியை முந்தியும், பூதத்தை

பிந்தியும் உண்டாயிற்றென்று உரைத்திருக்கிறது. இந்த முறையாக எண்ணிப்பார்த்தாலும் இனைத்துப் பொருள்கொள்ளு மிடத்து அனைத் திற்கும் நல்லது. ஒரு பிரஜாபதியிருந்தார், அவர் எண்ணினர், மனதையுண்டு பண்ணினர், அவரெண்ணினர் வாக்கைப்படைத்தார். என்றெல்லா மறைகளில் காண்கின்றோம். இதனுல் இரும்பூதத் தோற்றத்திற்கு மாற்றமில்லே. இரும்—பெருமை, மாற்றம்—குற்றம்.

### சராசர வியபாஸ்ரய அதிகரணம்.

#### அவதாரிகை

ஜீவனுக்கும் தோற்றமுண்டாகிறது. தோற்றம் - உத்பத்தி. எவ்வாறெனின்? செல்வன பிறந்தான், மல்லன் இறந்தான் என்று உலகில் உரைக்கின்றார்கள். குழந்தை பிறந்தது, குழந்தைக்குரிய சடங்குகள் செய்யப் பட்டனவென்று வியவகாரத்தில் விளம்பக்கேட் கிறோம். விளம்புதல் சொல்லுதல், இதனுல் ஜீவனுக்குப் பிறப்புண் டென்பது பூர்வபக்ஷம். இதை நீக்கும் பொருட்டு சூத்திரம் வருமாறு—

## சூ. சராசரவ்யபாஸ்ரயஸ்து ஸ்யாத் தத்வ்யபதே[3]ஸோ பா[4]க்தஸ் தத்பா[4]வ பா[4]வித்வாத் 16

சராசர, வியபாஸ்ரய:, து, ஸ்யாத், தத், வ்யபதேஸ:, பாக்த:, தத்பாவ, பாவித்வாத் என்றுபிரிக்கவும்.

ப.உ. தத்வ்யபதேச: = (ஜன்மமரணம் ஜீவனுக்குண்டென்னும்) உபதேசம். சொல்லுதல். உலகவியவகாரம். சராசரவியபாஸ்ரய: = ஜட = சேதனத் தேஹவிஷயம்: முக்கியமாகும். பாக்த: = ஜீவனிடத்தில் கௌணம். தத்பாவபாவித்வாத் = ஜென்மமரண வியவகாரம் தேகம் உண்டான பொழுதும் நாசமான போதும் உண்டாகிறது.

வி.உ. ஜீவனுக்கும் உத்பத்தி நாசமுண்டாகின்றன. குழந்தைபிறந்தது. அது இறந்தது என்னும் வியவகாரம் உலகில் காணப்படுகிறது. மேலும் பிறந்த இறந்த குழந்தைகளுக்கு ஜாதசடங்கு மரணசடங்கு செய்யப்படுகின்றன வென்று பூர்வபக்ஷி சங்கை. அதை விலக்கும் பொருட்டு சித்தாந்தபக்ஷம் வருமாறு.

சித்தாந்தி - ஜீவனுக்குத் தோற்றமும் ஒடுக்கமும் உண்மையில் இல்லை. உலகத்தவர் சொல்பிரமாணமன்று. ஒள்ளிய உணர்வுநூல் வாக்கியந்தான் தெள்ளிய பிரமாணமாகும். உடல்ஒடுங்கிய உடனே (உயிரும்) ஆன்மாவும் ஒடுங்கிவிடுமானல் இங்ஙனம் இவன் செய்த வினையின்பயனை அங்ஙனம் யாரனுபவிப்பவர்? ஒருவன் செய்தவினையை மற்றொருவன் எவ்வாறு நுகரமுடியும்? ஒருவன் உண்ண மற்றொருவன் உதரம், (வயிறு) எவ்வாறு நிறையும்? நிறையாது தானே. அதுபோல எந்தஜீவன் யாண்டுவினை செய்கிருனே அந்த ஜீவன் எஞ்ஞான்றும் இருந்தால்தானே அப்பயனையவனல் நுகரமுடியும். எஞ்ஞான்று – எக்காலத்தும்.

அஜ்ஜீவனிருக்கப் போய்தான் வினையின் பரிகாரம் வேதத்தில் விதிக்கப்படுகிறது. 'சராசரவ்யபாஸ்ரய;' ''ஜீவாபேதம் வாவகிலேதம் மிரியதே ந ஜீவோமிரியதே'' இதம் = சரீரம். ஜீவபேதம் = ஜீவனை விட்டுவிட்டு மிரியதே = அழிகிறது. கில = உறுதி. ஏன்பது சா. சுருதி. இதனுனும் யாக்கை யழிகிறது ஆன்மா அழிகிறதில்லையென்பதுத் தெளிவு. காயமிருக்கப் போகிறதில்லை யாத்மா இறக்கப் போகிறதில்லையென்பது பொன்மொழி. சரம் – உயிருள்ள பொருள். அசரம் – உயிரில் பொருள். தானுக இயங்குவதால் சரம். பிறவற்றுல் இயங்குவதால் அசரம் என்றும் அமையும்.

பூர்வபக்ஷி ஜன்மமும் மரணமும் எதை முக்கியமாய்க் கொண்டிருக்கிறதெனின்? யாக்கையை. ஜன்மமரண சரீரஸ்ய என்பது மறைமொழி. காயம், யாக்கை, சரீரம் என்பன ஒரு பொருள்.

தத்பாவ பாவித்வாத் – உடல் உதிக்கிற போது ஆன்மா உதிக்கிறதென்றும், உடல் ஒடுங்கும் போது ஆன்மா ஒடுங்குகிறதென்றும் உரைக்கப்படுகிறது. காயசம்பந்தமில்லையானல் இறப்பையும் பிறப்பையும் யாரும் அறியார். ஊழின் வலியால் உடலோடு ஒன்றுவது பிறப்பும் அதன் வலியால் ஒருவுவது இறப்புமாம். ஒரு ஊழ் மூட்டும் மற்றொரு ஊழ் பிரிக்கும். ஒருவுவது – விட்டொழிவது. சம்ஸ்காரங்களும் தேகசம்பந்தத்தினுல் தான் செய்யப்படுகிறது. ஆத்மாவிற்கு அன்று. ஆன்மா என்றும் புனிதமானது. ''தேஹிசாத்யந்தம் நிர்மல:'' விவேகசூடாமணி. பொருள்வெளி. அத்யந்தம் — முற்றிலும். ''நிர்தோஷம் ஹி சமம் பிரஹ்ம'' ப. கீதை. பிரஹ்மம் சமம் – விஷமமற்றது. நிர்தோஷம் குற்றமற்றதென்பது கீதையின்

பொருள் ''சுத்தமபாபவித்தம்'' சுருதி. (ஆத்மா) தூய்மையும் புனிதமுமாம். இதனுல் ஆத்மாவிற்குப் பிறப்பிறப்பு இன்றென்றும், தேகத்திற்குண்டென்றும் உறுதி.

4

## ஆத்மாதிகரணம்

### அவதாரிகை

ஜீவன், உடல், உரிய பொறிகள், உள்ளம், மனமுதலிய கூண்டுக்குத் தலைவன். இவன் மற்றைய வஸ்துக்களைப் போல பிரஹ்மத்திலிருந்துத் தோன்றுகின்ருனைத் தோன்றவில்லையா என்பது ஐயம். அதையகற்றும் பொருட்டு அடுத்த சூத்திரம் வருமாறு:

## சூ. நாத்மா அஸ்ருதே: நித்யத்வாச்சதாப்ய:17

ந, ஆத்மா, அஸ்ருதே: நித்யத்வாத்ச, தாப்ய: என்று பிரிக்கவும்.

ப.உ. ஆத்மா = ஜீவன்ந = உத்பன்னம் ஆகிறதில்லை. அஸ்ருதே: = ஏனெனின்? ஜீவன் உண்டாவதாக சுருதிகள் காணப்படவில்லை. நித்யத்வாத் - நித்தியமாக இருப்பதால் தாப்ய: = (ஆத்மா உண்டாகிற தில்லை) என்று சுருதிகள் கூறுகின்றன.

வி.உ. உடல், உணர்வு, உள்ளம், மனம், புத்திமுதலிய கருவிகளுக்குத் தலைவனும், கருமபல சம்பந்தியாகிய ஜீவனும் ஆகிய ஆத்மா ஆகாசாதிகளைப் போன்று தோன்றுகிறதா அல்லது பிரஹ்மத்தைப் போலத் தோன்றுகிறதில்லையா என்பது ஐயம். சில சுருதியில் கனலிலிருந்து பொறிகள் உண்டாவது போல் பிரஹ்மத்திலிருந்து ஜீவனுண்டாகிருன் என்றும், சில இடங்களில் பிரஹ்மமே நேராக ஜீவரூபமாக நுழைந்திருக்கிறது என்றும் இவ்வாறு கூறுவதால் ஐயமெழுகிறது.

இவ்விடத்தில் இச்சூத்திரம் ஜீவனுக்குத் தோற்றம் இல்லையென்று இசைக்கின்றது. இசைத்தல் - சொல்லுதல். அவ்வாறு உரைத்தாலும் பூர்வபக்ஷி சிறிது ஐயத்தையுண்டுபண்ணுகிருன்.

ஜீவன் தோற்றுகிருன், பிரதிக்ஞா பங்கமாகாமல் இருப்பதால், பிரதிக்ஞை— எதை யொன்றையறிந்தால் எல்லா மறிந்ததாகின்றதோ என்னுஞ் சூளுரைக்கெடாமலிருக்கும். எல்லாம் பிரஹ்மத்திலிருந்து

உண்டானதால் தான் பிரஹ்மத்தையறிந்ததனல் எல்லாமறிந்ததாகின்றன. ஜீவன் உண்டாகாமல் போனல் பிரஹ்மத்தையறிந்தால் ஜீவன் அறிந்தவனுக ஆகமாட்டான். பிரஹ்மம் ஜீவரூபமாக நுழைந்ததென்பதும் பொருந்தாது. ஏனெனின்? பிரஹ்மம், பாவ முதலிய தோஷரஹிதம், ஜீவன் குணங்குற்றங்களோடு கூடியவன். ஆகலின் இருவரும் ஒருவரென்பது ஒவ்வாது. பொருந்தாதென்பது குறிப்பு. எது பிரஹ்மத்திற்கு வேறே அது விகாரமுடையதாம்; ஆகாசாதிபோல. இதனல் ஜீவனும் விகாரமுடையவனென்பது தெளிவு.

சித்தாந்தி—ஜீவன், உண்டாகிறதில்லை. எதனலோவெனின், ஜீவன், உண்டாவதில் சுருதிப்பிரமாணமின்று. ஜீவனுக்கு உத்பத்தி யாண்டு கூறியிருக்கிறதோ ஆண்டு பூர்வபக்ஷத்தை விளக்குவதற்காக. யாண்டு—எங்கே. ஆண்டு அங்கே. அஃதல்லாமலும் எந்தச்சுருதி ஜீவனுக்குத் தோற்றம் கூறியிருக்கிறதோ அந்தச்சுருதியில் ஜீவனை அஜன், அவிநாசி யென்றுங் கூறியிருக்கிறது. அஜன்—பிறப்பற்றவன். அவிநாசி—நாசமற்றவன். அஃதன்றியும் ஜீவனை அஜமென்றும், அவிகாரியென்றும் அனந்தமென்றும் பாவமுதலிய வினையினின்று விடுபட்டவனென்றும், ஜீவன் பிரஹ்ம சொரூபமென்றும் வேதங்களில் விளம்பப் பட்டிருக்கின்றன. ''நஜீவோம்ரியதே'' ஜீவன் இறக்கிறதில்லை. ''சவா ஏஷ மஹானஜ ஆத்மா'' அவ்வகைப்பட்ட இந்த ஆத்மா மஹான்—பெரியது. அஜரோ அமரோ - தோற்ற மொடுக்கமின்றியது என்பது பொருள். ''அஜோநித்ய; ஸாஸ்வதோ அயம் புராண;'' க.உ. பிறப்பற்றதாயும் நாசமற்றதாயும் நிலையுற்றதாயும் இந்த ஆன்மா பழமையானதாயுமிருக்கிற தென்பது கடவல்லியின் பொருள்.

ஞானிக்குப் பிறப்பிறப்பில்லை. ஞானிக்கில்லையின்பமும் துன்பமும். ''சஏஷஇஹ பிரவிஷ்ட ஆநகாக்ரேப்ய ஆலோமேப்ய:'' ச = ஆத்மா. இஹ = இந்தச்சரீரத்தில் பிரவிஷ்ட: = நுழைந்து, ஆநகாக்ரேப்ய: ஆலோமேப்ய: = நகத்திலிருந்து சிகைவரை நிறைந்திருக்கிறதென்பது சுருதிப் பொருள். இதனுனும் இந்த ஜீவனுக்கு பிறப்பிறப்பில்லை யென்பது இனிது புலனும். மேலும் ''அயமாத்மா பிரஹ்ம'' இந்த ஆன்மா பிரஹ்மம். ''தத்வமசி = நீ, அதுவாயிருக்கிருய். அது = பிரஹ்மம். ஜீவேஸ்வரர்களுக்கு பேதமும் உபாதியினுல் வந்ததேயன்றி சொரூபத்தாலன்று ''உபாதியால் வருபேதமே யிவர்பேதம்'' (சசி

வன்ன போதம்) பொருள்வெளி. ''அத ஊர்த்வம்'' என்னுஞ் சுருதியாலும், அதாவது இதற்கு மேல் மோக்ஷத்திற்குரிய வழியைக் கூறவேண்டும் என்னும் வாக்கியத்தாலும் விக்ஞானமய ஆன்மாவை நன்கு விளக்குகின்றதென்பதுத் தெற்றெனத் தெளிவாகின்றது· ஆன்மாவிற்கு எங்கேயாயினும் தோற்றமும் ஒடுக்கமும் கூறியிருப்பின் அதுவும் உபாதி நிமித்தமேயாம். விஞ்ஞானமயன். மனோமயன், சக்ஷுமயன் ஸ்ரோத்ரமயன் என்றெல்லாம் மொழிந்து தன்னந்தனியான பிரஹ்மத்தை அந்தந்த மயமாக உரைத்தது உபாதியால் என அறிக. ஆகலின் ஆன்மாவிற்கு உத்பத்தி நாசமில்லை யென்பது உறுதி.

4

## க்ஞாதிகரணம்.

### அவதாரிகை

வைசேஷிக மதத்தில் ஆத்மாவிற்கு சைதன்யம் இடையில் வந்ததென்றும், சாங்கிய மதத்தில் ஆத்மாவிற்கு சைதன்ய மென்றுமுள்ளதென்றும் கூறுவார்கள். ஆகலின் இவ்விஷயத்தில் சந்தேகம். ஆத்மாவிற்கு சைதன்யம் என்றுமுள்ளதா? இடையில் வந்ததா என்பதை விளக்கும் பொருட்டு சூத்திரம் வருமாறு -

## சூ. க்ஞோ அதஏவ 18

க்ஞ:, அத:, ஏவஎன்று பிரிக்கவும்.

ப.உ. க்ஞ:=ஜீவன், சுவயம் ஜ்யோதி சொரூபன். அதஏவ =ஆகையால் ஆத்மாவிற்கு ஆக்கமும் அழிவும் இன்று. வி.உ. அந்த ஜீவன் இடையில் சைதன்ய வடிவனுக இருப்பினும் இயல்பாக அசேதனன் என்பது வைசேக்ஷிகமதம். சாங்கிய மதஸ்தர்கள் இதை நிராகரித்து விட்டு நித்யச் சைதன்ய வடிவன் ஜீவன் என்று நிறுவுகின்றூர்கள். நிறுவுதல் நிலை நிறுத்துதல். இருவரும் இவ்வாறு இசைப்பதால் ஐயமெழுகின்றது. இசைப்பது சொல்லுதல். நெருப்பில் குடத்தைச் சிறிதுநேரம் இட்டு வைத்திருந்தால் நெருப்புக்குங் குடத்திற்கும் தொடர்பு உண்டாகி குடஞ்சென்னிறமாகக் காணப்படுகிறது. குடத்தில் காணப்படுஞ் சென்னிறம் இடையில் வந்தது. அதுபோல ஆத்ம மனதொடர்பால் ஜீவனிடத்தில் சைதன்யம் இடையில் வந்ததென்று கணுதர்கள் கழறுகின்றூர்கள். கழறுதல் — சொல்லுதல். அவர்கள் தருந்தருக்கம் — ஜீவன் நித்யச்சைதன்ய வடிவினனுக இருந்தால் உறக்கத்திலும், மூர்ச்சிதநிலையிலும் சேதனமிருக்க

வேண்டும். அவ்வாறு காணோம். அந்நிலையில் யாரும் எதையுங் கேட்டாலும் யாதுங்கூறுமல் தெளிந்தபிறகு சேதனத்தோடு சம்பந்தப் பட்டு கூறுகின்றுன். இதுதான் அவர்கள் மதம். அவர்கள் கணுதர்.

சித்தாந்தி—ஆத்மா நித்யச் சைதன்ய வடிவினன். அதனுல் உண்டாகிறதில்லை. இதனுல் ஜீவன் விகாரமற்ற பிரஹ்ம சொரூபன். உடல்களை நிமித்தமாகக் கொண்டு பிரஹ்மம் ஜீவனென்று வளங்கப் படுகிறது. ''விக்ஞான மானந்தம் பிரஹ்ம'' சத்யம் ஞானமனந்தம் பிரஹ்ம என்ற வாக்கியங்களாலும் ஆத்மா இயல்பாக சைதன்ய வடிவன் என்பது நன்கு புலனும். உறக்கத்திலும், மூர்ச்சையிலும், ஒன்றும் உரையாதிருப்பதற்குக் காரணம் சேதனத்தின் இன்மை யன்று, பின்னை பொருளின் இன்மையாம். எங்ஙனம் ஒலியின்மை யால் ஆகாசம் இன்மை போல தெரிகிறதோ அதுபோல கருவி கரணங்கள் இன்மையால் அறிவிழந்திருக்கின்றுன், சேதன இன்மை யாலன்று. வைசேஷிக மதஸ்தர்கள் கூறுந் தருக்கம் வேதவிருத்த மானதால் கானல் நீர் போறகாணக்கிடக்கின்றது. ஆகையால் ஆத்மா நித்ய சைதன்ய வடிவினனென்பதுத்துணிபு.

## உத்க்ராந்தி[3] கத்யதிகரணம்[4].

### அவதாரிகை

இப்பொழுது ஜீவன் அணுப்பரிமாணமுடையவனு அல்லது மஹத்பரிமாண முடையவனுவென்று பரிசீலிக்கப்படுகிறது. பரிமாணம் —அளவு. அணு—சிறியது. மஹத்—பெரியது.

## ஸூ. உத்க்ராந்திக[3]த்யாக[3]தீனும் 19

உத்க்ராந்தி, கதி, ஆகதினும் என்று பிரிக்கவும்.

ப. உ. உத்க்ராந்தி=ஆத்மா சரீரத்திலிருந்து வெளியேறுவது. கதி=செல்லுதல். ஆகதீனும் = மீண்டும் திரும்புதல்.

வி. உ. ஜீவன் என்ன அளவுடையவன்? அளவு மூவகைத்து. அணு- சிறியது. மத்யமம்—இடையது. மஹத்—பெரியது. இவை களில் ஆத்மா எந்த அளவையுடையது என்பது கேள்வி. ஜீவன்

அணுப்பரிமாணமுடையவனு, அல்லது மத்யமப்பரிமாணமுடையவனு, அல்லது மஹத்பரிமாணமுடையவனு வென்பது சங்கை. இந்தக் கேள்வியும் மயக்கத்தால் எழுகிறது. ஏனெனின், ஆத்மாவிற்கு உற்பத்தியில்லை, நித்யசைதன்யவான். இதனுல் இவன் பரமாத்ம சொரூபன் என்பதுத் தெளிவு. ஆகையால் இவன் அநந்தன். இவன் என்றது—ஆன்மாவை. ஆன்மா அனந்தன் என்று அனந்த மறைகள் அறைகின்றன. அறைவது—அருளுவது. இதனுல் எந்த அளவுடையது ஆன்மாவென்று பிரச்னையேயில்லை. ஆனுலும் பார்வையிழந்தவனுக்குப் பகற்பொழுது இரவாவதுபோல அளவில் ஆன்மாவையளவுடையதாகக் கருதுகிருன்.

பூர்வபக்ஷி – பலசுருதிகளில் ஆன்மாவிற்குப் போக்குவரத்துப் புகலப்பட்டிருக்கிறது. போக்கு—கதி. வரத்து — ஆகதி. எதற்குப் போக்குவரத்துஉண்டோ அதற்கு அளவுமுண்டு. அளவு—பரிச்சின்னம். உத்க்ராந்தி - உடலை விடுவது. சில இடங்களில் ஸ்வ என்னுஞ் சொல்லால் அணுப் பரிமாணம் கூறியிருக்கிறது, இச்சங்கையை யகற்றும் பொருட்டு பரிமாண விசாரஞ் செய்யப்படுகிறது. ''ச யதஸ் மாத் சரீராத் உத்க்ராமதி'' ஆத்மா இந்த உடலிலிருந்து வெளி யேறுகிறது என்றும், ''அஸ்மாத் லோகாத் ப்ரயந்தி''... என்றும், ''தஸ்மாத் லோகாத் புனரேத்யஸ்மை லோகாயகர்மணே'' என்றுங் கூறியிருக்கிறது. இதில் முன்னது உத்க்ராந்தியையும் நடுவது கதி யையும், பின்னது ஆகதியையும் குறிக்கும். இந்த உலகத்திலிருந்து போகிருன் என்பது இரண்டாவது சுருதிக்குப்பொருள். அவ்வுலகத் திலிருந்து மீண்டும் வருகிருனென்பது மூன்ருவது சுருதிக்குப் பொரு ளென்றுக் கொள்ளவும். இதனுல் ஜீவனுக்கு அணுப்பரிமாண முண் டென்றுத் தெரிகிறது.

### அவதாரிகை

பூர்வபக்ஷியின்னும் பல சூத்திரங்களால் தனது அணுப்பரி மாணத்தை நிலை நிறுத்துகிருன்.

## சூ. ஸ்வாத்மனுச உத்தரயோ: 20

ஸ்வாத்மனு, ச, உத்தரயோ: என்று பிரிக்கவும்.

ப. உ. உத்தரயோ : = உடலைவிட்ட பிறகு உண்டான கதி— செல்லுந் தன்மையும், மீண்டும் திரும்பும் தன்மையும். ஸ்வாத்மனு = ஆத்மாவாகிய கர்த்தாவோடு சம்பந்தமானதால் ஆத்மா அணு வாகின்றது.

வி. உ. ஒரு வேளை வெளியேறுந்தன்மை அசல் ஆன்மாவிற்கு உண்டாகக் கூடும், ஆனால் மீண்டுந்திரும்புந்தன்மை (ஆகதி) அசை வற்ற ஆன்மாவிற்கு உண்டாகமாட்டாது. ஏனெனின், கதிக்கு சம் பந்தம் தனது ஆத்மாவோடுண்டாகிறது. தேகத்தை விட்டு வெளி யேருத ஆன்மாவிற்கு செல்லுந்தன்மை யெவ்வாறு பொருந்தும். சுருதிகளில் சரீரத்திலிருந்து ஆன்மா வெளியேறுவதாக மொழிந்திருக் கிறது. ''சக்ஷுஷோவா மூர்த்னோவா அன்யேப் யோவா சரீரதே சேப்ய:'' உடலிலிருந்து (உயிர்) ஆன்மா சக்ஷுஷோ வா = கண்ணி லிருந்தும், மூர்த்னோவா சிரசிலிருந்தும், தேகத்தின் மற்றைய யுறுப்புக்களில் இருந்தும் வெளியேறுகிறதென்பது மறைமொழி. இதனாலும் ஆத்மா அணுவென்று நன்குக்காணக் கிடக்கின்றது.

**அவதாரிகை**

இடையில் சிறிது சித்தாந்தி சமாதானம் செய்தார் அதற்குப் பூர்வபக்ஷி விலக்குத் தெரிவிப்பது.

## ஸூ. நாணு: அதச் சுருதேரிதிச்சேந் நேதராதிகாராத் 21

ந, அணு:, அதத்சுருதே:, இதி, சேத், ந, இதர, அதிகாராத் என்று பிரிக்கவும்.

ப. உ. (ஜீவன்) ந அணு: = அணுப்பரிமாணன் அன்று. அதத் சுருதே: = சுருதிப் பிரமாணமில்லாததால். இதிசேத் = என்று சித்தாந்தி கூறுமிடத்து, ந = அது பொருந்தாது. ஏனெனின், இதராதிகாராத் = பிரஹ்ம பிரகரணமாயிருப்பதால்.

வி. உ. ஜீவன் அணுப்பரிமாணன் அல்லன். எதனாலோ வெனின், ஜீவனையணுப் பரிமான முடையவனென்று மறைகளில் மொழியக்காணோம், மேலும் மாறாக ஜீவனை மஹான் என்று இயம் பிருக்கின்றது, ''சவா ஏஷ்மஹான் ஆத்மா யோஅயம் விக்ஞானமய:'' பி. உ. சவா ஏஷ = அவ்வாறு இந்த ஆத்மா. அஜ: = பிறப்பற்றவன் யோஅயம் விக்ஞானமய: அப்படிப்பட்ட இந்தஆத்மா விக்ஞானமயன்

என்பது மறைப்பொருள், இதில் மஹானென்பது வியாபகத்தை குறிக்கிறது. எங்கும் நிறைந்தது ஏகதேசத்தில் எவ்வாறிருக்க முடியும் என்பது சித்தாந்தியின் கருத்து.

பூர்வபக்ஷி—அது பொருந்தாது. எங்ஙனமெனின், முன்னே மொழிந்த சுருதிஇதரபிரகரணத்தைக் குறிக்கின்றது. இதரபிரகரணம் பிரஹ்மபிரகரணம். மஹானென்ற சொல் பிரஹ்மத்தையறிவிக்கிறதே யொழிய ஜீவனை அறிவிக்கவில்லை. மறைமுடிவில் பரமாத்மாவையறிய வேண்டுமென்று மொழிந்திருக்கிறதே தவிர ஜீவாத்மாவை அறிய வேண்டுமென்று கூறவில்லை. ஆகலின் மஹான் பரமான்மாவென்பது வெளி. வானைப்போல எங்கும் நிறைந்தது. இடம் பொருள் எல்லையைக் கடந்தது. பாவபுண்ணியத்தைப்பற்றுதது. தாமரையிலைத்தண்ணீர் போல் எதையுந்தழுவாதது. ககனத்தைப்போன்று கரையில்லாதது. கறையற்றது, புரையற்றது என்றெல்லாம் மொழிந்திருக்கிறது. கறை—அழுக்கு. புரை—குற்றம். கரை—எல்லை. இவையெல்லாம் பிரஹ்மத்தையுணர்த்துகின்றன. இதனுல் பிரஹ்மாதிகாரமென்பது இனிது புலனுகின்றது. இவையெல்லாம் எண்ணிப்பார்க்கும்பொழுது ஜீவனுக்கு அணுப்பரிமாணமுண்டென்பது உறுதி.

### அவதாரிகை

ஜீவன் அணுப்பரிமாணமுடையவன் என்பதை எதிரி யின்னும் கூறுகின்றுன். எதிரி—பூர்வபக்ஷி.

## ஸூ. ஸ்வசப்தோன்மாநுப்யாஞ்ச 22

ஸ்வ, சப்த, உன்மாநுப்யாம், ச என்று பிரிக்கவும்.

ப. உ. ஸ்வசப்தம் = சுருதிவாக்கியம். உன்மாநுப்யாம் = உன் மானம்—அளவு. இருமறைமொழிகளாலும் ஜீவன் அணுப்பரிமாண முடையவன் என்பது நன்கு காணலாம்.

வி, உ. இருமறைகளாவன—'' ஏஷோணுராத்மாசேதஸா வேதிதவ்ய: யஸ்மின் பிராண: பஞ்சதா...'' இந்த ஆன்மா அணு, சேதஸா வேதிதவ்ய: = மனதைக் கொண்டறிய வேண்டும். யஸ்மின் = எந்த பிரஹ்மத்தில் பிராண: = பிராணன் ஐந்து விதமாக விளங்கு கின்றுனே என்பது சுருதிப்பொருள். இரண்டாவது மறை—

''பாலாக்ரசதபாகஸ்ய = மயிரிழையை நூறுபாகஞ் செய்து அதில் ஒருபாகத்தைப்போல ஜீவனுவான் என்பது இரண்டாவது சுருதியின் பொருள்.

இவ்விரண்டு மறை மொழிகளாலும் ஆத்மா அணுவென்பதுத் தெளிவாகிறது. அஃதன்றியும் பிராண சம்பந்தத்தினுலும் ஜீவன் அணு அளவையுடையவன் என்று நன்று விளங்கும். உரோமத்தையுவ மானமாகச் சொல்லி ஜீவனே யதிநுணுக்கமாகக் கூறியிருக்கிறது. இதையெல்லாம் எண்ணி நோக்குங்கால் திண்ணமாக ஆன்மா அணு என்பதில் சிறிதளவும் ஐயமில்லே.

### அவதாரிகை

தனது சித்தாந்தத்தை யுறுதி செய்யும் பொருட்டு மேலும்.

## சூ· அவிரோதஸ் சந்தனவத் 23

அவிரோத:, சந்தனவத், என்று பிரிக்கவும்.

ப.உ. சந்தனவத் = சந்தனத்தைப் போன்று. அவிரோத =: முரணன்று.

வி.உ. எவ்வாறு சந்தனம் உடலில் ஒருபக்கத்தில் இருந்து கொண்டு உடல் முழுவதிலும் உயர்ந்த குளிர்ச்சியைத் தருகிறதோ அவ்வாறு இந்த ஆன்மாவும் உடலின் உள்ளத்தில் இருந்து கொண்டு உடல் முழுதையும் மிளிரும்படி செய்கின்றது. ஆகையால் தேகத்தின் ஏகதே சத்திலிருந்து கொண்டு எங்ஙனம் தேகமுழுதும் குளிர்ச்சியைத் தரமுடியுமென்றுக் கேட்பது சரியன்று.

### அவதாரிகை

சந்தனபிந்து தேகத்தின் நெற்றியிலிருந்து கொண்டு தேகமுழு வதையும் குளிர்விக்கிறதென்று சொன்னது பொருந்தாது. ஏனெனின், உபமான உபமேயங்களுக்கு மாறுபாடாக இருப்பதால் என்று கூறிய சித்தாந்தியை நோக்கி பூர்வபக்ஷிசமாதானம்—

## சூ· அவஸ்திதி வைசேஷ்யாதிதி சேந் ந அப்யுபகமாத் ஹ்ருதி ஹி 24

அவஸ்திதி, வைசேஷ்யாத், இதி, சேத், ந, அப்யுபகமாத் ஹிருதி ஹியென்று பிரிக்கவும்.

ப. உ. அவஸ்திதி வைசேஷ்யாத் = கண்கூடாக சந்தனபிந்து நெற்றியில் நிலைத்திருப்பதைப் பார்க்கிறோம். ஆனால் இவ்வாறு ஜீவனை யறிய இயலவில்லை. எனவே உவமானம் உவமேயத்திற்கு ஒற்றுமை பொருந்த வில்லை இதிசேத் = இவ்வாறு சித்தாந்தி இயம்பினால் அது முறையன்று. அப்யுபகமாத் = (ஜீவனுக்கு) அணுத்வம் ஒப்புக் கொள்ளப்பட்டிருக்கிறது. ஹிருதி = அல்பஇடமான உள்ளத்தில் என்பது குறிப்பு. ஹி = உறுதி.

வி. உ. பூர்வபக்ஷி – சந்தனத்தைப்போன்று உடலின் ஓரத்தில் ஆன்மா இருந்துகொண்டு உடல் முழுவதையும் விளக்குகின்றது என்று உரைத்தான். அதற்குப் பதில் சித்தாந்தி-நன்று சொன்னாய், என்றும் பொருந்தாத எடுத்துக்காட்டை நின்றுசொன்னது உன் பொன்று மறிவைப் புலப்படுத்துகின்றது. ஏனெனின்? சந்தனபிந்து வெளிப்படை. ஆன்மா வெளிப்படாதது. பிந்து – பொட்டு. ஆகையால் உவமானம் உவமேயம் ஒவ்வாதென்பது சித்தாந்தபக்ஷம். இதைபூர்வபக்ஷிக் கண்டிக்கிறான் –

பூர்வபக்ஷி – அப்யுபகமாத், எங்ஙனம் நெற்றியில் இருக்கின்றப் பொட்டு உடலெங்கும் குளிர்ச்சியைத் தருகிறதோ அதுபோல ''ஹிருதிஹிஏஷஆத்மா'' இந்தஆன்மா ஹிருதயத்திலிருக்கின்றது ''ஹிருத்யந்தர் ஜ்யோதி:'' உள்ளத்திலிருந்து ஒளிமயமாயிலங்கிக் கொண்டிருக்கிறது. இந்தவாக்கியங்களால் விமலவேதாந்தத்தில் அமல ஆன்மாவை யகமென்னும் அறையில் இருப்பதாக அருளியிருக்கிறது. ஆகலின் உபமான உபமேயத்தில் ஒற்றுமை யிருப்பதால். ஆன்மா உடலின் ஒருஓரமாக இருப்பதென்பது பொருத்தமேதான்.

அவதாரிகை

**மீண்டும் பூர்வபக்ஷி தனது மதத்தை நன்கு வலியுறுத்தல்.**

## சூ. குணாத்வா லோகவத் 25

குணாத்வா லோகவத் என்றுபிரிக்கவும்.

ப.உ. வா = வேறுவிதமாகவும். லோகவத் = உலகத்தில் உள்ள வியவகாரம் போல். குணாத் = குணம் விளங்குவது போல.

வி.உ. லோகவத் - உலகத்தில் இல்லம்முதலிய இடங்களில் நடுவில் தீபம் அல்பமாக இருந்தாலும் இல்லமுழுவதையும் விளக்கு வதுபோல் ஆத்மா உள்ளத்தின் ஒருபகுதியில் இருந்து கொண்டு உடல் முழுவதையும் விளக்குகின்றது.

ஆத்மாவில் இருக்கும் சைதன்யகுணம் வியாபகமாக இருப் பதால் தேகம்முழுதையும் விளக்குமென்பதில் ஐயம்இல்லை. உலகில் ஓரம் சாரத்திலிருக்கும் மணி, தீபம், உயர்ந்த ரத்னகற்கள். இவை களுடைய ஒளி (குணம்) வீடுமுழுதும் நிறைந்திருக்கிறது. அதுபோல ஆன்மாவும் ஏகதேசத்தில் இருந்துகொண்டு இடமுழுதையும் விளக்கு மென்பது தெளிவு. சந்தனம் அவயவத்தோடுக்கூடியது, ஆகையால் அதனுடைய சூக்கும அவயவங்கள் உடல்முழுதும் பரவும். ஆனல் அணுஜீவனுக்கு அவயவமன்று. அவ்வாறிருக்க எங்ஙனம் ஜீவன் உடல்முழுதையும் விளக்கமுடியு மென்பதற்குப் பதிலாக குணாத்வா என்னுஞ் சூத்திரமுரைக்ப் பட்டது.

அவதாரிகை

ஆனல் குணம் குணியைவிட்டு அன்னிய இடத்தில் எங்ஙனம் இருக்க முடியும்? ஏனெனின், ஆடையில் உள்ள வெண்ணிற முதலிய குணங்கள் ஆடையைவிட்டு அன்னிய இடத்தில் இருப்பதாகக் காண வில்லையென்ற ஐயத்தையகற்றும் பொருட்டு அடுத்த சூத்திரம் வருமாறு

## சூ. வ்யதிரேகோ கந்தவத் 26

ப.உ. கந்தவத் = மணத்தைப் போல வ்யதிரேக: = வேறுஇடத் திலிருக்கமுடியும்.

வி.உ. கந்தவத் — எவ்வாறு மணம் மலரின் குணமாக மகிழ்ந் திருந்தாலும் மலராகிய குணியைவிட்டு அன்னிய இடத்திலிருக் கிறதோ அவ்வாறு ஆன்மாவின் குணமாகிய சைதன்யமும் ஆன்மாவை விட்டு அடுத்தவிடத்தில் இருத்பதால் என்னைக்குற்றம், ஒன்றுமில்லை யென்பது உறுதி. ஜீவன் அணுவாக இருந்தாலும் அதன் குணம் — சைதன்யம் குணியாகிய தனது இருப்பை விட்டு வேறு இருக்கையில் இருக்கமுடியும். மணமும் மலரோடுதான் மற்றைய இடங்களில் காணப்படுகின்றன என்பாயாகில், அது பொருந்தாது. மலர்ஓரிடத்தில்

இருக்கிறது. ம ண ம் மற்ருேரிடத்தில் முகரப்படுகிறது. ஆகையால் பூவின் மணம்போல பொருந்திய சைதன்யகுணமும் வேறு இடங் களில் மிளிரமுடியும். — மிளிர்தல் — மிகுந்து விளங்குதல்.

அடுத்த சூத்திரம் வருமாறு

## ஸூ. தத்ர ச தர்ஸயதி 27

ப.உ. ச = மேலும். தர்ஸயதி = சுருதி கூறுகின்றது. ''ஆலோ மேப்ய: ஆநகாக்ரேப்ய:'' என்பது மறைமொழி. உலோமத்திலிருந்து நகம்வரை (ஆன்மா) நிறைந்திருக் கிறதென்பது மறையின் பொருள். ததா = ஆத்மாவின் ஞானத்தால் சரீரமுழுதும் நிறைந்திருக்கிறது.

## ஸூ. ப்ரதக் உபதேஸாத் 28

பிரதக், உபதேஸாத் என்று பிரிக்கவும்.

ப.உ. பிரதக் = கர்த்தா, கரணரூபமாக, உபதேசாத் = கூறி யிருப்பதால்.

வி.உ. ''பிரக்ஞயா சரீரம் சமாருஹ்ய'' இந்த சுருதியினுல் ஆத்மாவை கர்த்தா வாகவும், ஞானத்தைக் கரணமாகவும் மொழிந் திருப்பதால் ஜீவனுக்குச் சரீரத்தில் நிரம்பி யிருப்பது பொருத்தமே. ஞானமூலமாக இந்த ஜீவன் உடலுக்குள் புகுந்து வினையின்பயனை இன்ப துன்பத்தை நலமாக நுகருகிருனென்பது மறையின் பொருள். இம்மறையின் மொழியால் ஆன்மாவைக் கர்த்தாவாக வேறு பிரித்து ஞானத்தைக் கரணமாக வே று பிரிக்கப் பட்டிருக்கிறது. இதுதான் பிரதக்குபதேசம். பிரதக் தனித்தனி. உபதேசம் - சொல்லுதல். பிரக் ஞயா = ஞானம். இது மூ ன் ரு ம் வேற்றுமை யானபடியால் கரண மென்றும், ஆன்மா, முதல் வேற்றுமையான படியால் கர்த்தாவென்றும் கருதப்படுகின்றன. கர்த்திரு கரணஉபதேசத்தினுல் சைதன்ய குணம், எங்கும் நிறைந்திருக்கிறது. இதனுல் ஜீவன் அணுஎன்று நன்குதெரி கிறது. ''ததேஷாம் பிராணுனும் விக்ஞானேன விக்ஞானமாதாய'' பி.உ. (சுஷுப்தியில்) தத் = ஆன்மா. பிராணுனும் = பொறிபுலன்களே. விக்ஞானேன = சைதன்ய குண ஞானத்தால். ஆதாய = தனக்குள் அடக்கிவைக் கின்றது என்பது மறைமொழி.

இதனல் கர்த்தா ஜீவாத்மாவைவேருகவும், கரணமாகிய ஞானத்தை வேருகவும் பிரித்து சைதன்ய குணத்திஞல் ஆன்மா நிறைந்த தாகத்தெரிகிறது. எனவே ஆத்மா அணுவென்பதும் தெளிவு படுத்துகிறது சுருதி.

**அவதாரிகை**

இதுவரை அணுவாதி மதம் தெரிவிக்கப்பட்டது. இனிஅதை கண்டித்து சித்தாந்த பக்ஷம் தெரிவிக்கப் படுகிறது. சூத்திரம்—

## சூ தத்குணசாரத்வாத்து தத்வ்யபதேச: பிராக்ஞவத் 29

தத். குணசாரத்வாத், து, தத்வ்யபதேச; பிராக்ஞவத் என்று பிரிக்கவும்.

ப.உ.து என்னுஞ்சொல் அணுவாதத்தை யகற்றுகிறது. தத் குணசாரத்வாத் = புத்தியின்குணம். அணுத்வம் சாரம்முக்கியம். தத்வ்யபதேச: = அந்த புத்தியின் குணத்தை சொல்வது. பிராக்ஞவத் = பரமாத்மாவில் ஏற்றிக் கூறப்பட்டிருப்பதுபோல' பிராக்ஞன் —பரமாத்மா, நிறைந்த அறிவுடையவாஞயிருப்பதால்:

வி.உ. தத்குணம் = தத் – புத்தி. குணம்—அணு. அணுத்வம் புத்திக்கு, சாரம்—முக்கியம். அவ்வாறிருந்தும். புத்திக்கும் ஆன்மா விற்கும் நெடிது சம்பந்தத்திஞல் அதன் குணத்தை ஆன்மாவின்மேல் ஏற்றிக் கூறப்படுகிறது. குணம் - அணு, கதி, ஆகதி, போதல், வருதல், சுகம், துக்கம், கவலை, அவலநிலை முதலியவை. இவை யனைத்தும் புத்திக்குசாரம் – முக்கிய குணங்களாம். முகத்தை முகு ரத்தில் பார்ப்பதுபோல புத்தியின் குணத்தை ஆத்மாவில் பார்க்கிருன். முகுரம் — கண்ணுடி. ஆன்மாவில் அறியப் படுகின்ற குணங்கள் அனைத்தும் அதற்கு இயல்பு அன்று, பின்னை, யுபாதியாலென்றறிக. 'பிராக்ஞவத்' உபாசர்களுக்காக நிர்குணப் பிரஹ்மத்தில் சகுணங்களை யாரோபிக்கின்ருேம், அதுபோல புத்தியின் தருமங்களை ஆன்மாவில் பார்க்கிருேம்.

ஆன்மாவை யணு என்பது முறையன்று. அணு என்னுஞ் சுருதிகள் இன்மையால். மேலும் பிரஹ்மம் ஜீவரூப மாகச்சுருதிகளில் வழங்கப்படுகிறது. ஆன்மா ஏகதேசத்தி லிருந்தாலும் துவக்கிந்திரியம்

உடல் முழுதும் நிறைந்திருப்பதால் சகல வேதனைகளேயும் நுகர்கிற தென்பது பொருத்தமற்றதேயாம். ஏனெனின், காலில் முள்தைத்து விட்டால் அதனுல் எழுந்த வேதனை சரீரமுழுவதிலும் வியாபிக்கக் காணேம். ஆகையால் த்வக்கிந்திரியசம்பந்தத்தால் சகல வேதனையும் ஜீவனுடைய அநுபவத்திற்கு வருவதென்பது நியாயமில்லை. த்வக்கு-தொடு(மெய்) மிந்திரியம்.

மேலும் நீரிலுள்ள குளிர்ச்சியும், நெருப்பில் உள்ள சூடும், நீரிலும், நெருப்பிலும் வியாபித்திருக்கிறது ஆகையால் சூடும் ஒளியும் நெருப்பு வடிவம். அதுபோல் சைதன்யம் ஆன்ம வடிவமென்பதில் ஐய்மென்னை' யில்லையென்பதுக்குறிப்பு. ''சுடர்ஞானவடிவானவன் செய்ததொழிலே'' சசிவன்ன போதம். இதனுனும் ஆன்மா அறிவு சொருபமென்றறிக. ஞானவடிவம் – அறிவுசொரூபம். அளப்பிலா ஆன்மாவுக்கு சரீரப்பரிமாணமுமில்லை யென்பதை யிதற்குமுன்னே சொன்னேமே. மற்றையவாக்கியங்களாலும் ஆன்மா விபுஎன்று நன்கு தெரிகிறது.

பூ.ப. அவ்வாருனல் அணுத்வம் ஆன்மாவில் எவ்வாறுத் தோற்றுகிறது? சி. தத்குணசாரத்வாத்—புத்தியின் குணத்தின் பாவம். மேகமில்லாமல் வெண்சுடரின் வேகந்தெரியாது. அதுபோல் புத்தி யில்லையாளுல் ஆன்மாவில் அணுத்வந்தெரியாது. வெண்சுடர் – சந்திரன். செஞ்சுடர்க்கு எதிர்மறை. செஞ்சுடர் – சூரியன். ''ராகேச்சா சுகதுக்காதி புத்தெளசத்யாம் பிரவர்ததே'' ஆத்மபோதம். புத்தி யிருக்கிற போதுதான் மேற்கூறிய குணங்கள் ஆன்மாவில் தோன்று கின்றன என்பது ஆசாரியாளின் அமுதமொழி. புத்தி செல்லும் போது புத்தி நிஷ்ட ஆன்மா செல்வது போல் தோற்றுகிறது. [4]''தியாய தீவலேலாயதீவ'' பி.உ. என்பது சுருதி. அண்மையின் நின்றறியும் போது அழகிய புனல் வெண்ணிறமாகவும் அதிதூரத்தினின்று நோக்கும்போது கருநிறமாகவும் காணப்படுகிறது. அண்மை – சமீபம். தலைச்சுற்றுகிற பொழுது தரைசுற்றுவது போலத்தோன்றும். தண்ணீர் கரையில் நிற்கும்போது தலை கீழகாத்தெரியும். வாகனங் களில் செல்லும்போது வழியில் நிற்கும் மரங்களெல்லாம செல்வது போல் காணப்படும். இம்முறையாக புத்தியிலிருக்குங் குணங்கள் அதன் அண்மையிலிருக்கும் ஆன்மாவில் அறியப்படுகின்றன. ஈதனைத்தும் மயக்கமேயாம்.

மயிரின் இழையின் நூறுபாகத்தில் ஒரு பாகத்தைப்போல் ஜீவனென்று சொன்ன போதிலும் ''அனந்தாயகல்பதே'' என்னு மிஞ்சிய வாக்கியத்தால் அளவற்றதென்பதுத் தெளிவாகிறது. அந்தம்—எல்லே. அனந்தம்—எல்லேயற்றது. எல்லா உபநிஷத்திற்கும் ஜீவன் பிரஹ்மமென்பதில் தான் இஷ்டம், அணு, செய்யுந்தன்மை, அநுபவிக்குந்தன்மை, சம்சாரியென்னுந் தன்மை யிவையெல்லா வற்றையும் கண்ணேக்கரத்தால் புதைத்துக் கொண்டு குழியில் விழுவது போல் கருத்தை மறைத்துக்கொண்டு ஆன்மாவில் பார்க்கிருர்கள் அறிவிலிகள். இந்த ஆத்மா அணு என்ற சுருதிக்கும் பொருள் நீ கூறுவது போலன்று. பின்னே, ஆன்மா நுணுக்கமானதென்பது பொருள். நுணுக்கம்—நுண்ணியது. பொறி புலன்களுக்கெட்டா தென்பது கருத்து.

''நோக்கரிய நோக்கே நுணுக்கரிய துண்ணுணர்வே'' திரு வாசகம். பார்ப்பதற்கு அரியவனே, நுண்ணிய உணர்வு வடிவனே என்பது திருவாக்கின் பொருள். அணு என்பது ஜீவனேயும் மகா னென்பது பரமாத்மாவையுங் குறிக்குமென்றது உன்மதியின்மை. எங்ஙனமெனின், இரண்டையும் ஒன்றுக்கேயடையாக உணர்த்தியிருக் கிறது. அடை—விசேடம். உணர்த்துதல்—உரைத்தல். ''அணோ ரணீயான் மஹதோமஹீயான் ஆத்மா...'' க.உ. அணுவிற்கு அணு மகத்திற்கு மகத்தென்பது மறைமொழி. அணு-சிறியது. மகத் – பெரியது. இதனல் அணுவாதம் அகற்றப்பட்டு ஆன்மா மஹான் என்று மறை களால் நிறுவப்பட்டது. நிறுவுதல் நிலேநிறுத்துதல்.

### அவதாரிகை

ஆத்மாவும் புத்தியும் ஒன்றுப்பட்டத் தன்மையால் ஆத்மாவில் அணுத்வாதி தருமங்கள் காணப்படுகின்றன, உண்மையில்லே யென்று சித்தாந்திக் கூற, எதிரி-அவ்வாருனல், ஒருநாள் இரண்டிற்கும் சம் பந்தம் விலகுவது அவஸ்யமாகும். அதனுல் ஆத்மா அசத்வம்— இல்லே யென்னுந் தன்மை யுண்டாகுமே யென்பாயாகில் பரிகார சூத்திரம் வருமாறு— பரிகாரம்—விலக்குதல்.

## ஸூ-யாவதாத்ம பாவித்வாச்ச ந தோஷஸ்தத் தா்ஸனத் 30

யாவத், ஆத்ம பாவித்வாத், ச, ந, தோஷ:, தத், தர்சனுத் என்று பிரிக்கவும்.

ப.உ. யாவத் = எதுவரை. ஆத்ம பாவித்வாத் = ஆத்மாவிற்கும் புத்திக்கும் சம்பந்தம் இருக்கிறதோ (அதுவரை) நதோஷ: = குற்ற மில்லே. தத்தர்சனுத் = அவ்வாறு மறை மொழிகின்றது.

வி.உ. முன்னர் மொழிந்த சங்கைக்கு இங்கு இடம் இல்லே. எவ்வாறெனின், எதுவரை தத்வஞானத்தால் புத்திரூப உபாதி நீங்கவில்லேயோ அதுவரை ஜீவனென்னும் பேரும், சம்சாரித்வமும் நீங்குவதில்லே. உண்மையில் சிவனுக்கு வேருக ஜீவன் இருந்தால் பிரஹ்மத்திற்கு வேருகப் பார்ப்பவன், கேட்பவன், நினேப்பவன் முதலியவர்கள் இல்லே யென்ற மறைகள் பொய்யாகி விடும். இஃதல்லாமலும் அஹம் பிரஹ்மாஸ்மி, தத்வமஸி; அயம் ஆத்மா பிரஹ்ம, என்ற மறைகளால் எல்லாமொன்று என்று தெரிகிறது. பிராணனில் விக்ஞான மயனென்றும், புத்தியில் ஜ்யோதி சொரூப மென்றும் கூறியிருக்கிறது. புத்தியோடு சம்பந்தப்பட்டு இந்த ஆன்மா மூன்று உலகங்களிலும் உலாவிக் கொண்டு இருக்கிறது. ஆத்மா விற்கும் புத்திக்கும் சம்பந்தம் அறியாமையால் வந்தது, உண்மையில் அன்று. அறியாமை யறிவாலன்றி யகலாதென்று ஆன்ருேர்கள் அறைகின்ருர்கள். அறைவது — சொல்வது.

எதுவரை யகத்தில் அறியாமை யிருக்கிறதோ அதுவரை புத்தியோடு கூடிய தொடர்பு தொலேவதில்லே. நான் அறியாமைக்கு அப்பாற்பட்டவன், இந்த வியாபகமான கதிர்வடிவ எங்கும் நிறைந்த ஆத்மாவை அஹம்வேத = நானறிவேன் என்று மறை மொழிகின்றது. மேலும் அதையறிந்தவர்கள் மரணத்தை வெல்லுகின்ருர்கள் என்றும் மறை சாற்றுகிறது. இதனுலும் எதுவரை ஆத்ம, மன சம்யோக மிருக்கிறதோ அதுவரை அணுத்வாதி வியவகாரங் காணப்படும் அப்பாலோர் செயலுமில்லே யென்பது உறுதி.

## அவதாரிகை

ஆத்ம மன சம்யோகத்தால் ஆத்மாவில் எல்லா வியவகாரமும் காணப்படுகின்றன வென்றுக் கூறுமிடத்து அயன் துஞ்சும் பிரளயத் திலும் ஆருயிர் துஞ்சும் உறக்கத்திலும் புத்தியின்மையால் ஆத்ம மன சம்யோகம் எங்ஙனமுண்டாகு மென்னும் சங்கையை அகற்றும் பொருட்டு சூத்திரம் வருமாறு — அயன் - பிரஹ்மன். ஆருயிர் — ஜீவன். துஞ்சுதல் — உறக்கம் அல்லது பிரளயம்.

# சூ. பும்ஸ்த்வாதி[3] வத்த்வஸ்ய சதோஅபிவ்யக்தி[4] யோகாத்[3] 31

பும்ஸ்த்வாதிவத், து, அஸ்ய, சத:, அபிவ்யக்தியோகாத் என்று பிரிக்கவும்.

ப. உ. பும்ஸ்த்வாதிவத்=காளைப்பருவம் முதியுப்பருவங்களின் குறிகள் குழந்தைப் பருவத்தில் அடங்கியிருக்கிறது. காளைப்பருவத்தில் வெளிப்படுகின்றன. அதுபோல் அஸ்யசத:=இந்த ஆன்ம மன சம்யோகம் — (சம்யோகம்—சம்பந்தம் – தொடர்பு) உறக்கமென்னும் பிரளயத்தில் அடங்கியிருந்து நனவு கனவுகளில். அபிவ்யக்தியோகாத்=வெளிப்படுகின்றன. நனவு – ஜாக்ர அவஸ்தை. கனவு—சுவப்பனம். அபிவியக்தி—நன்ருக வெளிப்படுதல்.

வி. உ. உறக்கத்திலும், பிரளயத்திலும் ஆத்ம மன சம்பந்தமில்லை யென்று மறை அறைகின்றது. அறைதல் – நன்கு சொல்லுதல். ''சதாசோம்ய ததா சம்பன்னோ பவதி'' சோம்ய=அன்புள்ள மகனே! ததா = உறக்கத்தில். சதா = பிரஹ்மத்தோடு. சம்பன்னோ பவதி=தனது நிஜவடிவத்தோடு ஒன்ருகி விடுகிறதென்பது வேதப் பொருள். இதனுல் அவ்விரு இடத்திலும் ஆத்ம மன சம்பந்தமில்லை யென்பதுத் தெளிவாகிறதே யென்பாயாகில் அது பொருந்தாது, ஏனெனின், உலகில் உயிருக்கு நான்கு பருவங்கள் காணப்படுகின்றன. பாலபருவம், குமாரப்பருவம், காளைப்பருவம் முதியப்பருவம். இவ்வொவ்வொரு பருவத்திலும் அதற்குரியக் குறிகள் இருக்கின்றன. ஆனுலும் பிந்திய மூன்று பருவத்தில் உள்ள குறிகள் முந்திய முதற் பருவத்தில் தெரிகிறதில்லை. ஆகையால் அவைகள் இல்லையென்பது அர்த்தமில்லை. காலம் வருகின்ற பொழுது தானே வெளிப்படும். காலம் – பருவம்.

ஒரு ஆண்மகனுக்கு பாலபருவத்தில் மீசைத்தெரிகிறதில்லை. ஆனுல் இல்லையென்பது அர்த்தமில்லை. காளைப்பருவத்தில் தெரிகிறது. முன்னில்லாதது இடையில் தோன்ருது. அங்ஙனமரனுல் ஆணும் பெண்ணும் இல்லாத அலிக்குந் தோன்றவேண்டும் அவ்வாறுக் காணேம். ஆண் — ஆண்தன்மையுடையவன். பெண் — பெண்தன்மையுடையவள். தன்மை – தத்தம் குறிகள். அதுபோல லயம், அல்லது

உறக்கத்தில் தெரியாதிருந்தாலும் நனவு கனவுகளில் தெரியவருகிறது. சதிசம்பத்ய நவிது: சதிசம்பத்யாமஹ இதி'' சா.உ. சத்ரூபபிரஹ்மத்தை யடைந்திருந்தும் நான் அதையடைந்திருக்கிறேனென்று (அறிவிலிகள்) அறிவதில்லை என்ற மறைமொழியாலும் பீஜரூபமாக ஆத்ம மனசம்பந்தமிருக்கிறதென்பது இனிது புலனும்.

### அவதாரிகை

சித்தாந்தி தனது சித்தாந்தத்தை நிலை நிறுத்துவதற்காக அடுத்த சூத்திரத்தையருளுகின்றார்.

## சூ. நித்யோபலப்த்ய நுபலப்தி பிரசங்கோ அன்யதர நியமோ வா அன்யதா 32

நித்ய, உபலப்தி, அநுபலப்தி, பிரசங்க:, அன்யதரநியம:' வா, அன்யதா என்று பிரிக்கவும்.

ப.உ. நித்யோபலப்தி = எப்போதும் விஷய அநுபவமுண்டாகும் தன்மை. (மனமென்னும் ஒருகருவியை யொப்புக்கொள்ளாது போனல்) நித்ய அநுபலப்தி = என்னும் விஷய அநுபவமுண்டாக மாட்டாது. வா = அல்லது. பிரசங்கம் சம்பந்தம். அன்யதரநியம்: = வேறுமுறையைக்கையாள வேண்டிவரும். அன்யதா—முற்றிலும்.

வி. உ. (சுஷுப்தியில்) உறக்கத்தில் உணர்வுமய ஆன்மாவிற்கும் ஒள்ளிய மனத்திற்கும் சம்பந்தமுண்டென்பது வேதாந்தவாதம். துயிலில் மனதையொப்புக் கொள்ளாது போனல் விஷய அனுபவம் எங்ஙனமுண்டாகும்? சாதனரூப ஆன்மாவும் பொறிகளுமிருப்பதால் விஷய அனுபவமுண்டாகக் கூடுமென்பாயாகில், சித்தாந்தி – அது பொருந்தாது. துயில் – உறக்கம். ஏனெனின்? 'நித்யோபலப்தி, உபலப்தி – அனுபவம். உபலப்திஸ்து அநுபவ:' என்பது அமரம். சாதனவடிவ ஆன்மாவும் இந்திரியமும் விஷயமும் கூடில் எப்போதும் அனுபவமுண்டாகும். மேற்கூறிய ஆன்மாவும் இந்திரியமும் இருந்தும் எப்போது மில்லாமல்போகும். இந்நிலையில் மனதையொப்புக் கொண்டுதான் ஆகவேண்டும்.

ஆத்மாவிற்கு உபாதி அந்தக்கரணம். அது வேறு வேறு தொழில்களால் வேறு வேறு நாமங்களைப் பெறுகின்றன. நினைப்பதால் மனமென்றும், நிச்சயிப்பதால் புத்தியென்றும், சிந்திப்பதால் சித்தமென்றும், அபிமானத்தால் அகங்காரமென்றும் வழங்கப்படுகிறது. இங்ஙனம் விளங்கும். இவ்வந்தக் கரணத்தை யவஸ்யம் ஒப்புக் கொள்ளவேண்டும். ஆற்றிலிருந்துவரும் நீரை, அணை வேண்டுமென்னும்போது அளவோடு விடுத்து தேவையில்லாதபோது நிறுத்தி வைத்துக் கொள்ளுகிறது. அதுபோல ஆத்ம மனசம்யோகத்தால் விஷயசுகம் முறையாக நுகரப்படுகிறது. எப்போதும் சாதனமான ஆன்மாவும் இந்திரியமும் இருந்தும் இன்ப அனுபவம் இல்லையெனின்? ஆன்மாவின் வலிமை அல்லது பொறியின் வலிமைக் குன்றியிருக்க வேண்டும். அது பொருந்தாது. ஏனெனின்? ஆன்மா நித்யசைதன்ய வடிவினன், அதனால் அதன் வலிமைக் குன்றுவதற்குக் காரணமில்லை. இந்திரிய வலிமைகுன்றாது. ஏனெனின்? முன்னும் பின்னும் முறையாக வலிமை நிகழ்ந்துகொண்டிருக்கும் போது திடீரெனக் குறைவதற்கு நிமித்தமில்லை வலிமை – சக்தி. நிமித்தம் – காரணம். ஆகலின் எதனுடையக் கவனத்தால் உபலப்தி யனுபலப்தி ஒழுங்காக நிகழ்கின்றனவோ அது மனமென்று உணர். இதனால் உறக்கத்திலும் பிரளயத்திலும் அந்தக்கரண மிருக்குமென்பது இனிது புலனும். ''அன்யத்ரமனாபூவம் நாதர்சம், அன்யத்ரமனாபூவம் நாஸ்ரௌஷம்'' பிரு. உ. மனம் வெளியே சென்று விட்டது அதனால் பார்க்கமுடியவில்லை. மனம் வெளியேறிவிட்டது. அதனால் கேட்கமுடியவில்லையென்பது சுருதிப்பொருள். மனமிருக்கு என்பதற்கு இதுவே பிரமாணமாம் ஈதன்றியும் காமாதயோ அஸ்ய மனசோவிருத்தய:'' என்பது ச. பா. காமாதய: = காமம், குரோதம், மயக்கம், முதலிய தருமங்கள் அந்தக்கரணத்தின் பரிணாமங்களாம். இதனாலும் உள்ளமென்னும் ஒரு பொருள் உளது என்பதுத் தெளிவு.

4

## கர்த்திரு அதிகரணம்.

### அவதாரிகை

தத்குண சாரத்வம் என்னும் விசாரத்தால் ஜீவனைப்பற்றி வரும் ஏனைய தருமங்களும் விசாரிக்கப்படுகிறது. சூத்திரம் வருமாறு.

## சூ. கர்தா சாஸ்த்ரார்த்த வத்வாத் 33

ப.உ. கர்தா=ஆத்மாதான் கர்த்தா. ஏனெனின்? சாஸ்த்ரார்த்த வத்வாத்=அப்பொழுதுதான் சாஸ்த்ரம்—மறைகள் பயனுள்ளதாகும். புத்தி கர்த்தாவாக இயலாது. நூல்கள் ஜீவனுக்குத்தான் விதிவிலக்கை விதிக்கின்றன. புத்திக்கன்று.

வி.உ. தத்குண சாரத்வ மென்னும் பிரகரணத்திலிருந்து ஜீவனுக்கு இன்னும் என்னென்ன தருமங்களுண்டோ அதையெல்லாம் மறைகள் விரிவாக விளம்புகின்றன. ஜீவன்தான் கர்த்தாவாக முடியும், ஏதனுலோ வெனின், அப்பொழுதுதான் விதிவிலக்கைக் கூறும் நூல்கள் பயனுள்ளதாக ஆகும். விதிவாக்கியங்கள்—(யஜேத) யாகம் செய்யவும், ''ஜுஹுயாத்'' வேள்வி புரியவும். ''தத்யாத்'' தானம் பண்ணவும். இந்தமாதிரி விதி நூல்கள் விரிவாக விளம்புகின்றன. இதனுல் இந்நூல்கள் (அர்த்தவான்) பிரயோஜனமாக ஆகின்றன. அவ்வாறில்லையானுல் பயனற்றுப்போகும். கர்த்தா என்கின்ற ஒருவன் இருந்தால்தான் (கர்தவ்ய) கடமையைக் கூற முடியும்.

நீயிந்த வினையைச் செய்தால் மேல் நிலையை அடைவாய், இதைச் செய்யாதொழியின் மேல் நிலையை அடையமாட்டாய். புண்ணியத்தைச் செய்பவன் சுவர்க்கத்தையும் பாவத்தைச் செய்பவன் துன்பத்தையும் அடைவான் என்ற சாஸ்த்ர வாக்கியங்கள் கர்த்தா ஒருவனையொப்புக் கொண்டுதான் உரைக்கின்றது. ஜீவன் கர்த்தா வென்பதுத் தெளிவாகின்றது. இவனையேற்றுக் கொண்டுதான் போக்கும் வரவும் புராணங்களில் புகலப்பட்டிருக்கின்றன. ஆகையால் கர்த்தா ஜீவன் என்பதில் ஐயமில்லை.

அவதாரிகை

இந்த சூத்திரத்தினுலும் ஜீவன் கர்த்தாவென்பது இனிது புலனுகின்றது—சூத்திரம் வருமாறு—

## ஸூ. விஹாரோபதேஸாத் 34

ப.உ. கர்த்தா ஜீவன் எவ்வாறெனின், ஜீவனை (விஹாரி) யென்று கூறப்பட்டிருக்கிறது. விஹாரி—விளையாடுபவன்.

வி.உ. ஜீவனைப் பற்றிப் பேசுமிடத்து சந்தி—சுவப்பன ஸ்தானத்தில் உலாவுவதாகக் கூறியிருக்கிறது. ''சஈயதே அம்ருதோ

யத்ரகாமம்'' பிரு.உ. ச = ஜீவன். காமம் = விரும்பியவாறு. யத்ர = சுவப்பனத்தில். ஈயதே — திரிகிருன் என்பது மறைமொழி. அம்ருத என்னும் பதம் ஜீவனுக்கு அழிவில்லையென்பதைக்குறிக்கிறது. மேலும் ''ஸ்வே சரீரே யதாகாமம் பரிவர்ததே'' பிரு. உ. ஜீவனை வரு வித்துக்கொள்ளவும். (ஜீவன்) யதாகாமம் = விருப்பப்படி. ஸ்வேசரீரே = தனது சரீரத்தில் பரிவர்ததே உலாவிக்கொண்டிருக்கிருன் என்பது வேதப்பொருள். இவ்வாறு சுவப்பனு அவஸ்த்தையில் தனது மனம் போலத் திரிகிருனென்றதால் அவன் கர்த்தா என்பதில் எட்டுணையும் ஐயமின்று. அவன் என்பது ஜீவனை.

## சூ. உபாதாஞத் 35

ப.உ. உபாதாஞத் = இதனுலும் ஜீவன் கர்த்தா. உபதானம் — உறக்கத்தில் கருவிகளைத் தனக்குள் அடக்கிக்கொள்ளுதல். சுழுத்தியில் மனமுதலிய நிஜகருவிகள் அனைத்தையும் ஆமை தனக்குள் தனது உறுப்புக்களையடக்கிக் கொள்வதுபோல் அடக்கிக் கொள்கிருன். ''சுஷுப்திகாலே சகலே விலீனே'' கை உ. சுஷுப்திகாலே = தூங்கும் போது. சகலே = எல்லா உறுப்புக்களும் விலீனே = ஒடுங்குகின்றன. ஜீவன் தனக்குள் அடக்கிக்கொள்கிருனென்பது கருத்து. ''ஜீவ: பிராணதாரண:' என்பது சுருதி. எவன்பிராணனை தாரண செய் கின்ருனே அவன் ஜவனெனப்படுவானென்பது மேலே சொன்ன மறைக்குப்பொருள். உடலையும் உடலில் உள்ள உறுப்புக்களையுந் தாங்குவதால் ஜீவனைக் கர்த்தாவென்பதுத் தெளிவாகின்றது. 'இதனுல் கரணங்களை அதாவது மனம் புத்தி, சித்தங்களை ஜீவன் உபாதானம் — தாரணம் செய்வதால் உபதானம் என்னும் சூத்திரத்தையுரைத்தார் பாதராயணர். பாதராயணர் — வியாசர். எனவே ஜீவன் கர்த்தாவென்று நன்கு தெரிகிறது.

அவதாரிகை

இந்த சூத்திரத்தின் மூலமாகவும் கர்த்தா ஜீவனென்று நன்கு விளங்குகிறது. சூத்திரம் வருமாறு:-

## சூ. வ்யபதேஸாச்ச கிரியாயாம் ந சேன் நிர்தேஸ விபர்யய: 36

வ்யபதேஸாத் ச கிரியாயாம், ந, சேத், நிர்தேஸ, விபர்யய: என்று பிரிக்கவும்.

ப. உ. ச = மேலும் வியபதேஸாத் = கூறியிருப்பதால். கிரியா யாம் = லௌகிக வைதிக கர்மங்களில் ஜீவனைக் கர்த்தாவாக மொழிந் திருப்பதால் ந சேத் = விக்ஞானசப்தம் ஜீவனைக் குறிக்காமல் போனால் நிர்தேச விபர்யய: = வேற்றுமை மாறுபட்டதாகும்.

வி. உ. இம்முறையாகவும் ஜீவன் கர்த்தாவாம். எதனாலோ வெனின், ''விக்ஞானம் யக்ஞம் தனுதே கர்மாணி தனுதேபிச'' விக்ஞானம் விக்ஞானமயன் ஜீவன், யக்ஞம் = ஹவனங்களை, தனுதே = செய்கிறான். கர்மாணி = நல்வினைகளையும், தனுதே = (தாராளமாக) செய்கிறான் என்பது மறைமொழி. இவ்விக்ஞானமென்னும் சொல் நல்வினைகளில் ஜீவனை கர்த்தாவாக உபதேசிக்கின்றது. விக்ஞான சப்தம் புத்தியைக் குறிக்கின்றதே யென்பாயாகில் அது முறையன்று. விக்ஞானப்பதத்தால் புத்தியைக் கொள்ளின் வேற்றுமைமாறும். ஒன்றுவது வேற்றுமையில் விக்ஞானனே வென்று கொள்ளவேண்டி யிருக்கும். அதனால் நிர்தேச விபர்யயமென்றார். இது முற்றிலும் முரணாகும். ஆகலின் இவண் விக்ஞானசப்தம் ஜீவனைக்குறிக்குமே அல்லாது புத்தியைக் குறிப்பதன்று.

அங்ஙனமாயின் ''ததேஷாம் பிராணானாம் விக்ஞானேன விக்ஞானமாதாய'' என்னும் சுருதியில் விக்ஞானேன என்று மூன்றாவது வேற்றுமையில் விக்ஞானத்தைக் கொண்டிருக்கிறதே, இந்தச் சுருதிக்கு முரணுண்டாகுமே என்பாயாகில், அது பொருந்தாது. தத் = ஆன்மா ஏஷாம்பிராணானாம் = இந்திரியங்களை விக்ஞானேன ஆதாய புத்தியால் தனக்குள் அடக்கிக்கொண்டு உறங்குகின்றது என்பது மறைமுடியின் பொருள். இங்கு விக்ஞானேன என்னுஞ் சொல் மூன்றாம் வேற்றுமை யில் வந்தால் புத்தியைக் குறிப்பது முறைதான், ஆனால் விக்ஞானம் யக்ஞம் என்னுமிடத்தில் இரண்டும் ஒரு வேற்றுமையில் வந்திருப்ப தால் மூன்றாம் வேற்றுமையைக் கொள்வது முறையன்று. எனவே ஜீவன் கர்த்தா, புத்தியல்ல என்பது தெளிவு.

ஜீவன் கர்த்தாவென்பதை மீண்டும் நிலை நிறுத்தும் பொருட்டு அடுத்த சூத்திரத்தைத்துவக்குகின்றார்.

## சூ. உபலப்தி வத்அநியம: 37

உபலப்தி, வத், அநியம: என்று பிரிக்கவும்.

ப.உ. உபலப்திவத் = அநுபவத்தைப்போல. அநியம: = நியமமில்லை.

வி.உ. இலக்கணமுறையாக நோக்கும்போது வினைகள் செய்வதில் ஜீவன் சுவதந்த்ரன். ''ஸ்வதந்த்ரகர்த்தா'' என்பது பாணினீய சூத்ரம். கர்த்தா இச்சானுசாரம் வினைகளைச் செய்பவன் என்பது பொருள். ஆனாலும் தன்மனம் போல நல்லதையும் கெட்டதையும் செய்ய இயலவில்லை. அதுபோல உபலப்தி இன்பதுன்பம். இதுவும் அநியம: = இன்பத்தையோ அல்லது துன்பத்தையோ எண்ணம்போல நுகரமுடியவில்லை. அங்ஙனம் இருப்ப, கர்த்தா சுவதந்திரன் எங்ஙனமாக முடியுமென்பது எதிரியின் வழக்கு. எதிரி பூர்வபக்ஷி.

இன்பமும் துனபமும் பிராரப்த வினையின் வயம். வயம் அதீனம். அதுபோல நல்வினை செய்வதிலும் பராதீனன், பழவினையின் வயப்பட்டிருக்கிறுனென்பது கருத்து. ''அநிச்சன்னபிவார்ஷ்ணேய பலாதிவ நியோஜித:'' ப.கீதை. வார்ஷ்ணேய! விருஷ்ணிகுலத்திலகமே! அநிச்சன்னபி = இவ்வினையைச் செய்யக்கூடாதென்று எண்ணியிருந்தாலும் பலாதபிநியோஜித: பலவந்தமாக பழவினைத்தள்ளுகின்றது. நியோஜயதி - ஒரு குற்றவாளியைச் சிறையின் காவலர்கள் எவ்வாறு பலவந்தமாகச் சிறையில் தள்ளுகின்றனரோ அதுபோல் தாம் விரும்பிய வினைகளை விருப்பம்போல் செய்து விரும்பிய போகங்களை விருப்பம் போல நுகர்வொட்டாமல் முறையே பழவினையும், ஆரப்தவினையும் ஜீவனைத்தடுக்கின்றதென்பது குறிப்பு. பழவினை சஞ்சிதகர்மம். ஆரப்தவினை — ஊழ்வினை. இவ்விருவினைப்பாசக்கயிற்றில் கட்டுப்படாது போனால் எண்ணியவாறு திண்ணிய வினைகளைச் செய்து இன்பத்தையே நுகரமுடியும், துன்பமனுபவிக்க வேண்டுவதில்லை. அவ்வாறுலகில் காணோம்.

அவதாரிகை

வேறு சூத்திரம் வருமாறு —

## சூ. சக்திவிபர்யயாத் 38

ப. உ. புத்தியைக் கர்த்தாவாக வொப்புக் கொள்ளும் நிலையில் கரணசக்தி நிலைகுலையும்.

வி. உ. இதுமூலமாகவும் கர்த்தா ஜீவனுகமுடியும். இதற்கு மாருக புத்தியைக் கர்த்தா வென்னுமிடத்து சக்திவிபர்யயமாகும். விபர்யயம்—விநாசம், புத்தியிலுள்ள கரணவலிமை நீங்கி கர்த்திரு வலிமைவந்து பொருந்தும். வலிமை, சக்தி, சாமர்த்தியம், சாதுர்யம், ஆற்றல், ஆண்மை, வண்மையென்பனவெல்லாம் ஒரு பொருளைத் தரும். இது எலியைவிரட்ட புலிவந்தமாதிரியாகும். அஃதல்லாமலும் ஆன்மாவையகமென்பதற்குப் பதில் புத்தியை நானென்று நவில வேண்டிவரும். நவிலுதல்—சொல்லுதல். ஆன்மாவை நானென்பது சேதனத்தை நமது சொரூப மென்பதாகும், புத்தியை நானென்பது ஜடத்தை நமது வடிவமென்பதோடு ஒக்கும். இதுதான் விபர்யயம்.

இஃதன்றியும் வினைகள் முழுதும் அகங்காரத்தின் மூலமாக எழுகின்றன. நான் போகிறேன், நான்வருகிறேன், நான்உண்கிறேன் நான் பருகுகிறேன் என்று வினைகள் உண்டாகின்றன. நான்என்பது அகங்காரம். ஜீவனிடத்தில் உள்ள கர்த்திருத்வம் அவனுக்கு உண்மையல்ல. பின்னை, பழமையான அவித்தை, அதன் காரியரூப சம்ஸ்கார முதலிய உபாதியால் வந்தவை. அவன்என்பது ஜீவனை. உடல், உள்ளம், மனம், புத்தியிவைகளுடைய வலிமைகளும் சில காலம் ஜீவனுக்கு அனுகூலமாகவும் பலகாலம் பிரதி கூலமாகவு மிருக்கும். இந்நிலையில் சக்தி விபர்யயம் — மாறுபடும் பொழுது ஜீவாத்மா தனது எண்ணப்படி யெங்ஙனம் செயல் படமுடியும். முடியா தென்பது முடிபு. ஆகலின் வினையிலும் வினையின் விளைவிலும் ஜீவனுக்கு சுவாதந்த்ரியம் இல்லையென்பது இனிது புலனும்.

### அவதாரிகை

ஜீவனுக்குக் கருத்திருத்வம் இயல்பாக உள்ளதென்று சொன்னுல் என்ன என்பதற்குப் பதில் சூத்திரம் வருமாறு—

## ஸூ. சமாத்⁴யபா⁴வாச்ச 39

சமாதி, அபாவாத், ச, என்று பிரிக்கவும்.

ப. உ. ஆன்மாவைக் கர்த்தா வென்றுக் கொள்ளாது போனுல் வேதாந்தத்தில் கூறிய சாதனங்கள் பழுதாய்ப்போகும். அதனுல் பிரஹ்ம தர்சனம் உண்டாக மாட்டாது. ஆகையால் ஆன்மாகர்த்தா என்பது உறுதி.

வி.ச. வேதாந்தத்தில் மைத்ரேயீ யாக்ஞவல்க்ய சம்வாதத்தில் ''ஆத்மாவா அரேதிருஷ்டவ்ய : ஸ்ரோதவ்ய: மந்தவ்ய :'' என்றும், ''சோஅன்வேஷ்டவ்ய: சோவிஜிக்ஞாசிதவ்ய:'' என்றும் ஓமித்யேவம் த்யாயத ஆத்மானம் என்றும், பிரு.உ. உபநிஷத்துக்களில் மொழியப் பட்டிருக்கிறது. அரே = பிரியமைத்ரேயீ! ஆத்மா திருஷ்டவ்ய: = ஆன் மதரிசனம் செய்யவேண்டும். ஸ்ரோதவ்ய: = (அதன் நிமித்தம்) சிர வணஞ் செய்ய வேண்டும். மனனம்பண்ண வேண்டும். நிதித்யா சனமும் செய்ய வேண்டும். சோ அன்வேஷ்டவ்ய: = சோ — ஆன்மா. (அதையடைய) நாடவேண்டும். சோ விஜிக்ஞாசிதவ்ய: = ஆன்மாவை யறியவேண்டும். ஓமித்யேவம் = ஓம் என்றே ஆத்மானம் = ஆன் மாவை. த்யாயத = நினைக்க வேண்டும். இவ்வாறு முறையே பொருள்கொள்ள வேண்டும். தியானம் — நிரந்தரம் நினைத்தல். இவ்வாறு ஆத்மாவை யடைவதற்குரிய சமாதி சாதனங்கள் விமல வேதமுடிவில் விளம்பி யிருக்கின்றன. சமாதி — நிதித்யாசனம். விளம்புதல் — விரிவாகக் கூறுதல். இவ்வாக்கியங்கள் எல்லாம் ஜீவனை கர்த்தாவென்று எண்ணினுல்தான் பொருந்தும், இல்லையானுல் பொருந்தாது. இதனுலும் ஆன்மா கர்த்தா என்பது இனிது புலனும்.

## தக்ஷாதிகரணம்.

### அவதாரிகை

இதுவரை ஜீவனைக் கர்த்தாவென்று நிருபிக்கப் பெற்றது. அந்த கர்த்திருத்வம் — நானென்னும் தன்மை இவண் ஜீவனுக்கு உண்மையா அல்லது உபாதியால் வந்தவையா என்று விசாரிக்கப் படுகிறது. இவண் — இங்கு.

## சூ. யதா ச தக்ஷோபயதா 40

யதா, ச, தக்ஷ:, உபயதாவென்று பிரிக்கவும்.

ப. உ. ச. = மேலும், யதா = எவ்வாறு (உலகத்தில்) தக்ஷ: = தக்ஷன். உபயதா = கருவிகளோடு கலந்திருக்கும்போது கர்த்தா வாகவும், கலவாத போது அகர்த்தாவாகவும், கருதப்படுகிருனே அதுபோல ஆன்மாவும் புத்தியாதி கருவிகளோடு கலந்திருக்கும் பொழுது கர்த்தாவாகவும் கலவாதபோது அகர்த்தாவாகவும் காணப் படுகிருன்.

வி.உ. கர்த்தா - நானென்னும் தன்மையுடையவன். அகர்த்தா — அது இன்றியவன். மேலே சொன்ன அதிகாரத்தின் மூலமாக நான் எனுந் தன்மை ஜீவனுக்கு இயல்பானதென்பது தெரியவருகிறது. ஏனெனின்? அதையகற்றுமுபாயந் தெரியக் காணேம். அதை - நானெனும் தன்மையை, இவ்வாறு எதிரியின் வழக்கு. அதற்குப் பதில் – ஆன்மாவில் இயல்பாக நானெனுந் தன்மை பொருந்தாது. ஏனெனின்? அவ்வாறு ஒப்புக் கொண்டால் ஆன்மாவுக்கு முக்தி யுண்டாகாது. நெருப்பில் இயல்பாக சூடும் நீரில் இயல்பாக நெகிழ்ச்சி யுமிருக்கிறது. ஆகையால் அவைகளுக்கு ஒருபோதும் விடுதலை யில்லை. அவைகள் — கொதிப்பும், குளிர்ச்சியும். அதுபோல நான் என்னுந் தன்மை ஆத்மாவிற்கு இயல்பாக இருப்பின் மோக்ஷ முண்டாகாது. அதனால் புருஷார்த்தம் சித்திக்காது. நானெனும் தன்மை துன்பவடிவம்; முக்தி யின்பவடிவம். இரவும் பகலும் போல.

மழைக்காலத்தில் ஏழைப்புற்றீசல் எழுவது போல் ஆன்மாவின் உணர்வின்மையால் அதில் எல்லாம் உண்டாகின்றன. அதில் என்றது ஆன்மாவை. தேகமும் பொறிகளும் மனமுங் கூடினபோது ஜீவன் போக்தா — இன்ப துன்பங்களை நுகருகிறான் என்று கடவல்லியில் நமன் நசிகேதாவிற்கு நவில்கின்றார். நடுக்கடலில் நின்று நான்குப் பக்க மும் நோக்கும்போது நீரையன்றி ஒன்றுங் காணேம். அதுபோல எல்லாம் பிரஹ்ம மயமாக அறியும்போது பேதமையால் எழும் நான் என்னும் தன்மை, அவித்தை, ஆணவம் நீ நானெனும் பேதப் பேய்கள் எங்கே தோன்றும்? தோன்றாதென்பதுக் குறிப்பு.

எங்கு இரண்டு உண்டோ அங்கு எல்லாமுண்டு. எங்கு ஒன்றைத் தவிர இரண்டில்லையோ அங்கு ஒரு உபாதியும் இன்மையால் ஞான மொன்றேயுளது. ''சர்வம் சம்வின்மயம் ஸ்திதம்'' வாசிஷ்டம். எல்லாம் ஞானமயமென்பது பொருள். அங்ஙனமாயின் ''கர்த்தா விக்ஞானாத்மா புருஷ:'' எனும் உபநிஷத் வாக்கியத்தின் கதி யென்னை யென்பாயாகில் நன்று சொன்னாய் நின்று. நும்மதியும் மதிக்கத் தக்கது. இதுவும் ''அவித்யாகிருத அநுவாத மாத்ரம்'' என்பது சங்கரபாஷ்யம். ஆன்மாவை அறியாத தோஷத்தாலுண்டான அநு வாதம் — மறுமொழியாகும். உண்மையில் கர்த்திருத்வம் கானல்நீர் போல் ஆரோபிதமாகும். ஆரோபிதம் இல்லாததையேற்றிக் கூறுவது. இதனால் ஜீவனிடத்து கர்த்திருத்வம் வியவகாரத்தில் அஞ்ஞானத்தால் காணப்படுகிறது. உண்மையில் இல்லையென்பது உறுதி.

## பராயத்தாதிகரணம்.

### அவதாரிகை

அஞ்ஞானகாலத்தில் உபாதியினுல் ஜீவனுக்கு வந்த கர்த்திருத்வம் இறைவனுல் வருகிறதா அல்லது தானுக வருகிறதா என்பது ஐயம். அதையகற்றும் பொருட்டு சூத்திரம் —

# ஸூ. பராத்து தச்சுருதே:41

பராத்து, தச், சுருதே : என்று பிரிக்கவும்.

ப. உ. து' என்னும் சொல் ஐயத்தை யகற்றும் பொருட்டு. ஜீவனுக்கு நானென்னுந் தன்மை இயல்பாக அன்று. பின்னே, பராத் = பரமனுல் பரமன் — பரமேஸ்வரன். தத் = அதைப்பற்றி. சுருதே: = மறைமுடிவில் மலர்ந்தவாசகம் பிரமாணம்.

வி. உ. ஜீவனுக்கு நானென்னுந் தன்மை இயல்பாக வருகிறது இறைவனுல் வரவில்லையென்பது எதிரியின் கருத்து. அவன் தருக்கமாவது இறைவனை விரும்புவதால் ஜீவனுக்கு என்னபயன்? ஒன்றுமில்லை. இவன் இயல்பாகவே காம வெகுளி முதலிய குணங்களோடு கூடியவனுய் இருக்கிருன், நானெனும் தன்மையும் அதன் சாதனங்களும் உள்ளன, அவ்வாறிருக்க இறைவன் என்ன செய்ய முடியும் என்பது எதிரியின் தருக்கம். மேலும் அவன் கூறுவதாவது— உழவு முதலிய தொழில்களில் கலப்பை காளை முதலிய சாதனங்கள் தேவை. இறைவன் அதற்குத் தேவையில்லை. அது போல ஜீவனுக்கும் இறைவன் தேவையில்லையென்பது அவனது மதம்.

சி. பக்ஷம் - உழவுத்தொழில்களில் எவ்வளவு மாடு கலப்பைக்கு அவஸ்யமோ அவ்வளவு ஜீவனுக்கும் இறைவன் அவஸ்யம். அங்ஙனமாயின் ஜீவனுக்கு வரும் குற்றம் இறைவனுக்கும் வருமென்பாயாகில் அது பொருந்தாது. ஏனெனின், உயிர்களின் வினையின் பயனுக வரும்தோஷம் இறைவனையெவ்வாறுப் பற்றும், பற்ருதென்பது கருத்து எதிரி — ஜீவன்தானுக கர்மங்களைச் செய்யாது இறைவனை விரும்பி செய்வானுனல் செய்த வினையின் பயனின்மையும் செய்யாத வினையின் பயன் வருதலுமென்னும் குற்றம் வருமென்பாயாகில்.

சி. வாராது. 'பராத்' அக்ஞான நிலையில் காரிய காரணக் கூட்டத்தோடு கூட இருக்கும் போது கர்த்திருத்வம்: செய்யுந்தன்மை போக்த்திருத்வம்—நுகருந்தன்மை சம்சார சித்தி முதலிய எல்லா குணங்களும் பொருந்தும், ஆனாலும் இறையருளால் அல்லாமல் எதுவும் நடவாது. ஆகையால் ''அவனருளாலே யவன்றாள் வணங்கி என்ற மணிவாசகத்தையும் உன்னிப்பார்க்கவும். எவனையிறைவன் தன்வயமாக்கவிரும்புகிறானோ அவனை நல்ல வினைகளைச் செய்யச் சொல்லி யம வேதனையிலிருந்து கரையேற்றுகிறான் என்றும், எவனை நரகமுதலிய துன்பத்துள் தள்ளவேண்டுமோ அவனைத் தீயகருமங்களைச் செய்யும்படி செய்து நரக முதலிய துன்பத்துள் தள்ளுகின்றான் என்றும் மறைகள் முழங்குகின்றன என்ற சுருதிகளால் ஜீவன் தனது காரியத்தை முடிக்க இறையை விரும்புகின்றானென்பது தெளிவு.

அவதாரிகை

இறைவன் ஜீவனுக்கு ஏவுதல் கர்த்தாவாக இருந்தால் உலகில் காணப்படும் ஏற்றந்தாழ்வு இறைவனைவந்து பொருந்துமேயெனின், சூத்திரம் வருமாறு—

## சூ. கிருதபிரயத்னபேக்ஷஸ்து விஹித பிரதிஷித்த அவையர்த்யாதிப்ய: 42

கிருத பிரயத்னபேக்ஷ:, து, விஹித பிரதிஷித்த அவையர்த்ய ஆதிப்ய: என்று பிரிக்கவும்.

ப.உ. துஎன்னுஞ் சொல் எதிரியின் எதிர்ப்பையிடித்து தகர்ப் பதற்காக. ஜீவனால் செய்யப்பட்ட பாவபுண்ணியரூப முயற்சி—யிறைவனால் ஏவப்படுகிறது. விஹித பிரதிஷித்த அவையர்த் யாதிப்ய:= வேதத்தில் விதித்த விதி நிஷேத வினைகள் வீணாகப் போகாமல் இருக்க கிருதப்ரயத்ன அபேக்ஷ: = (இறைவன்) தான் ஏவும் தொழிலில் உயிர்கள் செய்யும் நல்வினை தீவினைகளை விரும்பு கின்றான்.

வி.உ. இவ்வாறு இறைவன் ஏவுதல் செய்யும் பொழுது அவனுக்கும் குற்றம்வருமேயென்பது எதிரியின் வழக்கு.அதுபொருந்தா தென்பது சித்தாந்தபக்ஷம், அது எங்ஙனமெனின். ஜீவர்கள் செய்யும் வினைகளுக்கு இறைவன் காரணமாக இருந்தாலும் அதன் விளைவாகிய

இன்பதுன்பங்களுக்குப் பொது காரணமாக இருக்கிறன். பொது—சாமான்யம். மேகம்போல. மழையெவ்வாறு பயிர்க்குப்பொதுவான காரணமோ அதுபோல இறைவனும் உயிர்கள் நுகரும் இன்பதுன்பங்களுக்குப் பொதுவான காரணமாயிருக்கிறன்.

நிலத்தில் விதை. விதைக்கிறேம் அது சிலகாலங்கழித்துப் பயனைத்தருகிறது. அப்பயனுக்கும் இரண்டு காரணங்கள். ஒன்று முக்கியக் காரணம். மற்றென்று சாதாரண காரணம். நிலம், விதை, பனிமுதலியவை முக்கியகாரணம். மழை சாதாரணகாரணம். அதுபோல உயிர்களின் ஏற்றத்தாழ்வுக்கு அவர்களின் கருமங்களே காரணம். அந்த ஏற்றத் தாழ்வுகள் மழையைப் போல இறைவனைப்பற்றது. செய்பவன் குற்றம் அவனைத்தான் சாரும்; செய்துவைப்பவனைச்சாராது. உயிர்கள் வினையைச் செய்தால் உதயவனைப்பற்றுமோ பற்றது. உதயவன்—சூரியன். அதுபோல யார் எந்த வினையைச் செய்தாலும் பொதுகாரணஞன இறைவனையெவ்வாறு மேவும்? மேவாதென்பது கருத்து. மேவுதல்—பொருந்துதல்.

விதி, சுவர்க்க போகத்தை விரும்பினல் (யக்ஞம்) மகங்கள்செய், மழையை விரும்பினல் காரீரயாகஞ் செய் என்ற வாக்கியங்கள் விதியாகும், விலக்கு—ஞானியைக் கொல்லக்கூடாது, பொய்ப்பேசக் கூடாது, என்ற வாக்கியங்கள் விலக்கு எனப்படும். இவ்வாக்கியங்கள் (வையர்த்தியம்) பயனற்றதாகப் போகக் கூடாதென்று ஜீவர்களின் கர்மத்தை விரும்பினன் இறைவன். உயிர்கள் செய்யும் வினைகளை யிறைவன் ஒழுங்கு படுத்தாது போனல் வினை களில் பிறழ்ச்சியுண்டாகும். ஆகலின் வினையின் குற்றம் விமலனைப் பற்றது. விமலன் - ஆன்மா. ஜீவன் கர்த்தாவாக இருந்தாலும் காலம், தேசம், பொருள்கள் முதலியவைகளை விரும்பியே வினைகளைச் செய்யவேண்டியிருக்கிறது.

## 4 அம்சாதிகரணம்.

### அவதாரிகை

இதுவரை ஜீவனுக்கு இறைவன் உதவியாளனென்றும் இறைவனிடத்தில் ஜீவன் உதவி பெறுபவனென்றும் உரைக்கப் பெற்றது. இதை விளக்கும் பொருட்டு அடுத்த சூத்திரம் வருமாறு :-

# சூ. அம்ஸோ[3] நாநாவ்யபதேஸாத் அன்யதா[3]சாபி தா[3]ஸகிதவாதி[3]த்வ மதீ[4]யத ஏகே 43

அம்ஸ :, நானா, வியபதேஸாத், அன்யதா, ச, அபி, தாஸ, கிதவாதித்வம், அதீயதே, ஏகே என்று பிரிக்கவும்,

ப.உ. அம்ச: = ஜீவன் இறைவனது அம்சம். நானா வியப தேசாத் = (சுருதியில்) இறைவனுக்கு வேருக ஜீவனை மொழிந்திருக் கிறது. அன்யதாசாபி = (பேதம் போல) (அபேதமாக) ஒன்ருகவும் உரைத்திருக்கிறது. ஏகே = வேதத்தின் ஒரு கிளையை ஒப்புக் கொள் பவர்கள் அபேதத்தையும் கூறுகின்ருர்கள். அபேதம் ஒற்றுமை. தாஸகிதவாதித்வம் = பிரஹ்மதாசா பிரஹ்மகிதவாவென்று, அதீயத = மொழிகின்ருர்கள்.

வி.உ. உலகில் ஒருவர்க்கொருவர் உதவி புரிவது நெருங்கிய உறவினர்களுக்குரியவை, ஆண்டான் அடிமை போல, அல்லது நெருப்பும் பொறியும்போல, சிவனுக்கும் ஜீவனுக்கும் உள்ள தொடர்பு. இவண் ஒரு ஐயம். என்னை, சிவனுக்கும் ஜீவனுக்கும் உள்ள தொடர்பு சுவாமி சேவகனைப் போலவா அல்லது நெருப்பும் பொறியும் போலவா என்பது. இவ்விடத்தில் 'அம்ச:' ஜீவன் – பிரஹ்மம் அன்று. ஜீவன் சிவனுடைய அம்சம். நெருப்பின் அம்சம் பொறியைப் போல. அம்சமும் அறியாமையால் ஆன்மாவில் கற்பிதம். உண்மையிலன்று. அருபமான ஆன்மாவில் உருவமான அம்சம் பொருந்தாது. அங்ஙன மாயின் அவயவமின்மையால் ஜீவன் பரமான்மாவாக ஏன் ஆகக் கூடாதெனின், அது முறையன்று. 'நானா வியபதேசாத்' மறைகளில் பேதமாகக் கூறப்பட்டிருக்கிறது. ''சோ அன்வேஷ்ட[3]வ்ய:'' அதை தேட வேண்டும். அதையறிய வேண்டும். ஏதமேவ விதித்வா முநிர் ப[4]வதி'' இவ்வாத்மாவையறிந்தவன் முனியாகின்ருன். ஆத்மாவுக்குள்ளிருந்து ஆத்மாவை நடத்துகிறது. ஜீவனுக்குள்ளிருந்து அவனை இயக்கி வைக்கிறது என்றெல்லாம் பேதங் கூறியிருக்கிறது. அவனை யென்பது ஜீவனை.

இங்ஙனம் இவ்வாறு மொழிந்திருப்பதால் ஜீவனைப் பரமாத்மா வென்று கூற இயலாது. இப்பேதமும் சுவாமி சேவகனைப் போலன்று. கற்பிதமாம். இதையுணர்த்துவதற்காகத்தான் '' அன்யதாசாபி ''

வேறுவிதமாக ஜீவனுக்கும் பிரஹ்மத்திற்கும் அபேதம்—ஒற்றுமை ஓதப் பெற்றிருக்கிறது. ஓதுதல் - உரைப்பது. பிரஹ்மதாசா' பிரஹ்மம் தாசா-செம்படவனுக்வும், பிரஹ்மதாசா' பிரஹ்மம் தாசனுகவுமிருக் கிறது என்பது மறையின் பொருள். செம்படவன்-மீன் பிடிப்பவன். உயர்ந்ததாகவும் தாழ்ந்ததாகவுமாய் பிரஹ்மம் இருக்கிறதென்பது பொருள்.

இதனுல் எல்லாம் பிரஹ்மம் என்பது தெளிவு. வானுகி, மண்ணுகி, வளியாகி யொளியாகி ஊனுகி உயிராகி யென்கிறது மணிவாசகம். பொருள்வெளி, அகரவுயிர் போல் அறிவாகி யெங்கும் நிகரில் இறை நிற்கும் நிறைந்து. எழுத்துக்களில் அ, என்னும் எழுத்து நிறைந்திருப்பதுபோல் ஆருயிர் அனைத்திலும் நிகரில் இறை தனக்கு நிகரற்ற ஆன்மா நிறைந்து நிற்குமென்பது பொருள். இதனுனும் எல்லாம் பிரஹ்ம சொரூபமென்பது - இனிது புலனும். ஆணுகிப் பெண்ணுகி யலியாகி என்னுந் திருவாக்காலுமுணர்க. மேல், கீழ், உயர்வு, தாழ்வு, சிறந்தவன், இழிந்தவன், மெலிந்தவன், வலிந் தவன், அவன், இவன், நீ, நான் என்பன வெல்லாம் ஜீவன் பார்வையில்தான்; ஞானி பார்வையில் இல்லை. ஜீவன் ஈசுவரன் என்னும் உரை வேருக இருந்தாலும் சேதனமொன்றே. நெருப்பு பொறியென்று இரண்டாக விளம்பினுலும் கொதிப்பு ஒன்றேயாகும். இதனுல் வழக்கில் ஜீவன் வேருனுலும் முடிவில் ஒன்றேயென்பது உறுதி.

அவதாரிகை

அம்சவியவகாரம் எவ்வாறு பொருந்தும் எனின்?

## சூ. மந்த்ரவர்ணுச்ச 44

ப.உ. ச= மேலும். மந்த்ரவர்ணுத் = மறைமொழியாலும் ஜீவன் அம்சன் என்று தெரியவருகிறது.

வி.உ. மந்த்ரம் - ''பாதோ அஸ்ய சர்வாபூதானி'' சா.உ. அஸ்ய = பரமான்மாவுக்கு சர்வாணிபூதானி = எல்லாஉயிர்களும். பாத: = (ஒரு) பாதமாகின்றன என்பது மறைமொழி. இவ்வாக்கியத் தால் ஜீவனிடத்தில் அம்சத்வம் தெரிகிறது. பூதம் என்னும் சொல் இவண் — இங்கு உயிர்களையும் உயிரில் பொருள்களையும் குறிக்கின்றது. மேலும் ஈஸ்வரஅம்ச ஜீவஅவிநாசி, சேதன அமல சஹஜசுகராசி'' து. ராமாயணம். ஜீவன் = உயிர்கள். ஈஸ்வர

அம்ச = இறைவன் அம்சமாகும். ஆகையால் அவினுசி=நாச மற்றவன். சேதனன் இயல்பாக ஞானவடிவினன். அமலன்-பாவ புண்ய மற்றவன் என்பது ராமாயணத்தின் கருத்து.

காயத்ரி வடிவ பிரஹ்மம் சிறந்தது. இதைப் பார்க்கிலும் நிர்விசேஷ பிரஹ்மம் சிறந்தது. எல்லாவுயிர்களும் இந்த பிரஹ்மத்திற்கு ஒருபாதம். ஏனைய மூன்று பாதங்கள் அமிர்தம் பிரகாசவடிவ ஆத்மாவில் நிலை பெற்றிருக்கின்றன என்பது மறைமொழி. அம்சம், பாதம், பாகமென்பனவெல்லாம் ஒரு பொருளைத் தரும் பல சொற்கள். இதனாலும் ஜீவன் இறைவன் அம்சமென்பது இனிதுபுலனும்.

### அவதாரிகை

இன்னும் எவ்வாறு ஜீவன் அம்சவடிவன் என்பதற்கு சூத்திரம்.

## சூ. அபிசஸ்மர்யதே 45

அபி, ச, ஸ்மர்யதே, என்று பிரிக்கவும்.

ப.உ. அபிச=மேலும், ஸ்மர்யதே=ஜீவன் எனதம்சம் என்று கார்முகில் வண்ணன் கமலக்கண்ணன் கழறுகின்ருர். கழறுதல்—கனிந்து சொல்லுதல்.'' மமைவாம்சோ ஜீவலோகே ஜீவபூதசனுதன:'' ப. கீதை. ஜீவலோகே=அக்ஞான காலத்தில். சனுதன - பழமையான ஜீவன் மமஏவ அம்ச:=என்னுடைய அம்சம் என்று யாதவக்குமாரன் பார்த்திவக் குமாரனுக்குப் பகர்கின்ருன். யாதவக்குமாரன்—ஸ்ரீகிருஷ்ணன். பார்த்திவக்குமாரன் தனஞ்சயன். இவ்வாறு ஜீவனை ஈசுவர அம்சமாக சொல்லப்படுகிறது. இதனாலும் அம்சத்வம் அறியப் படுகின்றது.

இங்கு அம்சாம்சி பாவம் வெறுந்தோற்ருமாத்திரம் முயற்கோடு, மலடிசேய் என்புழி போல, சொல்லேயன்றி பொருளில்லை. நீர்க் குமிழியென்றதால் நீர்வேறு குமிழிவேறு என்பதல்ல. நீர்தான் குமிழி, குமிழிதான்நீர். அதுபோல அம்சம் அம்சி சொல்மாத்திரமேயன்றி வேறில்லை. அம்சாம்சிபாவம் அக்ஞானகற்பிதமென்பது சங்கரர்மதம். குறைந்த மதியுடையவனை நிறைந்த மதியுடையவன் ஏவுதல் போல நிறைந்தமதியுடைய ஈசன் குறைந்த மதியுடைய ஜீவனையேவுவதால் என்னைக்குற்றம், ஒன்றுமில்லையென்பது உறுதி. அரசன் குடிகளையாணையிடுவதுபோல அரிய பிரஹ்மமும் ஆருயிருக்கு ஆணையிடுவது தவறென்றுமில்லையென்பது தெளிவு.

**அவதாரிகை**

ஒருவனது கை, கால், கண், காது, ஊனமுறும்போது அதனுல் எழும் வேதனையவனுக்கு உண்டாகுந்தானே, அதுபோல அம்சரூபி ஜீவனுக்கு உண்டான துன்பமும் அம்சிரூப ஈசனுக்கு உண்டாகுமே யென்பாயாகில் இல்லையென்பதற்குச் சூத்திரம்.

# ஸூ. பிரகாசாதிவன் நைவம்பர: 46

பிரகாசாதி, வத், ந, ஏவம், பர: என்று பிரிக்கவும்.

ப.உ. ஜீவன் எவ்வாறு துன்பத்தையடைகிருனே, ஏவம் - அதுபோல பர: ந = பரமாத்மா துன்பத்தையடைகிறதில்லை. பிரகா சாதிவத் = பிரகாசத்தைப்போல என்பது பொருள்.

வி.உ. உலகில் ஒருவனுடைய உறுப்புக்கள் ஊனமுறுமானுல் வேதனையெழும். ஊனம்-குற்றம். உறுதல்-பொருந்துதல். வேதனை- துன்பம். வேதனையுண்டாகும்போது அந்த உறுப்பையுடைய மனி தனுக்கும் வேதனையுண்டாகும், அதுபோல் ஜீவனை ஈசன் அம்சமென்று ஒப்புக்கொள்வதால் அம்சத்திற்குவரும் குற்றம் அம்சியாகிய ஈசனைப் பற்றுந்தானேயென்பது எதிரியின் வழக்கு மேலும் அவன் தரும்தருக்கம் எல்லா ஜீவனுடையதுன்பமும் இறைவனைச் சேரும் போது அவனை யடைந்த மக்களுக்கும் பெருத்துன்பமுண்டாகுமென்பது. இறைவன் பிரஹ்மம். அவனையென்பது ஈசனை. இதனுல் இறைவனைப் பெறுவதை பார்க்கிலும் இனிய பிரபஞ்சத்தைப் பெறுவது நலம் என்பது அவன் கருத்து. அவன்-எதிரி.

வாதி, ஜீவன் எவ்வாறு இன்பதுன்பத்தை யனுபவிக்கிருனே அவ்வாறு ஈசன் நுகருகிறதில்லை. இதுதான் மறை முடிவின் முடிவு. காரணம். ஜீவன் தனது அறியாமையால் தேகாதிகளோடு அபி மானத்தை வைத்து துன்பத்தை நுகருகிருன், ஈசனுக்கு அவை யில்லாமையால் தேகாதிகளோடு அபிமானமில்லை. ஆகலின் இன்ப துன்பமுமில்லை. ''இன்பமுந் துன்பமும் இல்லானே யுள்ளானே'' என்பது மணிவாசகம். பொருள் வெளி. ஜீவதிருஷ்டியால் உள்ளானே. ஈசதிருஷ்டியால் இல்லானே. திருஷ்டி — பார்வை. உண்மையில் உணரும் போது இன்ப துன்பம் ஜீவனுக்குமில்லை. அவனுக்கும் கற்பிதமாகும். மனிதன் துன்பத்தை யநுபவிப்பது எப்போது?

"தனஹரணே ஜனமரணே" தனது பொருளையொருவன் பறிக்கும் போதும், தமது உறவினர் இறக்கும் போதும் துன்பமுண்டாகும். அதற்குக் காரணம் அபிமானந்தான். என்னுடைய என்ற போது அபிமானம் வருகிறது. ஒருவர் பொருள் இழந்த போதும் ஒருவர் உறவினர் இறந்த போதும் துறவிகளுக்குத் துன்பம் வருகிறதில்லை. காரணமென்ன ? அபிமானம் இன்மையால். ஆகையால் அபிமானமே துன்பத்திற்கு நிமித்தம். நிமித்தம்—காரணம். இதனால் மெய்ஞ்ஞானம் பொருளுடையதாகின்றது,

பிரகாசாதிவத்—சூரியனும் சந்திரனும் விண்ணை வியாபித்திருந்தாலும், பூரணம் போல் தெரியக்காணோம். பிரகாசம் ஒழுங்காக இருந்தாலும் கையை அல்லது கண்ணாடியைக் கோணலாக வைத்துப் பார்த்தால் அதுவும் கோணலாகத் தெரிகிறது. இஃதெல்லாம் எண்ணிப் பார்க்கும் போது உண்மையில் ஜீவனுக்கோ அல்லது இறைவனுக்கோ இன்பதுன்பமில்லை. பின்னையார்க்கு வெனின் ? மனதுக்கு.

## சூ. ஸ்மரந்திச 47

ப.உ. ஸ்மரந்திச = உயிர்கள் குற்றம், உடையவனுக்கு இல்லையென்று வியாச ஆதி இருடிகள் கூறுகின்றனர். உடையவன்—ஈசன்.

வி.உ. தத்ரய : பரமாத்மா ஹி ச நித்யோ நிர்குண : ஸ்மிருத:!

நலிப்யதே பலஸ்சாபி :பத்மபத்ரமிவாம்பசா!!

இ.ள். தத்ர=ஜீவன் ஈசன் என்னும் இருவர் நடுவில் ய:= பரமாத்மா. நித்ய : = என்றுமுள்ளவர். நிர்குண : = முக்குணமின்றியவர். ஸ்மிருத : = (என்று) உரைக்கப் பெற்றிருக்கிறது. பத்மபத்ரம் இவ அம்பஸா = தண்ணீரால் தாமரை எங்ஙனம் பற்றப்படுவதில்லையோ (அதுபோல) நலிப்யதே பலஸ்சாபி: = பலரூப இன்பதுன்பங்களால் (ஆன்மா) பற்றப்படுவதில்லையென்பது பொருள்.

கர்மாத்மாத்வபரோயோ அசௌ மோக்ஷபந்தை! ஸ யுஜ்யதே

ஸ ஸப்ததசகேனுபி ராசிநாயுஜ்யதே புன : !!

அபரோ = அன்யன். கர்மாத்மா – ஜீவாத்மா. யோ அசௌ = அந்த ஜீவாத்மா மோக்ஷபந்தை: யுஜ்யதே = பந்தமோக்ஷத்தையேற்றுக் கொள்கிருன். ஸ = அவன். ஸப்த தசகேனுபிராசிஞ = பதினேழுத் தத்வங்களோடுகூடிய சூக்கும உடலோடுக் கட்டுப்படுகிருன். யுஜ் யதே = துன்பப்படுகிருனென்பது கருத்து. இவ்வாறு வியாசாதி முனிகள் விளம்புகின்ருர்கள். இதனுல் ஜீவனுக்கு வருகிற துன்பங் கள் ஈசனுக்கு இல்லையென்பது தெளிவு. ச என்னுஞ் சொல்லால் ''தயோரன்ய : பிப்பலம் சுவாதுவத்தி அனஸ்னன் அன்ய : அபிச்சாகசீதீ'' கடவல்லி. தயோ : = ஜீவன் ஈசன் என்னும் இருவர் நடுவில், அன்ய : = ஜீவன். பிப்பலம் = இன்பதுன்பத்தை, சுவாது அத்தி = நன்று நன்றெனத்தின்கிருன். அன்ய: = ஈசன். அபிசாக சீதி = ஒளியைக் கொடுத்துகொண்டு ஒரு ஓரத்திலிருக்கிருனென்பது சுருதிப்பொருள். இதனுலும் ஜீவனுக்கு வரும்குற்றம் ஈசனுக்கில்லை யென்பது இனிது புலனும்.

### அவதாரிகை

எல்லோருள்ளத்திலும் ஒரேயான்மா இருக்குமானுல் விதி விலக்கு எங்ஙனம் பொருந்துமெனின்? சூத்திரம்.

## சூ. அநுக்ஞா பரிஹாரௌ தேஹசம்பந்தாத்ஜ்யோதிராதிவத் 48

அநுக்ஞா, பரிஹாரௌ, தேஹ சம்பந்தாத், ஜ்யோதிராதிவத் என்று பிரிக்கவும்.

ப.உ. அனுக்ஞா, பரிஹாரௌ, = கொள்ளுவதும், தள்ளுவதும். இவை இரண்டும். தேகசம்பந்தாத் = தேக அபிமானத்தால் ஆத்மா விற்குப் பொருந்தும். ஜ்யோதி: ஆதிவத் = நெருப்பு ஒன்ருக இருந் தாலும் இடத்தின் பேதத்தால் கொள்ளவும் தள்ளவுமாயிருக்கிறதோ அது போலவென்றறிக.

வி.உ. ரிதௌபாரியாமுபேயாத் = ரிது காலத்தில் இரண்டு மாதத்தில் ஒருமுறை தன்மனையாளை நேசிக்க வேண்டும் என்றும், நண்பனை நேசிக்க வேண்டுமென்றும் கூறியிருக்கிறது. இவை

யிரண்டும் அனுக்ஞா – கொள்ளத் தக்கதென்பதுக் குறிப்பு. குரு மனேவியோடுப் பழகாதே, பகைவனேப் பாராட்டாதே, யிதுபரிஹாரம் – விலக்கு. 'ஜ்யோதிராதிவத்' – நெருப்பு எவ்வாறு நெருப்பு ஒன்ருக இருந்தாலும் மயான அக்னித் தள்ளத்தக்கது. மற்றைய நெருப்புக் கொள்ளத் தக்கதோ அதுபோல இவ்விதி விலக்கு இரண்டும் சரீரசம் பந்தத்தால் ஆன்மாவில் காணப்படுகின்றன. தேகசம்பந்தம் என்ன வென்ருல் ஐம்பூத கூட்டங்களே அகமென அபிமானித்தல். அகம் – நான். நான்குருடன், நான்செவிடன், நான்நெட்டையன் என்னும் பற்றுதல். நாமல்லாததை நாம் என்பது அறியாமை, நம்மை நா னென்பது அறிவு.

உலகத்தில் எங்கேயெல்லாம் யான் எனதென்னும் அபிமானம் செல்லுகின்றதோ அவை யெல்லாம் அறிவின்மையேயாம். மானம் குறைந்தது, ஞானம் நிறைந்தது. ஆன்மாவை நான்என்பது ஞானம் – அறிவு, ''நிறைந்ததே யிந்த ஆன்மா'' என்பது கைவல்யம். பொருள் வெளி. நான்நீயென்னும் அபிமானம் ஞானத்தால் அன்றி வேறு உபாயத்தால் விலகாது. இருள் ஒளியாலன்றி விலகாததுபோல. குடத்துக்குள் ஆகாச மிருந்தாலும் குடத்திற்கு அது வேருயிருப்பது போல் ஆன்மா தேகமென்னுங் குடத்துக்குள் இருந்தாலும் அதை வேறென்றே யறியவேண்டும். குடத்துக்குள் ஆகாசம் வேருக இருந் தாலும் குடத்திற்கு வேறுஎன்பது வேதாந்தம் படியாமலே தெரிந்து கொள்ளலாம். தேகத்திற்கு வேருக ஆன்மாவை யறியவேண்டு மானுல் வேதாந்தம் படித்துதான் தெரியவேண்டும். ''நான்யப்பந்தா வித்யதே அயனுய'' ஸ்வே. உ. அயனுய = முக்திக்கு. அன்ய பந்த்தா = வேறுவழி. ந வித்யதே = இல்லையென்பது பொருள். பூமியில் உள்ள நவரத்தினங்கள் கொள்ளப்படுகின்றன. நரம்பு, தோல், எலும்பு மற்றைய கற்கள் தள்ளப்படுகின்றன. அதுபோல விதி, விலக்கு உடல் சம்பந்தத்தால் உயிர்க்கு ஒப்புக் கொள்ளப்பட்டிருக் கிறது. உயிர் – ஆன்மா. உண்மையில் அன்று. வெளியென்றும் ஒளியா யிருப்பதுபோல ஆன்மா என்றும் அசங்கம். வெளி—ஆகாசம். அசங்கம் – பற்றற்றது. இதனுல் அனுக்ஞா பரிகாரம், இவையிரண்டும் ஆத்மாவிற்கு இல்லையென்பது உறுதி.

**அவதாரிகை**

விதியும், விலக்கும் ஆத்மாவிற்கு உடல் சம்பந்தத்தால் வந் ததேயொழிய உண்மையில் அன்று. இங்ஙனமிருப்பினும் கர்மபல சம்பந்தம் எவ்வாறு என்பாயாகில் சூத்திரம்.

## சூ. அசந்ததேஸ்ச அவ்யதிகர: 49

அசந்ததே:, ச, அவ்யதிகர:, என்று பிரிக்கவும்.

ப.உ.ச = மேலும். அசந்ததே: = சம்பந்தமின்மையால் அவ் யதிகர: = சங்கரமன்று. சங்கரம் - மாறுபட்டதன்மை.

வி.உ. ஒரு ஆத்மாவை யொப்புக்கொள்ளும் பக்ஷத்தில் வர்ண சங்கரமாதிரி கர்மபல சங்கரமுண்டாவதில்லை. ஏனெனின், அசந்ததி: – சந்ததி – சம்பந்தம். செய்யுந்தன்மை, நுகரும்தன்மை, முதலிய சம்பந்தங்கள் எல்லாம் தேகத்திற்கும் ஆன்மாவிற்கும் தொடர்புஉண் டாகும்போதுதான் ஏற்படுகின்றன. ஆகையால் ஒருஜீவனுக்கு எல்லா சரீரத்தோடும் சம்பந்தமின்மையால் பயனையனுபவிப்பதில் பிறழ்ச்சி யுண்டாக மாட்டாது. பிறழ்ச்சி மாறுபாடு. ஜீவன் உபாதிக்கு வயப்பட்டவன். உபாதிக்கு நெடுகிலும் சம்பந்தமின்மையால் கர்ம பலன்களுக்கு முறைகேடு வருவதற்குக் காரணமில்லை.

## சூ. ஆபாச ஏவச 50

ப.உ. ஆபாச ஏவச = ஜீவன் பரமாத்மாவின் தோற்ற மாத் திரமே. ஆகையால் கர்மபலனுக்கு முறைகேடுவாராது. ஆபாசம், பிரதிபிம்பம். தோற்றம் என்பனவெல்லாம் ஒரு பொருளைத் தருகின்ற பல சொற்களேயாம். அழகிய புனலில் அம்புலியின் அரிய தோற்ற முண்டாகிறது அது ஆபாசமெனப்படும். புனல் - தண்ணீர். அம்புலி = அழகியசந்திரன்.

தண்ணீரில் தோற்றும் தரணியின் பிரதி பிம்பம் போல ஜீவன் ஈசனுடையச் சாயையேயாம். தரணி - சூரியன். சாயை - நிழல். அவன் ஈசனுமல்லன் ஈசனுக்கு வேறுமல்லன். ஒரு குடத்திலுள்ள சூரிய பிரதி பிம்பம் அசைகிறபோது மற்றைய பிரதி பிம்பம் அசை கிறதில்லை. அதுபோல ஒரு ஜீவனுக்கு வினையின் பயன் உண்டாகும் போது ஏனைய ஜீவர்களுக்கு இன்பதுன்பமுண்டாகிறதில்லை. இதனாலும் கர்ம பலத்திற்குப் பிறழ்ச்சியுண்டாகிறதில்லை.

அக்ஞானத்தால் ஆபாசன் தோற்றினான். ஆபாசன் (ஜீவன்) அவித்யாகிருதன், அவித்தையைக் காரணமாகக் கொண்டவன். ஆகலின் அவனைப் பற்றிய சம்சாரமும் அக்ஞானத்தின் காரியம்.

அவன் என்பது ஜீவனை. இவ்வவித்தையை விலக்கும் பொருட்டு உண்மை ஞானத்தை யோதுவது. உசிதம் - முறையாகும். ஓதுவது உரைப்பது.

யாருடைய மதத்தில் ஆன்மா அனந்தமோ அவர்கள் மதத்தில் அது வியாபகமுமாம். அனந்தம் - பல. வியாபகம் - நிறைவு. அதனால் சங்கரம் - முறைகேடு அவர்கள் மதத்தில் உண்டு. அவர்கள் என்பது சாங்கியர்கள். ஆன்மா பல, விபு, சேதன வடிவினன், நிர்குணம். நிரதிசயன், - புதுமையின்றியவன். அவனுக்கு பிரதானம் (மாயை) சாதாரணம். இதனால் போகம் - இன்பம். அபவர்க்கம் - முக்தி உண்டாகின்றன என்பது சாங்கிய மதம்.

பலவாகவும், நிறைவாகவும் இருப்பதால் ஆன்மா குடம், சுவர் முதலியவை போல பொருள் வடிவமாயிருப்பதால் அசேதனம் ஆம். ஆன்மாவிற்குத் துணையாகவிருக்கும் மன முதலிய கருவிகள் அணுக்களாகவும் அசேதனமாகவுமிருக்கின்றன. ஆகையால் ஆன்மா அசேதனம் - உயிரில்லாத பொருள் என்பது கணாதமதம். பிரகிருதியின் தொழில் ஆத்மாவுக்கு இன்பதுன்பத்தை யினிது கொடுப்பதற்காக என்று சாங்கியர் கூறுகின்றனர். தனது மகிமையை விளக்கும் பொருட்டென்றும் புகல்வார்கள். புகலுதல் - சொல்லுதல். தனது பெருமையை மட்டும் வெளிப்படுத்துதல் என்றால் அவர்கள் மதத்தில் முக்தியுண்டாக மாட்டாது.

கணாத மதத்திலும் மனதிற்கு எப்பொழுது ஒரு ஆன்மாவுடன் சேர்க்கையுண்டாகிறதோ அப்பொழுது வேறு ஆன்மாக்களுடனும் சேர்க்கையுண்டாகும். அங்ஙனமாயின் ஒருவன் நுகரும் இன்பதுன்பங்கள் அனைவரையும் பற்றும். இவ்வாறு வராதென்பதற்கு அடுத்த சூத்திரம்.

## சூ. அத்ருஷ்ட அநியமாத் 51

ப.உ. அத்ருஷ்டம் = முந்திய தருமம் அல்லது அதருமம் அதிருஷ்டமெனப்படும். இதைப்பழவினை யென்பாருமுளர். அநியமாத் = நியமம் இன்மையால்.

வி.உ. அத்ருஷ்டம் . கீழ்ப் போனப் பிறவிகளில் செய்த பழவினையின் பயனையனுபவிக்கச் செய்யும் முறை. முறை - நியமம் அதின்றியது அநியமம். ஜீவனை ஈசனுக்கு அம்சம் என்று ஒப்புக்

கொள்ளாவிடின் அவனுக்குத் தனித்தனி சுதந்திரம் உண்டாகும். அவனுக்கு - ஜீவனுக்கு. அவ்வாறு உண்டானாலும், அல்லது குடா காசத்திற்கு சமான உபாதியைக் கொண்டு ஆத்மாவை பிரஹ்மத்தின் அம்சமென்று ஒப்புக் கொள்ளினும் உயிர்களுக்கு இன்ப துன்பங்களை நுகரும் நியமம் உண்டாக மாட்டாது. எதனாலோவெனின்? நியமனஞ் செய்பவன் இன்மையால். ஆகையால் ஜீவனை ஈசுவரன் அம்சம் என்பதில் ஒரு குற்றமும் இன்று.

அவதாரிகை.

ஜீவ சங்கற்பத்தால் அதிருஷ்டமுண்டாகாதோ வெனின் உண்டாகாது என்பதற்கு சூத்திரம்.

## ஸூ. அபி[4]சந்[4]த்யாதி[3]ஷு அபிச்சைவம் 52

அபி[4], சந்த்யாதிஷு, அபி, ச, ஏவம் என்று பிரிக்கவும்.

ப.உ. அபிசந்த்யாதிஷு = சங்கற்பங்களிலும், சைவம் = அத்ருஷ்டத்திற்கு நியமமில்லை. ஆகையால் முன்னே சொன்னக்குற்றம் இருக்கிறது.

வி.உ. நான் இவ்வினையைச் செய்வேன், இதைச் செய்ய மாட்டேன், இந்தப் பலத்தை நுகருவேன். இதை நுகரமாட்டேன் என்று ஜீவன் எண்ணினால் நியமம் உண்டாகுமா அல்லது இல்லையா என்பாயாகில் அது பொருந்தாது. ஏனெனின் எல்லா ஜீவர்களுடைய முன்னிலையில் பண்ணப் பட்ட எண்ணங்கள் நியமத்திற்கு நிமித்த மாகாது. நிமித்தம் — காரணம். எனவே சொன்னக் குற்றம் விலகுவ தில்லை

அவதாரிகை

ஆத்மா எங்கும் நிறைந்திருந்தாலும் உடலில் இருக்கும் உள்ளத்தோடு உயிர்க்குத் தொடர்பு உண்டாகும்போது உடலுக் குள்ள சிறிய இடம் ஆத்மாவிடத்தில் தொடர்பு உண்டாகும் என்பா யாகில் பதில் சூத்திரம். உள்ளம் — மனம். தொடர்பு - சம்பந்தம். உயிர் — ஆன்மா. இடம் — பரிச்சின்னதேசம்.

## ஸூ. ப்ரதே[3]ஶாதி[3]தி சேன் ந அந்தர்பா[4]வாத் 53

பிரதேசாத், இதி, சேத், ந, அந்தர்பாவாத் என்று பிரிக்கவும்.

ப.உ. பிரதேசாத் = (ஆத்மா எங்கும் நிறைந்திருந்த போதிலும்) சரீர அவச்சின்ன – சரீர அளவுக்குள் இருக்கும் ஆத்மமனசம்யோகம் – சம்பந்தம், உண்டாகட்டுமே. அந்நிலையில் நியமமுண்டாகக் கூடாதாவெனின்? இதிசேன் ந இவ்வாறு கூறுவாயாகில், அது பொருந்தாது. ஏனென்றால், அந்தர்பாவாத் = எல்லா சரீரத்துள்ளும் ஆத்மா இருப்பதால். அதனால் அநியமம் – நியமம் உண்டாகாது. எனவே குற்றமிருக்கவே செய்கிறது.

வி.உ. ஆன்மாவியாபகமா யிருந்தாலும் உடலுக்குள் இருக்கும் உள்ளத்தோடு சம்பந்தம் அந்த தேசத்தில்தான் உண்டாகும், இதனால் சங்கற்பமாதி, அத்ருஷ்டம், இன்பதுன்பம் முதலியவைகளுக்கு நியமம் பொருந்தாது. எல்லா ஆத்மாவுக்கும் உள்ளதொடர்பு இருக்கிறது. ஆத்மத்வ சமானத்தால். எல்லா ஆத்மாக்களுடைய முன்னிலையில் உடல் உண்டாயிருக்கிறது. அங்ஙனமிருக்க எந்தஉடல் எந்தஆத்மா விற்கு சொந்தமென்று நியமம் செய்ய இயலாது. குறைந்த இடத்தை யொப்புக் கொள்ளினும் போகத்தை நுகர்வதில் இரண்டு ஆன்மாக்களுக்கு ஒரு உடலில் சித்தமாகும். ஏனெனின், இரண்டு ஆத்மாவுடைய அத்ருஷ்ட மோரிடத்திலுண்டாவதால்.

எங்ஙனம் தேவதத்தனுடைய வினையும், யக்ஞதத்தனுடைய வினையும் ஒருவிடத்திலிருக்குமானால் இருவரும் ஒருஇடத்தில்தான் நுகர்வார்கள். இவன் ஆன்மா என்பது, பரமாத்மா. பரமனுக்கு எல்லா உடலோடும் தொடர்பு உண்டு. அதனால்தான் சுருதி –

சர்வாநந சிரோகிரீவ: சர்வபூத குஹாஸய:[3]
சர்வவியாபிச பகவான் தஸ்மாத் சர்வகத: சிவ: ''சுவேத

சர்வாநந = எங்கும் ஆநநம் – முகம். கிரீவ: = கழுத்தும் சிரமும் – தலையும் எங்கும் வியாபித்திருக்கின்றன. சர்வபூதகுஹாஸய: – எல்லாருடைய உள்ளத்திலும் இலங்கிக் கொண்டிருக்கிறது. சர்வ தேசத்திலிருக்கும் ஆன்மா ஏகதேசத்திலும் இருக்குந்தானே. இருக்கும் என்பது உறுதி. சர்வவியாபி = எங்கும் பிரகாசமாய், பகவான் முற் றறிவுடையவன். தஸ்மாத் = ஆகையால். சர்வகதசிவ| = சிவன் எங்கும் நிறைந்திருக்கிரு னென்பது குறிப்பு. சிவன் – மங்கள வடிவினன். உபாதியின் தேசபேதத்தால் பிரஹ்மத்தில் தேசபேதமுண்டாகாது.

ஒவ்வொரு உபாதியின் தொடர்பு எல்லாத் தேசத்தோடும் பொருந்தும். உபாதியொரு இடத்திலிருந்து இன்னொரு இடத்திற்குச் சென்றால் ஆகாசமும் செல்லும் என்பது அருத்தமில்லை. வேதாந்த பக்ஷத்தில் ஆகாசத்திற்கு வியாபகமில்லை ஏனெனின்? 'காரியத்வாத்.' சங்கரபாஷ்யம். காரியமா யிருப்பதால் என்பது கருத்து. இதனால் ஆன்மா வொன்றென்னும் பக்ஷத்தில் குற்றமில்லை, பலவென்னும் பக்ஷத்தில் குற்றமுண்டு. இதனால் அம்சாம்சிபாவம் கற்பிதமென்பது இனிது புலனாம்.

இரண்டா மத்தியாயத்தின் மூன்றாவது பாதமுற்றிற்று.

## இரண்டாவது அத்தியாயத்தின்

### நான்காவது பாதம்

இந்தப் பாதத்தில் சூக்கும சரீர சுருதியின் விரோத பரிகாரம்

### பிராண உத்பத்தியதிகரணம்

ஐந்து பூதங்களின் உத்பத்தி விஷயத்தில்வரும் விரோதம் முந்திய பாதத்தில் அகற்றப் பெற்றது. இந்த பாதத்தில் இந்திரிய உத்பத்தி, அதன்தொகை அதன் சொரூப முதலியவைகளில் வரும் விரோதங்கள் அகற்றப்படுகின்றன. சூத்திரம் வருமாறு.

## ஸூ. ததாபிராணா: 1

ப. உ. ததாபிராணா:=எவ்வாறு பூதங்கள் உண்டாகின்றனவோ அவ்வாறு (பொறிகளும்) இந்திரியங்களும் உண்டாகின்றன என்பது பொருள்.

வி. உ. ''ஏதஸ்மாத் ஜாயதேபிராண:'' இந்த ஆன்மாவிலிருந்து. பிராண:=பிராணன், ஜாயதே=உண்டாயிற்று என்ற சுருதி வாக்கியத்தால் ஐம்பூதங்களும் உண்டாயின, அதுபோல் பிராணன், இந்திரியங்கள் பிறவும் உண்டாகின்றன என்பது மறையின் பொருள். பிராணன் என்னுஞ் சொல் பொறிகளைக் குறிக்கின்றன.

''தத்தேஜோ அசிருஜத'' ஆன்மா அனலைப்படைத்தது என்பது மறைமுடிபு. ''ஏதஸ்மாத் ஆத்மன ஆ கா ச சம்பூத:'' என்றுதைத் திரீயங் கூறுகின்றது. இந்த ஆன்மாவிலிருந்து ஆகாச முண்டாயிற்று என்பது ஆரணத்தின் பொருள். ஆரணம் வேதம். இம் மறைகளில் பிராணனுக்குப் படைப்புப் பகரக்காணேம் பகர்தல் - சொல்லுதல். சில இடங்களில் பொறிகளுக்குத் தோற்றம் புலப்பட்டிருக்கின்றன. அசத்வா இதம் அக்ர ஆஸீத். தை. உ. 2-6. அக்ரே = படைப்பிற்கு முன்னர். இதம் = இக்காணப்படும் காக்ஷிகளனைத்தும். அசத் ஆஸீத் = சூன்யமாக விருந்ததென்பது சுருதிப்பொருள். இங்ஙனம் அ ச த் என்பது ரிஷியைக் குறிக்கின்றது; ரிஷியார் என்று விசாரிக்குமிடத்து பிராணனென்று கூறியிருக்கிறது. இதனுல் சிருஷ்டிக்கு மு ன் ன ர் பிராணன் இருந்ததாகத் தெரிகிறது. சில விடங்களில் பிராணனுக்கு உற்பத்திக் கூறியிருக்கிறது. அவை வருமாறு. ''ஏதஸ்மாத் ஆத்மன: சர்வே பிராணு:'' என்றும், ஏதஸ்மாத் ஜாயதே பிராணே, மன:'' என்றும் ''ஸப்த பிராணு: ப்ரபவந்தி தஸ்மாத்.'' என்றும், ''ஸ. பிராணம் அஸ்ருஜத'' என்றும் கூறியிருக்கின்றன. ஏ த ஸ் மா த் ஆத்மன: = இந்த ஆத்மாவிலிருந்து. சர்வே பிராணு - எல்லாப்பிராணன் களும் (உண்டாகின்றன.) ஏதஸ்மாத் ஆத்மன: = இந்த ஆ த் மா வி லிருந்து, பிராணே மன: ஜாயதே = பிராணன் மன முதலிய பொறி களுண்டாகின்றன. ''ஸப்த பிராணு: பிரபவந்தி தஸ்மாத்.'' தஸ் மாத் = அந்த ஆத்மாவிலிருந்து ஸப்த. பிராணு: எழுவித இந்திரி யங்களும். பிரபவந்தி = உண்டாகின்றன என்று முன்மொழிந்த மறை வாக்யங்களுக்கு முறையே பொருள் கொள்ளவும்.

இ ந் த இடங்களில் முன்னுக்குப் பின் முரணுக இருப்ப தால் பிராணுதிகளுக்கு உற்பத்தி யெங்ஙனம் பொருந்துமென்பது எதிரியின் வழக்கு. பிரதிவாதி - நீ சொல்வது பொ ரு ந் தா து, ஏனெனின்? ''கதா பிராணு:'' முந்திய பூதங்களைப் போன்று பிராணங் களுக்கு முத்பத்தி யுண்டாகிறது. பூதங்களைப் போல பொறிகளும், பிராணங்களும் உண்டாகின்றன என்பதில் பல மறைகள் முழங்கு கின்றன. இறைவனிடத்திலிருந்து எல்லாம் உண்டாவது போல பிராணன் முதலியக் கருவிகளும் உண்டாகின்றன. '' ஏதஸ்மாத் ஜாயதே பிராணே'' ... என்னும் சுருதியின் மூலமாக பிராணன், மனம், சகல பொறிகள், நிகில பூதங்கள் பிறவெல்லாம் உண்டா கின்றன என்பது மறையின் பொருள். நிகிலம் - எல்லாம்.

முந்திய பிரகரணத்தில் எல்லாம் பிரஹ்மத்தின் விகாரம் என்று விளம்பப்பட்டது போல பிராணுதி ஆகாசங்கள் பிரம்மத்தின் விகார மென்று கொள்ள வேண்டும். விகாரத்திற்கு ஏது யாது வெனின்? சுருதி மாத்திரம் ஏது. காரணமென்பது கருத்து. எதிரி - சிலவிடங் களில் பிராணுதிகளுக்கு உத்பத்தி சொல்லவில்லையே யெனின் ? அது பொருந்தாது. எதனுலோ வெனின்? அன்ய இடங்களில் உத்பத்தி உரைத்திருக்கிறது. ஆகையால் ஆகாசாதிகளைப் போல பிராணுதி களுக்கும் உத்பத்தியுறுதியென்பது தெளிவு.

### அவதாரிகை

எதிரி - பிராணுதிகளுக்கு பூத உத்பத்திப் பிரகரணத்தில் உத் பத்தி மொழியவில்லையென்ருன். அதற்குப் பதில் சூத்திரம் வருமாறு:

## ஸூ. கௌண்யசம்பவாத் 2

ப.உ. கௌணி அசம்பவாத். உத்பத்தி சொன்ன சுருதி முக்கியமல்ல என்பது முறையன்று.

வி.உ. வாதி - முந்திய பிரகரணத்திலும் மொழிந்திருக்கிறது. ''தத்தேஜோ அஸ்ருஜத'' நெருப்புக்கு முக்கியமான பாகம் வாக் கென்றும், நீரின் முக்கியமான பாகம் பிராணனென்றும், நிலத்தின் முக்கியமான பாகம் மனமென்றும் மொழிந்திருக்கிறது. இதனுல் பிராணுதிகளுக்கு உத்பத்தி மொழிந்திருக்கிறதென்பது இனிது புலனும். உத்பத்தியைக் கூறுஞ் சுருதியெவ்விதத்திலும் முக்கியமல்லவென்று சொல்ல இயலாது. ஏனெனின்? சூளுரை பங்கமாகும். சூளுரை - பிரதிக்ஞை.

எதையொன்றை யறிந்தால் எல்லாமறிந்ததாகின்றதோ வென்ற சூளுரைப் பொருத்தமற்றதாகும். பிராணன் இந்திரியம் மன முதலிய எல்லா உலகமும் பிரஹ்மத்தின் விகாரமாகும். இந்த எல்லாவுலகமும் கர்ம, தபம் முதலிய எல்லாம் புருஷவடிவமேயாகும். அது மேலான அமிருதரூப பிரஹ்மம். இவ்வுலகமனைத்தும் உயர்ந்த பிரஹ்மமயாம். இவ்வாறு சுருதிகள் தாம் கூறிய பொருளை முடிக்கின்றன. இவ்வாறு ''ஆத்மாவாஅரே என்னும் மறையின் மூலமாக ஆத்ம தர்சனம், சிரவணம், மனனம், விக்ஞானங்களினுல் இவையனைத்தும் அறிந்த தாகின்றன என்ற சூளுரையை வருவித்துக்கொள்ளவும். இவ்வாறு

இங்ஙனம் இருப்ப உலகம் உதிப்பதற்கு முன்னே பிராணன் எங்ஙனம் இருக்கமுடியும் ?முடியாதென்பது கருத்து. ''அப்ராணோ ஹி அமனு:'' என்னும் சுருதி வாக்கியத்தாலும் படைப்புக்கு முன் பிராணன் இருந்த தென்னுஞ் சொல்லுக்கு இடமில்லை.

முன்னே பிராணன் இருந்த தென்பதற்கு ஹிரண்யகர்ப்பன் இருந்தான் என்று பொருள். ''ஆதிகர்தா ச பூதானும் பிரஹ்மா அக்ரே சமவர்த்தத'' பிரஹ்மா - உயிர்களுக்கு முதன்மையானவரும் படைப்புக்கு முன்னுள்ளவரும் இருந்தாரென்பது பொருள். இதனல் பிராணனுக்குத் தோற்றஞ் சொன்ன சுருதி முக்கியம். தோற்றம்— உத்பத்தி.

**அவதாரிகை**

கூறிய பொருளை மீண்டும் நிலை நிறுத்தும் பொருட்டு அடுத்த சூத்திரம் வருமாறு.

## சூ. தத்பிராக் சுருதேஸ்ச 3

ப.உ. தத்=பிராணனுக்கு. பிராக் = முன்னே. சுருதே, = உத்பத்தி சொல்லியிருக்கிறது. ச = உறுதி.

வி.உ. 'ஜாயதே' என்னும் சொல் ஆகாச முதலிய ஐம்பூதங் களைப்போல பிராணனேடும் பொருந்தி இருப்பதால் பிராணனுக்கு உத்பத்தியுறுதி.'ஏதஸ்மாத்ஜாயதே பிராண:'என்றசுருதி பிராணனுக்கு ஜன்மம் உண்டென்பதைத் தெளிவாக வலியுறுத்துகின்றது. ஏனென்றல் ஒரு பிரகரணத்திலும், ஒரு வாக்கியத்திலும் ஒருமுறை கூறியும், பல்வேறு பொருள்களோடு சம்பந்தம் உண்டாகியிருக்கும் சொல், ஒரு இடத்தில் முக்கியத்தையும் மற்ருெரு இடத்தில் கௌணத்தையும் உணர்த்துவதற்கு நியாயமில்லை. அவ்வாறு அங்ஙனம் ஒப்புக் கொள் வோமானல் பேதபிரசங்கமாகிவிடும். இந்த மாதிரி ''ச பிராணம் அஸ்ருஜத'' இங்கும் பிராணனிடத்தில் கேட்கப் பெற்ற 'சிருஜ' என்னும்பகுதி பின்னல் தோன்றும்சிரத்தை முதலிய பொருள்களோடுந் தொடர்புடையது. இங்கும் பின்னல் மொழிந்த உற்பத்தி வாக்கியம் முன்னுள்ள பொருளோடுதொடர்பு கொண்டிருக்கிறது. அங்கு இதுவே முறையாகும். இதனல் பூதம், பொறிகள், பிராணன் முதலிய எல்லாப் பொருளும் உண்டாகுமென்பது இனிது புலனும்.

அவதாரிகை

நெருப்பு முதலிய பூதங்கள் உண்டாகின்றனவென்ற இடத்தில் பிராணன் முதலிய இந்திரியங்கள் உண்டானதாகச் சொல்லவில்லையே யென்பாயாகில் பதில் சூத்திரம் வருமாறு.

## ஸூ. தத்பூர்வகத் வாத்வாச: 4

தத்பூர்வகத்வாத், வாச வென்று பிரிக்கவும்.

ப.உ. வாச : = அன்னம், தண்ணீர், நெருப்பு இவை மூன்று முத்பத்தியாயின என்று மொழிந்திருக்கிறதே. அங்கு பிராணன் முதலிய பொறிகளை யுண்டாயிருப்பதாகக் கூறவில்லையே யென்பது எதிரியின் வழக்கு வாதி - அவ்வாறு இருந்தாலும் வாக், பிராணன் மனம் இவையெல்லாம் பிரஹ்மத்திலிருந்துண்டான நெருப்பு, நீர், நிலம் இவைகளை முன்னே மொழிந்ததால், இவைகளுக்குச் சமான மான இந்திரியங்களும் பிரஹ்மத்திலிருந்து உண்டாயின என்பது உறுதியாகின்றது. மேலும் சுருதி - 'அந்நமயம்ஹி சோம்ய' என்னும் வாக்கியத்தால் அன்னத்தின் கடைக்கூறு மனமென்றும் நீரின் கடைக் கூறு பிராணனென்றும், நெருப்பின் கடைக்கூறு வாக்கென்பதாலும் பூத உற்பத்திப் பிரகரணத்திலும் மொழிந்திருக்கிறதென்பதுத்தெளிவு காரணத்திற்குத் தோற்றங் கூறியிருக்கும்போது காரியத்திற்குத் தோற்றஞ் சொல்லாமலே விளங்கும் என்பதுக் குறிப்பு.

மனம் அன்னமயம், பிராணன், ஜலமயம், வாக்தேஜோ மயம். இவைகளில் அன்னமயத்வம் முக்கியமானால் எல்லாம் பிரஹ்மத்தின் விகாரம் என்பதுத் தெளிவாகின்றன. ஆனால் அதில் அன்னமயத்வம் கௌணமானாலும் பிரஹ்மகாரணம் என்னும் பெயர், உருவங்களை வெளிப்படுத்தும் தன்மையில் கேள்வியுற்றதால் ''ஏனசுருதம் சுருதம் பவதி'' எதனால் கேளாததும் கேட்டதாகின்றதோ இம் மாதிரி ஆரம்பமானதாலும், ''ஐததாத்ம்யம் இதம்சர்வம்'' எல்லாம் ஆன்ம சொரூபமேயென்று முடிவடைவதாலும், அன்ய சுருதிகளிலும் இவ்வாறு கூறியிருப்பதாலும் மன ஆதிகாரியத்தில் அன்னமயத்வ (வசனம்) சொல் பிரஹ்ம காரியத்வ விரிவுக்காக என்றுக் கொள்ளப்படுகிறது. இங்கு இவ்வாறு விளங்குகிறது. இதனால் பிராணன் பொறி முதலியவை பிரஹ்மத்தின் காரியமென்பது இனிது புலனும்.

## சப்தகத்யதிகரணம்.

உண்டாகின்றன என்று சொன்ன சுருதியின் விரோதம் விலக்கப் பெற்றது. பிராணனின் தொகை விஷயத்தில் எழும் விரோதத்தை இவண் விலக்குவதற்கு சூத்திரம் வருமாறு :- இவண்-இங்கு.

அவதாரிகை

## ஸூ. சப்தகதேர் விஸேஷிதத் வாச்ச 5

சப்த, கதேர், விசேஷிதத்வாத், ச. என்று பிரிக்கவும்.

ப.உ. சப்த = ஏழு. இந்திரியங்கள் ஏழு. கதே: = (சுருதியில்) இந்திரியங்கள் ஏழென்று இயம்பப் பெற்றிருக்கிறது—இயம்புதல்—சொல்லுதல். ச=மேலும் விசேஷிதத்வாத் = ''சப்தவை சீர்ஷ்ண்யா: பிராணா'' என்று விசேடித்து மொழியப்பட்டிருக்கிறது.

வி.உ. பிராணனுடையத் தோற்றத்தின் விஷயத்தில் வந்த விரோதங்கள் இதுவரை பரிகாரஞ் செய்யப்பட்டன. இவண் பிராணனுடைய தொகை விஷயமாக வரும் சங்கை விலக்கப்படுகிறது. அதில் முக்கிய பிராண விஷயமாக வரும் விஷயங்கள் பின்னர் மொழியப்படும். இப்பொழுது இந்திரியங்கள் விஷயமாக வரும் விரோதங்கள் பரிசீலிக்கப்படும். ''சப்த பிராணா: பிரபவந்தி தஸ்மாத்'' மு.உ. 2.1.8: தஸ்மாத் = அந்த ஆத்மாவிலிருந்து சப்தபிராணா: பிரபவந்தி = ஏழு பிராணங்கள் உண்டாகின்றன என்பது சுருதிப் பொருள். இம்மாதிரி ஏழு பிராணங்களுண்டாகின்றனவென்றும் ',அஷ்டகிரஹா''; வென்றும், எட்டு அதிகிரஹா: வென்றும், சில இடங்களில் ஏழு வென்றும், சில இடங்களில் எட்டு வென்றும், சில இடங்களில் ஒன்பதுவென்றும் உரைக்கப் பெற்றிருக்கிறது. ஆங்காங்கு பல்வேறு விதமாக மொழிந்திருக்கிறதே. இதையெல்லாம் எண்ணி நோக்கும்போது ஒன்றுக்கொன்று ஒவ்வாமல் இருக்கிறது. வாதி—உனது நிலையென்னை ? எனதெண்ணமாவது பிராணன் ஏழு என்பது எதிரியின் வழக்கு.

வாதி - ஏதனாலோ வெனின் ? எதிரி - ''சப்தவை சீர்ஷ்ண்யா:'' = தலையிலிருக்கும் பிராணங்கள் ஏழு எனத் தெரிகிறது. இச்சுருதியில் இதுதான் விசேஷம். ஆனால் ''பிராணு குஹாஸயா

நிஹிதா: சப்த சப்த'' என்று மறையில் மலர்ந்திருக்கிறது. உள்ளத்திலிருக்கின்ற பிராணன் ஏழு ஏழு வென்று இருமுறையுரைத்திருக்கிறது. இதனால் பதினாலு ஆகிறதேயென்பது வாதியின் வாதம். எதிரி - இதனால் ஒரு தோஷமுமன்று. எதனாலோ வெனின்? இங்கு வீப்சா இருமுறை ஒவ்வொரு மனிதனிடத்தில் எவ்வேழு பிராணனிருக்கின்றன என்பது பொருள். உண்மையாக பிராணன் ஏழு ஏழு என்பதன்று. சில இடங்களில் எட்டு என்றுங் கூறப்பட்டிருக்கிறதே என்பது வாதியின் வழக்கு. பல எண்களாகச் சுருதிகள் பகர்கின்றன, அவைகளில் குறைந்த எண் ஏழாகத்தான் தெரிகிறது. ஆகையால் ஏழு என்னும் எண் குறைந்திருப்பதால் அதைத்தான் கொள்ள வேண்டுமென்பது எதிரியின் வழக்கு. இதை விலக்கும் பொருட்டு சூத்திரம் வருமாறு.

## சூ. ஹஸ்தாதயஸ்து ஸ்திதே அதோ நைவம் 6

ப.உ.து = எதிரியின் வழக்கை யிடிக்கும் பொருட்டு. ஹஸ்தாதய: = கை முதலியவைகளைச் சேர்த்து அதிகபிராணனை மொழிந்திருக்கிறது. ஸ்திதே = இந்நிலையில் ஏழைப் பார்க்கிலும் அதிகபிராணனை மொழிந்திருப்பதால் ஏழுஎன்பது முறையன்று.

வி.உ. ''ஹஸ்தோவை கிரஹ:'' கையை கிரஹம் என்று மொழியப் பட்டிருக்கிறது. கர்மங்களைச் செய்வதால் கை கிரஹமெனப்படும். என்பது சுருதியின் வாக்கு. இதன் மூலமாக ஏழு என்னும் தொகையைப் பார்க்கிலும் அதிகமாகக் காணப்படுகிறது. குறைந்த தொகையையும் நிறைந்த தொகையையும் சீர்தூக்கிப் பார்த்தால் நிறைந்ததைக் கைக்கொண்டுக் குறைந்ததை விட்டுவிட வேண்டும் என்பது நியாயம். நாழியில் உழக்கு அடங்கும் உழக்கில் நாழியடங்காது. கிணற்று நீரைக்கடல் கொள்ளும், கடல் நீரைக் கிணறு கொள்ளாது, என்னும் நியாயம்போல ஐம்பதுக்குள் பத்து அடங்கும், பத்துக்குள் ஐம்பது அடங்காது. இம்முறையால் குறைந்த தொகையைவிட்டு நிறைந்த தொகையைக் கையாளவேண்டு மென்பது கருத்து.

அங்ஙனமாயின் பல எண்கள் மறைகளில் காணப்படுவதால் எந்த எண்ணை நிறைந்ததென்று எண்ணுவது என்பது எதிரியின்

வழக்கு. பதினொன்று என்றுக் கொள்ளவேண்டு மென்பது வாதியின் மதம். ஏனெனின்? எந்த வியவகாரஞ் செய்தாலும் பதினொரு கருவிகளைக் கொண்டுதான் செய்யவேண்டியிருக்கிறது. ஆகையால் பதினொன்றைக் கொள்வது சாலப் பொருத்தம். ஏற்றிக் கிடக்குமேழு கோடி மந்திரமென்ன கண்டாய், ஆற்றிற் கிடந்தும் துறைதெரியாமல் அலைகின்றாயே. என்பது அடிகள் வாக்கு, மறைகளில்எழு—(தொகை). கோடி மந்திரம், என்ன கண்டாய். ஒன்றும் காணவில்லையென்பது பொருள். அவைகளை ஆராய்வது ஆற்றில் கிடந்தும் துறை தெரியாமல் கரையேறவழி தெரியாமல் திரிவதுபோல, மறைகளில் பல்வேறிடங்களில் பல்வேறு விதமாக தொகைகள் குறிப்பிடுகின்றன, அவைகளில் எதையெதைக் கொள்வது எதையெதை விடுவிப்பது? நிற்க, பதினொன்று என்னுந் தொகை எவ்விதத்திலுஞ் சிறந்தது என்பது மிக பொருத்தம் என்பதுவாதி (வேதாந்தி)யின் கருத்து. எதிரியின் ஏழு - இரண்டு செவிகள், இருகண்கள், இரு நாசிகை, வாக்குஒன்று வாதியின். பதினொன்று - பொறிகள்(10) மனமொன்று. இந்தஜீவன் இவ்வுடலை விட்டு வெளி யேறும்போது முக்கிய பிராணன் வெளியேறுகிறான். அவன் வெளியேறும்போது ஏனைய பொறிகளும் வெளியேறுகின்றன. என்று ஆம்னயம் அறைகின்றது. ஆம்னயம் - வேதம். அறைவது - சொல்வது. இதனாலும் பதினோரு பிராணங்கள் என்பதுத் தெளிவு.

## பிராணன் அணுத்வ அதிகரணம்.[4]

### அவதாரிகை

இவண் பிராணங்கள் அணுத்வம் உடையவை. இவண் — இங்கு. அணுத்வம்—நுண்ணியவை. பரமாணு அன்று. சூக்குமம் என்பதை விளக்கும் பொருட்டு சூத்திரம் வருமாறு—

## சூ. அணவஸ்ச 7

ப.உ. ச=மேலும். பிராணன்-இந்திரியங்கள். அணு=சூக்குமம். ஏனெனின்? அவைகள் பொறிகளுக்குப் புலனாக மாட்டா. அக்ராஹ்யம் —பொறிகளுக்கு அவைகளைப் பற்றிக் கொள்ளுந் தன்மை யின்மையால்.

வி.உ. இப்பொழுது சூத்ரக்காரர் பிராணனையும் இந்திரியங்களையும் இணைத்துக் கூறுகின்றார். இவண்கூறிய பிராணங்களையணுவென்றுக் கொள்ளவேண்டும். இந்த பிராணங்களுக்கு அணுத்வம்—

சூக்குமம். பரிச்சின்னமும் உண்டாகும். இங்குஅணு என்பதுபரமாணு வென்று மயங்கலாகாது. அங்ஙனம் ஒப்புக் கொள்ளும் பக்ஷத்தில் தேகவியாபி காரியங்கள் நிகழமாட்டா. இப்பிராணன் தூலமாக இருக்குமானல் இது உடலைவிட்டு வெளியேறும்போது எல்லோருக்கும் புலனகும். அங்ஙனம் ஆகாமையால் தூலமன்றென்பதுத் தெளிவு. மேலும் இப்பிராணன் பரிச்சின்னம் - அளவுக்குள்பட்டது. இது எங்கும் நிறைந்திருக்குமானல் உத்கிராந்தி - வெளியேறுவது, கதி— செல்வது, ஆகதி - திரும்பிவருவது என்று மொழிந்த மறைகள் சீற்றங் கொள்ளும். சீற்றம் - கோபம், அஃது அல்லாமலும் அந்தக் கரணம் ஜீவனுக்குக் குணம்என்பது சித்திக்க மாட்டாது.

அந்தக் கரணமாயிருந்தாலும் சரி எந்தக் கரணமாயிருந்தாலும் சரி கரணங்களுக்கு வியாபகத்வம் இல்லை. எது இன்பதுன் பங்களை நுகர்வதற்கு சாதனமோ அது வேதாந்த மதத்தில் கரண மெனப்படும். கரணம் அளவுக்குள்ப்பட்டதால் பரிச்சின்னம். பரிச்சின்னம், அளவு, ஏகதேசம், குறைந்த பொருள் என்பன வெல்லாம் ஒரு பொருளைக் குறிக்கும் பல சொற்கள். இதனல் பிராண முதலிய இந்திரியங்கள் அனைத்தும் நுண்ணியதும் குறைந்தது மென்பது கருத்து.

## பிராணஸ்ரேஷ்டாதிகரணம் [4]

### அவதாரிகை

இங்கு முக்கிய பிராணனும் பொறிகளைப் போல பிரஹ்மத்தின் விகாரமென்று கூறுவதற்காக சூத்திரம் வருமாறு.

## ஸூ. ஶ்ரேஷ்டஶ்ச 8

ப.உ. முக்கிய பிராண: = முக்கிய பிராணனும். ச = இந் திரியங்களைப் போல பிரஹ்மத்திலிருந்து உண்டாகின்றது.

வி.உ. முக்கிய பிராணனும் மற்றைய பிராணங்களைப் போன்று பிரஹ்மத்தின் காரியமென்று தெரியவேண்டும். மற்றைய பிராணன் என்பது பொறிகளை. எல்லா பிராணங்களும் ஒருபடித்தாக இருக்கின்றன. ''ஏதஸ்மாத் ஜாயதே பிராணே மன: சர்வேந்திரி யாணிச'' மு.உ. ஏதஸ்மாத் = இந்த ஆன்மாவிலிருந்து, பிராணே

மன: சர்வேந்திரியாணி = பிராணனும், மன: = மனமும், இந்திரியாணி = பொறிகளும், ச என்னுஞ் சொல்லால் ஐம்பூதங்களும் ஜாயதே = உண்டாகின்றன என்பது சுருதிப் பொருள். இதனுலும் பொறிகளைப்போல பிராணங்களு முண்டாகின்றன என்பது தெளிவு.

எல்லாப்பொறிகளைப்போல இப்பிராணனும் உண்டாகின்றது என்று தெரிகிறபோது உபதேசம் எதற்காக ஏன்பது எதிரியின் வழக்கு. வாதி-மீண்டும் அதிக சங்கைகள் எழாவண்ணம் உபதேசிக்கப் படுகிறது. நாசதீய பிரஹ்ம பிரதான சூக்தத்தில் ''ந மிருத்யுராசீந் நாமிருதம்'' என்னும் மந்திரத்தில் பிரளயகாலத்தில் மரணமும் இல்லை அமிருதமுமில்லையென்பது அம் மந்திரத்தின் பொர்ருள். இரவு பகல் என்னும் நாளைக் குறிக்கும் இரு சுடர்களும் அவண் இல்லை. இருசுடர் - ஞாயிறும் திங்களும். அவண் - அங்கு. பித்திருக்களுக்கு அளிக்கும் பிண்டமும் இல்லை. பிரஹ்ம மொன்றேயிருந்தது. அதைத்தவிர மற்ருென்றும் இல்லாதிருந்தது. 'ஆனீத் - செயல்பட்டுக் கொண்டிருந்தது. இதனுல் செயல்படுவது பிராணன் தொழில் என்றும், பிராணன் படைப்புக்கு முன்னர் இருந்ததென்றும் ஐயமுண்டாகக் கூடுமென்று எண்ணியதை விலக்கும் பொருட்டு உபதேசஞ் செய்யப் பட்டதென்று அறிக.

ஆனீத் என்னும் சொல் பிராணனுடைய இருப்பை விளக்குகின்றதே யென்பது எதிரியின் வழக்கு. அஃதன்று. ஏனெனின்? 'அவாதம்' உலகம் உதிப்பதற்கு முன்னர் அவாதம் = காற்றில்லாதிருந்தது என்றும், 'அப்பிராணோஹ்யமனு:' பிராணனும் மனமும் இல்லாதிருந்தன வென்றும் மறைகள் கூறுகின்றன என்பது வாதியின் கருத்து. இதனுல் அஸேஷ விஸேஷரஹித பிரஹ்மம் ஒன்றேயிருந்ததென்பது இனிது புலனும். அஸேஷம் - மிச்சமின்மை. விஸேஷம் - விஸேஷணம், அது இன்மை அவிஸேஷம். பிராணனை 'ஜ்யேஷ்டம்'.என்று கூறியது. கருவுற்ற நாளில் இறைவன் பிராணவிருத்தியை ஏவினுன். அதனுல் அது ஜ்யேஷ்டமெனப்படும். ஸ்ரேஷ்டசப்தம் பொறிகளை நோக்க இது பெருமையுடையதென்பது கருத்து. பிராணன் உயர்ந்த தென்பது கருத்து. பொறிகள் ''நீயில்லாது போனுல் நாங்கள் வாழ மாட்டோம்,'' என்பதனுல் நன்கு புலனும். இம்முறையாகச் சிந்திக்கும் பொழுது பிராணனும் ஆன்மாவின் காரியமென்பது உறுதி.

4

## வாயுக்கிரியா அதிகரணம்.

அவதாரிகை

இவண் முக்கிய பிராணனுக்கு வடிவமென்ன என்னும் வேட்கை யைத் தணிப்பதற்காக அடுத்த சூத்திரம்.

## சூ. நவாயுக்ரியே ப்ருதக்குபதேஸாத் 9

ந – வாயுகிரியே ப்ருதக், உபதேசாத், என்று பிரிக்கவும்.

ப.உ. வாயுகிரியே = காற்றின் காரியம் பிராணன் அன்று. பொறிகளின் தொழிலுமன்று. ஆனல் தனிப்பட்டக் காற்றின் விசேஷம். எங்ஙனமெனின்? ப்ருதக் உபதேஸாத் = வேருகக் கூறப்பெற்றதால்.

வி.உ. பிராணன் வாயுவின் காரியமோ அல்லது இந்திரியத்தின் வியாபாரமோ அல்ல. எதனல் எனின்? தனித்து மொழிந்திருப்பதால். தனித்து மொழிவதாவது - ''ச வாயுனு ஜ்யோதிஷா'' வென்றும், ஏதஸ்மாத் ஜாயதே பிராணே வென்றும் விசேஷமாக உரைக்கப் பட்டிருக்கிறது. ச = பிராணன். வாயுனுஜ்யோதிஷா = வாயுரூப ஒளியால் மிளர்கின்றது. தஹிக்கின்றது என்றும், பிராணனைக் காற்றிலிருந்து வேருகச் சொல்லப்பட்டிருக்கிறது.

எதிரி - ஆரணத்தில் பிராணனை வாயுவென்றும், 'ய: பிராண சவாயு:''எது பிராணனே அது (வாயு) காற்று என்றும் செப்பியிருக்கிறது. = இதனல் பிராணனுடைய சொரூபம் யாது என்னும் ஐயம் எழுகிறது என்பது எதிரியின் வழக்கு. இஃது அல்லாமலும், பிராணன், அபானன், வியானன், உதானன், சமானன் என்றும் கூறியிருக்கிறது. சாங்கிய மதத்தில் பிராணன் ஏனைய கரணங்களுக்கு விருத்தி யென்றும் மொழியப் பட்டிருக்கிறது. ஏனெனின் ஏனையக் கருவிகள் அனைத்திற்கும் பிராணன் முதலிய ஐந்து வாயுக்களே இயக்குபவைகள் என்று அறிஞர்களும் விளம்புகின்றனர்கள். இது வரை யெதிரியின் வழக்கு. வாதி - பிராணன் வாயுவல்ல. மேலே சொன்னமாதிரி கருவிகளுக்கு நடத்துவதுமல்ல. எங்ஙனம் தெரிகிறதெனின்? ''ப்ருதக் உபதேசாத்'' பிராணன் மனேமய பிரஹ்மத்திற்கு நான்காவது பாதம் என்றும், அதுவ்வாயுரூப ஒளியால் விளங்குகின்றதென்றும், இவ்வாறு பிராணனை வாயுவிலிருந்து வேருக உரைத்திருக்கிறது. பிராணன் வாயுரூபமானல் வேறு என்று சொல்வது பொருந்தாது.

இஃமாதிரி பிராணன், இந்திரியங்களுக்கும் வேருக மொழிந் திருக்கிறது. முண்டக சுருதியில் பிராணன், மனம், இந்திரியங்கள், ஐம்பூதங்கள் இவையெல்லாம் பிரஹ்மத்திலிருந்து உண்டாயின வென்று தெரியவருகிறது. இதனுலும் பிராணன் வாயுவிலிருந்து வேறு என்பது வெளி. மேலும் ஒவ்வொரு பொறிக்கும் ஒவ்வொருவிருத்தி யுண்டாகிறது. பிஞ்சரசாலன நியாயம்போல பொருந்தும் என்பா யாகில் அது பொருந்தாது. பிஞ்சரம் - கூண்டு. பலபறவைகள் கூடி அதை அசைப்பது. அது என்பது கூண்டை. நியாயம்-முறை. இந் நியாயமும் அங்குசெல்லாது. எல்லாவிருத்திகளும் இணையாது.

பிராண வியாபாரம்வேறு, இந்திரிய வியாபாரம்வேறு. பின்னே பிராணனே மேன்மையான தென்பது எதனுலோவெனின்? காயம், பொறிகள், புலன்கள் இவைகளை எண்ணும்போது பிராணன் அதிக மகிமையுடையது. என்பது தெளிவு. அங்ஙனமாயின் 'ய: பிராண: சவாயு:'' என்னும் சுருதிக்கு நிலேயென்னே யெனின்? இவ்வாயு அத்யாத்ம நிலேயைப் பெற்று ஐந்து வடிவத்தையுற்று விரிவான முறையையுமடைந்து அது பிராணனென்று பெயரளவில் சொல்லப் படுகிறது. அதுவாயுவுமில்லே, பிராணனுமில்லே, வாயிவிக்கு வேறு மில்லே. இதனுல் பேதம் மொழியும் மறையும், அபேத மொழியும் சுருதிக்கும் முரண் உண்டாகாது. இதுமூலமாக பிராணன் வாயுவு மில்லே வாயுகிரியையுமில்லே யென்பது உறுதி.

### அவதாரிகை

இவண் பிராணனுக்கு சுதந்த்ரமுண்டா இல்லேயா வென்று விசாரிக்கப் படுகிறது. இவண்- இங்கு. சூத்ரம்.

## சூ. சக்ஷு ராதிவத்து தத் சஹ சிஷ்ட்யாதிப்ய: 10

சக்ஷு, ஆதி, வத், து, தத், சஹசிஷ்ட்யாதி வத்ப்ய: என்று பிரிக்கவும்.

ப.உ.து= என்னுஞ்சொல் எதிரியின் திமிரை நிமிர்க்கும் பொருட்டு. சக்ஷுராதிவத் = பொறிகளேப் போல பிராணன்சுவதந்த்ரன் அல்ல. தத்சஹ சிஷ்ட்யாதிப்ய: = கண் முதலிய பொறிகளோடு பிராணனேயும் இணைத்து பராதீனம் என்றும், அசேதன மென்றும் அறையப் பட்டிருக்கிறது. அறைதல் ஆணித்தரமாகக் கூறுதல்.

வி.உ. பிராண சம்வாத பிரகரணத்தில் பொறி புலன்களோடு பிராணனையும் சேர்த்து மொழிந்திருக்கிறது. பிராணனுக்கு ஜீவனைப் போல சுவதந்தரமுண்டா என்பது கேள்வி. உண்டென்பது எதிரியின் வழக்கு. இல்லையென்பது வாதியின்வாதம். வேந்தனுக்குப் பணி யாட்கள் இருந்து பணிபுரிவதுபோல ஜீவன்என்னும அரசனுக்கு சேவகர்களாக பிராணன், பொறிகள் புலன்கள் எல்லாம் பணிபுரிகின் றன. சுவதந்ரம் அரசனுக்குத்தான் உண்டு. சேவகர்களுக்குச் சுவதந்ரமில்லை. அதுபோல் ஜீவனுக்குச் சுவதந்ரமுண்டு. பிராணாதி களுக்குஇல்லை. இந்திரியங்களும் பிராணனும் ஜீவன் என்கின்ற அரச னுக்குப் பணியாளாக இருந்தால் இருவருக்கும் என்ன வேற்றுமை யென்பாயாகில் இருவருக்கும் சிறிது பெருமையுண்டு. இந்திரியங்கள் பணியாட்கள், பிராணன் அமைச்சர், ஜீவன் அரசன் இந்தவேற்றுமை இருவருக்கும் உணடு. இருவர் - இந்திரியம், பிராணன். அரசனின் அடியாள்போல. இவைகளுக்கு விடுதலையில்லை. விடுதலை - சுதந்தரம். எனவே முக்கிய பிராணனும் அரசனுடைய அமைச்சனைப்போல ஜீவனுக்கு உபகரணம் - உதவியாள். ஆகலின் பிராணனுக்கு சுதந்தர மில்லை. அமுக்கிய பிராணனுக்கு என்ன நிலையோ அந்நிலைதான் முக்கிய பிராணனுக்கும். அமுக்கிய பிராணன் - பொறிகள். முக்கிய பிராணன் - பிராணன். சஹசிஷ்டி - இருவகை பிராணங்களுக்கும் ஒரு நிலையென்று ஓதுதல் ஓதுவது - உரைப்பது.

பகவான் சூத்திரக்காரர் சூத்திரத்தில் ஆதிபதத்தால் எல்லாக் கரணங்களையும், அசேதனமாகவும் அஸ்வதந்தரமாகவும் கொள்ள வேண்டுமென்று கூறுகின்றார். பிராணன் போக்தாவாக முடியாது, போகங்களுக்கு உபகரணமாக இருப்பதால். சக்ஷுராதிவத் = கண் முதலிய பொறிகளைப் போன்று என்பது அனுமானம். இதனால் பிராணனுக்கு சுதந்தரமின்மை நன்கு புலனும்.

### அவதாரிகை

ஜீவனுக்குப் பொறிகளைப்போல பிராணனும் உதவியாளன் என்றால் அதற்கும் பொறிகளுக்குப் புலன் விஷயமாயிருப்பது போல விஷயங்கள் வேண்டியிருக்கும் என்னும் ஐயத்தைஅகற்றும் பொருட்டு சூத்திரம் வருமாறு.

## சூ. அகரணத்வாச்ச ந தோஷஸ்ததாஹி தர்ஸயதி ॥

அகரணத்வாத், ச, ந, தோஷ :ததா, ஹி, தர்ஸயதி என்று பிரிக்கவும்.

ப. உ. அகரணத்வாச்ச=ஞானம் உண்டாவதற்குப் பிராணன் கரணமன்று. அதனுல் குற்றமும் அல்ல. கண் முதலிய கருவிகள் எவ்வாறு அறிவுண்டாவதற்கு கரணமோ அவ்வாறு பிராணன் அன்று என்பதால் ந தோஷ : = குற்றமில்லை. ஏனெனின்? ததா = அங்ஙனம். தர்ஸயதி = சுருதி கூறுகின்றது.

வி. உ. பிராணனையும் ஏனைய கருவிகளைப் போல ஜீவனுக்கு உதவியாளாக ஒப்புக் கொண்டால் கண் உருவத்தையும், காது ஒலியையும் விரும்புவது போல பிராணனுக்கும் யாதாவது விஷயத்தை விரும்பவேண்டிவரும். பிராணனையும் சேர்த்துக் கொண்டால் பன்னிரண்டு இந்திரியமாகும். அங்ஙனமாயின் பதினொன்று என்று முன்மொழிந்தது முரணுகும் என்பது எதிரியின் வழக்கு.

வாதி—'ததாஹி நதோஷ :' யாதொருக்குற்றமும் இல்லை. எதனுலோ வெனின்? பிராணனை கண் முதலிய கருவிகளைப் போல கரணமாகக் கூறவில்லை. ''தான் வரிஷ்ட :'' என்பது சுருதி. தான்—இந்திரியாதிகளை நோக்க வரிஷ்ட : = பிராணன் மேன்மையானதென்பது மறையின் பொருள். இதனுல் உடலையும் உரிய பொறிகளையும் தாங்கும் தன்மையுடையது பிராணன் என்பது பொருள். இந்தத் தொழில் தான் பிராணனுக்கு உண்டு. ''பிராணேனரக்ஷன் அவரம் குலாயம்.'' இழிவான இவ்வுடல் இப்பிராணனுல் காக்கப் படுகிறது என்பது சுருதிப் பொருள்.

பிராணுதி விவாதத்தில், ''உங்களுக்குள் யார் நீங்கின பிறகு இவ்வுடலானது தீண்டாதநிலைமைக்கு உண்டாகிறதோ அதை பெருமையுடைய தென்றுக் கொள்ளவும்,'' என்று பிரஹ்மதேவன் மொழிந்தான். ''தான் - வரிஷ்ட : பிராண உவாச்ச'' தான் = பொறிகளைப் பார்த்து, வரிஷ்ட : பிராண உவாச = மேலான பிராணன், ஏ பொறிகளே! நீங்கள் வீணுக மயங்க வேண்டாம், ஏனெனின்? நான் என்னை ஐந்து கூருக ஆக்கிக் கொண்டு காரிய கரணவடிவ உடலை தாங்குகின்றேன்,'' என்று கூறியது. இவ்வுடலிலிருந்து எது வெளியேறின பிறகு நான் வெளியேறுவேனே எது நிலை பெற்ற பிறகு நிலைபெறுவேனே என்று விசாரித்து பிரஜாபதி பிராணனைப்

படைத்தாரென்று ஆரணமொழிகின்றது. இதன் மூலமாக ஜீவன் தன்னுடைய நிலே பிராணனுடைய நிலேயென்று கூறிபிராணனுக்கு அதிக மகத்வம் கொடுக்கின்றது. இதனல் உடல் உறுப்புக்கள் இவைகளேத் தாங்கும் தன்மை பிராணனுக்கு உண்டு, ஆனல் உணர் வைத் தோற்றுவிக்குந் தன்மை இல்லேயென்பது உறுதி.

**அவதாரிகை**

முக்கிய பிராணனுக்கு என்ன விசேஷகாரிய மிருக்கிறதென்பா யாகில் சூத்திரம் வருமாறு -

## சூ. பஞ்ச விருத்திர் மனேவத்வ்யபதிஸ்யதே 12

பஞ்சவிருத்தி:, மனேவத். வ்யபதிஸ்யதே யென்றுபிரிக்கவும்.

ப.உ. பஞ்சவிருத்தி: = (பிராணனுக்கு) ஐந்து தொழில்கள். மனேவத் = மனத்தைப்போல. வியப்திஸ்யதே கூறப்படுகிறது.

வி.உ. இந்தகாரணத்தினலேயும் பிராணனுக்கு விசேஷகாரியங் களுண்டு. வினேயின்பயனுக அதற்கு ஐந்து நாமங்கள் - பிராணன், அபானன், வியானன், உதானன், சமானன். வியபதேசம் - சொல் லுதல். ''பிராணே அபான வியான உதானசமான,'' பிரு. உ. என்று சுருதி உரைக்கின்றது. பொருள்வெளி. இதனுல் ஐந்து விருத்திகளேயுடைது பிராணன் என்றுதெரிகிறது. பிராணன் - நாசியின் வழியாக உள்ளும் வெளியிலும் உலாவிக் கொண்டிருக்கும்வாயு. அபானன்-கீழே மலமூத்திரத்தை வெளியில்தள்ளும்வாயு. வியானன்- மேற்கூறிய இரண்டிற்கும் இடையில் இருந்துகொண்டு வலிமையுள்ள வினேகளேச் செய்யும்காற்று. உதானன் - மேலேநோக்கிச் செல்லும் விருத்தி, வெளியிலும் உள்ளிலும் செல்லுந்தன்மைக்கு ஏது - காரணம். சமானன் - எல்லா அங்கங்களில் அன்னரசங்களேக் கொண்டுசெல்வது. தொழில் வேற்றுமையால் பெயர் வேற்றுமை யென்பதுபொருள். வேற்றுமை - வேறு. வேருந்தன்மை.

எவ்வாறு மனதிற்கு ஐந்துவிருத்திகளோ அதுபோல பிராண னுக்கும் ஐந்து விருத்திகளாம். விருத்தி - தொழில். இந்திரியாதி மூலமாக எழுகின்ற சுவையொளி முதலியபுலன்கள் மனதின் ஐந்து விருத்திகளாம். காமசங்கற்ப முதலிய விருத்திகள் இவண் தள்ளற்

பாலன. இவண்-இங்கு. எதனுலோவெனின்? தொகையதிகமாயிருப்பதால் எனஅறிக. இதற்கு இணைந்த ஏனையவிருத்திகளையுங் கொள்ளலாம். பிரமாணம் - பிரமிதிகரணம். விபர்யயம் - மயக்கம். விகல்பம் - மலடிமைந்தனென்னும் உணர்வு. நித்திரை -உறக்கம். ஸ்மிருதி - உணர்வு, இவைஐந்தும் யோகநூலில் உரைக்கப் பெற்றிருக்கின்றன. பிராணன் ஜீவனுக்கு உதவியாளன், ஐந்துவிருத்தியுடையவனுதலால், மனதைப்போல என்று அநுமானமும் செய்யலாம். இதனுல் பிராணனுக்கு சுதந்தரமில்லை யென்பது கருத்து.

## ஸ்ரேஷ்ட்டாணுத்வ அதிகரணம்.[4]

### அவதாரிகை

இப்பிராணனை அணுவென்று அறியவேண்டும் என்பதற்கு சூத்திரம் வருமாறு -

## ஸூ. அணுஸ்ச்ச 13

ப.உ. அணுஸ்ச=முக்கிய பிராணன் அணு - சூக்ஷுமம், பரிச்சின்னம்.

வி.உ. ''அணுஸ்ச முக்ய்பிரான:'' என்பது சங்கரபரஷ்யம். பொறி புலன்களைப்போல இப்பிராணனும் அணுவாகவும், அதிசூக்குமமாகவும் இருக்கிறதென்று தெரியவும். ஆனுல்நையாயிகர்கள் கூறும் பரமாணு அன்று. பிராணன் நுண்ணியமானது. ஏனெனின்? இப்பிராணன் ஐந்து விருத்திகளால் உடல்முழுதும் நிறைந்து உடலை விட்டுவெளியேறும் பொழுது அருகில் இருக்கும் அனைவர்களுக்கும் தெரியாமல் செல்கின்றது. இஃதன்றியும் அளவுக்குள் உள்பட்டதாயும், சென்று மீளுகின்றது. ''சம: ப்லுஷிணு சமோமஸகேன சமோநாகேன சமஏபி : திரிபி : லோகை : சமோஅநேன சர்வேண'' பிரு.உ.சம : ப்லுஷிணு=ப்லுஷி நுணுக்கமான உயிர், அதற்குச் சமானமாகவும், சமோமஸகேன =கொசுக்குச் சமானமாகவும், நாகேன சம:யானைக்குச் சமானமாகவும், ஏபி: திரிபி: லோகேனசம: இம்மூன்று உலகங்களுக்கு நிகராகவும், எல்லாவற்றிருக்கும் ஒப்பாகவும் என்பது மறையின் பொருள்.

இந்த சுருதிவாக்கியத்தால் அணுவாகவும். மஹத்தாகவும் மொழியப்பட்டிருக்கிறதே, அங்ஙனம் இருக்க சூக்குமம் என்று

எவ்வாறுக் கொள்ள முடியும் என்பது எதிரியின் வழக்கு. அணுத்வம். மஹத்வம் இவையிரண்டும் சிறியது (வியஷ்டி) பெரியது (சமஷ்டி) பேதத்தால் வந்தவை. உண்மையில்லை. அதி தெய்வ ஹிரண்யகர்ப்ப ரூபபிராணனுக்கு விபுத்வம் மறையில் கூறப்பெற்றிருக்கிறது. அத்தியாத்ம ரூபபிராணனுக்கு அணுத்வமல்லாமல் மஹத்வமில்லை. இம் முறையில் பிராணன் சூக்குமமென்றும் பரிச்சின்னம் என்றும் சுருதியில் உரைத்திருக்கிறது. பரிச்சின்னம் – அளவு. இதனால் பிராணன் அணு என்பது இனிது புலனும்.

## ஜ்யோதிராதி அதிகரணம்

### அவதாரிகை

இவண் எல்லாப் பிராணங்களும் தம்முடைய வலிமையால் தங்கள் காரியங்களில் செயல்படுகின்றனவா அல்லது தெய்வத்தைப் பற்றி செயல்படுகின்றனவா என்று விசாரிக்கப்படுகின்றது. இவண்- இங்கு. சூத்திரம் வருமாறு-

## சூ. ஜ்யோதி ராதி அதிஷ்ட்டானம் து தத்ஆமனநாத் 14

ஜ்யோதி; ஆதி, அதிஷ்ட்டானம், து, தத், ஆமன நாத் என்று பிரிக்கவும்.

ப.உ. து என்னுஞ் சொல் எதிரியின் இருமலுக்கு இனிய மருந்து. ஜ்யோதி ஆதி அதிஷ்ட்டானம் = மெய், வாய், கண், மூக்கு, செவி முதலிய பொறிகள். சூரியன், திக்தேவதை, அஸ்வினி குமாரர்கள் முதலிய தேவதை தங்கள் வினைகளை வழுவற நடத்தி வருகின்றன. எங்ஙனம் எனின்? தத் ஆமனநாத் = அவ்வாறு ஆரணங்களில் அறையப் பெற்றிருக்கின்றன. அறைதல்-அன்புடன் மொழிதல்.

வி.உ. இப்பிராணங்கள் எல்லாம் தமது வலிமையால் செயல் படுகின்றனவா அல்லது இறையருளால் செயல்படுகின்றனவா? இதைப் பற்றியிங்கு விசாரிக்கப்படுகிறது. பிராணங்கள் எல்லாம் தங்கள் வலிமையால் செயல் படவேண்டும், ஏனெனின்? தேவதைகளைப்பற்றி செயல்படுமானால் ஜீவன் அனுபவிக்கும் போகங்கள் அந்த அந்த

தேவதைகளைப்பற்றும். ஜீவனுக்குப் பொருந்தாமல் போகும். ஆகையால் பிராணங்கள் அஃது அஃது வலிமைகளால் செயல்படு கின்றன என்பதுதான் முறையென்பது எதிரியின்வாதம்.

வாதி-அது பொருந்தாது, ஏனெனின்? ததாமனநாத் சுருதிகளே அவ்வாறு கூறவில்லை வேதம் என்ன மொழிகின்றது? ''ஜ்யோதி ராதி அதிஷ்ட்டானம்'' என்னும் மறையின் வாக்கியத்தால் எதிரியின் வாதம் இடித்துத்தகிர்க்கப்படுகிறது. பிராணன் பொறிகள், மற்று முள்ள கருவிகள் எல்லாம் தங்களுடைய அதி தெய்வங்களைப்பற்றி அதனுடைய முந்நிலையில் தங்கள் வினைகளைச் செய்கின்றன. அக்கினித் தேவதையைப்பற்றி வாக்கும், சூரியனைப்பற்றி கண்ணும். திக்கு தேவதையைப்பற்றி காதும் இன்ன இன்ன மாதிரி மற்றுமுள்ள கருவிகளும் தொழிலைச் செய்கின்றன. ததாமனநாத் என்னும் ஏது வாக்கியத்தை விரித்துரைக்கின்றார்-

ததாமனநாத்தென்பது ஏதுவாக்கியம்.'' அக்னிர்வாக் பூத்வா முகம் பிராவிஸத்'' அக்னியென்னும் தேவதை வாக்கு வடிவமாகி முகத்தில் நுழைந்தது என்பது மறையின் பொருள்.'' வாயு: பிராணோ பூத்வா நாசிகே பிராவிசத்'' வாயுவென்னும் தேவதை பிராண வடிவமாக நாசியில் நுழைந்தது என்பது சுருதிப்பொருள். நாசி-மூக்கு. இம்முறையில் இவையெல்லாம் எண்ணிப்பார்க்கும் பொழுது கருவி கரணங்கள் இயல்பாகச்செயல்பட முடியாதென்றும், அக்னி, காற்று; சூரியன் முதலிய தேவதையின் உதவியைப் பெற்றுத்தங்கள் வினைகளில் இயங்குகின்றன என்பதுத்தெளிவு. இவண் ஜோதிராதி யென்பது தேவதைகளைக் குறிக்கின்றன. ஞானவடிவினர் ஆதலால்.

தூல உடல் அதிபூதம். சூக்கும உடல் அத்யாத்மம். காரண உடல் அவித்தை. சூரிய சந்திரன் முதலியவர் அதி தெய்வம். மேலும் வாக்,-அத்யாத்மம், பேசுவது அத்யாத்மம், அதிலிருக்கும் நெருப்பு அதிதெய்வம் என்று உணரவும். தேர்முதலியவையெவ்வளவு வலிமையுடையதாக இருப்பினும் குதிரை, மாடு முதலியவைகளைப் பெற்று ஊர்ந்து செல்கின்றன. அதுபோல் பிராணங்கள் எவ்வளவு வலிமையுடையவைகளாயிருந்தாலும் தெய்வ உதவியன்றி நிகழாது என்பது கருத்து.

**அவதாரிகை**

தேவதையைப்பற்றி பிராணங்கள் செயல்படுமென்றால் இன்ப துன்பம்ஜீவனைப்பற்றாமல் தெய்வத்தைப்பற்றும் என்பதற்குப்பரிகாரம். சூத்திரம் வருமாறு-:

## சூ. ப்ராணவதா ஸப்தாத் 15

பிராணவதா, சப்நாத் என்று பிரிக்கவும்.

ப. உ. பிராணவதா பிராணனோடுகூடிய ஜீவனோடு இந்திரியங்களுக்கு சுவாமி சேவகசம்பந்தமுண்டு. ஆகலின் ஜீவன் நுகர்பவன் எனப்படுவான். எங்ஙனமெனின்? சப்தாத் = ஆம்னாயமூலமாக அறியப்படுகிறது. ஆம்னாயம் - வேதம்.

வி. உ. தெய்வங்களுக்கு இன்பதுன்பம் நுகருந்தன்மை உண்டாகும், ஜீவனுக்கு உண்டாகாது என்று எதிரி யுரைத்தான். அதற்குப் பரிகாரம் - பரிகாரம் - விலக்கு.

வாதி - பிராணங்கள் தெய்வங்களோடு பற்று வைத்தபோதிலும் அதிகமாக ஜீவனுக்கு கருவிகரணங்களோடு தொடர்பு இருப்பதாக ஆரணங் கூறுகின்றது. ஆரணம் வேதம். ''அத யத்ரைதத் ஆகாசம் அநுவிஷண்ணம் சக்ஷு: ஸ சாக்ஷுஷ: புருஷோ தர்ஸனாய சக்ஷு: அதயோ வேதேதம் ஜிக்ராணீதி ஸ ஆத்மா க ந் த ா ய கிராணம்'' அதயத்ர = எவ்விடத்தில் ஏதத் சக்ஷு: = இந்தக் கண் கருமுழியோடு, ஆகாசம் அநுகதம் - கலந்திருக்கும் சக்ஷுஷ: புருஷ: = அவன் கண்ணிலிருக்கும் புருஷ: புருடன் தர்ஸனாய சக்ஷு: பார்வைக்காகக் கண் அத = பிறகு யோவேதேதம் ஜிக்ராணீதி = எவன் ஒருவன் நான் முகருகிறேன் என்று அறிகிறானோ, ஸ ஆத்மா அவன் ஆத்மா எனப்படுவன். கந்தாய கிராணம் = முகர்வதற்க்காக மூக்கு. இம்மாதிரி வேதங்கள் கரணங்களை ஆருயிர்-ஜீவன் பிராணாதிகள் தேவதையைப் பற்றுமானால் அந்தத் தேவதைகளுக்கு போக்திருத்வம் பொருந்துமென்ற சங்கை பொருந்தாது. எதனாலோவெனின்? அக்த்துக்குள் அனந்த தேவதைகள் இருக்கின்றன, ஆகையால் இன்பத் துன்பங்கள் தெய்வங்களைப் பற்றமாட்டா. மேலும் ஜீவன் ஒருவனே எல்லாக் கருவிகளோடும் சம்பந்தம் வைத்திருப்பதால் இன்பத் துன்பங்கள் அவனையேசாரும். அகம்-உள்ளே. அவனையென்பது ஜீவனை. இதனால் தெய்வங்களைப்பற்றி கருவிகள் வியவகாரம் பண்ணினாலும் போகங்கள் தெய்வங்களைப் பற்றமாட்டா என்பது கருத்து.

அவதாரிகை

உரைத்த பொருளை மீண்டும் உறுதி செய்யும் பொருட்டு சூத்திரம் வருமாறு;-

## ஸூ. தஸ்யச நித்யத்வாத் 16

தஸ்ய, ச, நித்யத்வாத் என்று பிரிக்கவும்.

ப. உ. ச மேலும் தஸ்ய = ஜீவனுடைய உடலில் கர்த்ருத்வ போக்திருத்வம் நித்யத்வாத் = என்றுமுள்ளதால் தேவதைகளுக்கு நுகருந்தன்மை பொருந்தாது.

வி. உ. இவ்வுடலில் ஜீவன் எப்போதும் போக்தாவாக இருக்கிறான். இவனுக்கு நல்வினை தீவினைகளோடு என்றும் தொடர்பு இருக்கிறது. எனவே இன்பத் துன்பங்களும் இவனுக்கேயுண்டு. இவன் - ஜீவன். புண்ணிய பாவங்கள் தேவதையைப் பொருந்தாது. ஆகையால் சுக துக்கமும் அதைப் பற்றமாட்டாது. தேவதை மேலான நிலையை அடைந்திருக்கிறது. ஆகலின் இந்த இழிவான உடலில் உள்ள இன்பத் துன்பத்தை நுகரும் யோக்யதை அதற்கு இல்லை. அது - தேவதை. ''புண்யமேவஅமும் கச்சதி ந ஹ வைதேவான் பாபம் கச்சதி'' அமும் - இந்த தேவான் - தேவதைகளை ந பாபம் கச்சதி- பாவங்கள் பற்றமாட்டா. புண்யமேவ கச்சதி = புண்ணியந்தான் பொருந்தும் என்பது சுருதியின் பொருள்-

பிரஜாபதி நிலையைப் பெற்றவர்களுக்கு புண்ணியந்தான் உண்டாகும். பாவமுண்டாக மாட்டாதென்பது கருத்து. ஜீவனோடு பிராணனுக்கு நித்யசம்பந்தம் என்றும் தொடர்பு. ஏனெனின்? ஜீவன் வெளியேறிய உடனே பொறிகளும் வெளியேறுகின்றன என்று ஆரணங் கூறுகின்றது. ஆரணம்-வேதம். இதுமூலமாகவும் இவனுக்கும் இவைகளுக்குமுள்ள சம்பந்தம் என்றும் உள்ளது என்பது தெளிவு. கரணங்களை இயக்கும் பொருட்டே தேவதைகள், நுகரும் பொருட்டன்று. ஆகையால் தேவதைகளுக்கு இன்பதுன்பம் இல்லையென்பதுக் குறிப்பு.

## 4
## இந்திரியாதிகரணம்

அவதாரிகை

முக்கிய பிராணன் ஒன்று, வேறு பதினொரு பிராணங்கள் பின்னணியில் இருப்பவை. அந்த பதினொரு பிராணங்களைப்பற்றி இவண் விசாரிக்கப்படுகிறது. சூத்திரம் வருமாறு.

# ஸூ. த இந்திரியாணி தத்வ்யபதேஸாத் அன்யத்ர ஸ்ரேஷ்ட்டாத் 17

தே, இந்திரியாணி, தத்வ்யபதேஸாத், அன்யத்ர, ஸ்ரேஷ்ட் டாத் என்று பிரிக்கவும்.

ப.உ. ஸ்ரேஷ்ட்டாத் = முக்கிய பிராணனில் இருந்து. அன்யத்ர = வேறு வாக்கு முதலிய பொறிகள் இந்திரியமென்னும் சொல்லால் மொழியப்படுகின்றன. எவ்வாறெனின்? தத்வ்யபதேசாத் = கூறப்படுவதால்.

வி.உ. வேறுவிதமான ஐயம் எழுப்பப்படுகிறது - வாக்கு முதலிய பொறிகள் முக்கிய பிராணனுடைய விருத்தி பேதமா அல்லது வேறுபொருள்களா? என்று எதிரியின்கேள்வி. வாதி-உனக்கு எங்ஙனந் தெரிகிறது? எதிரி - பொறிகளனைத்தும் பிராணனின் விருத்தியின் பேதமேயாம். எதனுலோவெனின்? மறைமொழியால் தெரிகிறது. ''ஹந்த அஸ்யைவ சர்வே ரூபமசாமேதி த ஏதஸ்யைவ சர்வே ரூபம பவன்'' (1-5-21) பிரு.உ. ஹந்த = நல்லது. அஸ்ய = இந்த பிராண னுக்கு. (நாம் எல்லோரும் சர்வே) அசாம்ஏதி = வயமாகிவிடுவோம். ஏதஸ்ய இந்தபிராணனுடைய சர்வே ரூபம் வடிவம் = எல்லா உருவமும் அபவன் = ஆகிவிட்டன என்பது சுருதிப்பொருள். ஏவ = உறுதி. சர்வே என்னும் சொல்லால் வாக்கு முதலிய பிராணங்களைக் கொள்ளவேண்டும். இச்சுருதிவாக்கியம் அன்ய பிராணங்கள் முக்கிய பிராணனின் விகாரமென்று விளக்குகின்றது.

வாதி - வாக்கு முதலிய அன்னிய பிராணங்கள் முக்கிய பிராண னுக்குவேறு. எங்ஙனமெனின்? வியபதேஸாத் - ஆரணவாக்கியத்தால் அறியப்படும். ஸ்ரேஷ்ட்டாத் அந்யத்ர = மேன்மை பொருந்திய பிராணனிலிருந்து பொறிகள் வேறு. பதினேரு இந்திரியங்களும் பிராணனுக்குவேறு. ஆரணம் - ''ஏதஸ்மாத் ஜாயதே பிராணோமன: சர்வேந்திரியாணிச'' இம்மறை மொழியால் மனமுதலிய எல்லா இந்திரியங்களும் பிராணனுக்கு வேறென்பது தெளிவாகின்றது. மனதை இந்திரியங்களோடு சேர்த்து பதினென்று என்றுக் கூறுவது பொருந்தும். ஆனல் பிராணனை இந்திரியங்களோடு சேர்த்து பதி னென்று என்பது பொருந்தாது. இதனுலும் பிராணனுக்கு இந்திரி யங்கள் வேறென்பது தெற்றெனத் தெளிவாம்.

அவதாரிகை

பிராணனுக்குப் பொறிகள் வேறு எவ்வாறு என்பாயாகில்

## ஸூ. பேத்ஸ்ருதே: 18

ப.உ. ''அத ஹேமமாசன்யம் பிராணமூச்சு:'' அத = அதன் பிறகு, முகத்தில் இருக்கும் பிராணனிடத்தில் இந்திரியங்கள் ஊச்சு: நாங்கள் உன் வடிவமாவோம் என்றுகூறின என்பது மறையின்பொருள். இம்மாதிரி அசுரர்களையழிக்கும் முக்கியப் பிராணனைத் தனியாகசாற்றப் பட்டிருக்கிறது. சாற்றுதல் நன்ருகக் கூறுதல். மனம், வாக்கு, பிராணன் இவைகளைப் பிரஜாபதி தன் பொருட்டாகச் செய்தார் என்ற தாலும் பொறிகள் பிராணனுக்கு வேருன தத்துவம் என்பதுக் குறிப்பு.

அவதாரிகை

இன்னும் எவ்வாறு பொறிகள் பிராணனுக்கு வேறு என்பதற்கு சூத்திரம் வருமாறு –

## ஸூ. வைலக்ஷண்யாத் 19

ப.உ. பிராணனுக்கு வைலக்ஷண்யம்=அன்னியமாக மொழியப் பட்டிருக்கிறபடியால்.

வி.உ. உறக்கத்தில் பிராணன் நிலைப்பெற்றிருக்கிறது, இந்திரி யங்களுக்கு நிலையில்லை. இதனுலும் பிராணனிலிருந்து வாக்கு முதலிய பொறிகள் வேறு தத்துவம் என்பது தெளிவாகிறது. உறக்கநிலை மரண நிலை. இந்நிலை பிராணனைத் தழுவுவதில்லை. மற்றைய பிராணங்கள் உறக்கமென்னும் யமனுல் பிடிபட்டிருக்கின்றன. பிராணன் உடலில் இருந்தால் உடல் இருப்பதாகவும், அது இல்லையானுல் அது இல்லை யென்றும் உரைக்கப்படுகிறது. இரண்டில் முன்னது பிராண னையும் பின்னது உடலையுங்குறிக்கும். ஆனுல் இந்திரியம் இருந்தாலும் எழுந்தாலும் உடலுக்கும் உறுப்புக்களுக்கும் சம்பந்தமில்லை. இந்திரி யங்கள் விஷயஞானத்திற்குக் காரணமாக இருக்கின்றன. பிராணன் அவ்வாறன்று. இவ்வாறு பிராணனுக்கும் பொறிகளுக்கும் வெகு தூரம் அகன்ற பிளவுள்ளது. இதனுலும் பிராணன் வேறு பொறிகள் வேறு என்பது கருத்து.

நாங்கள் பிராணவடிவமாய் விட்டோம் என்னும் வாக்கியத் திற்குக் கதியென்னே ? வாதி – இவ்வாக்கியம் பொருந்தாது. ஏனெனின் ? அங்கும் முன்னும் பின்னும் விசாரிக்கும் பொழுது வேற்றுமைக் காணப்படுகிறது. எங்ஙனமெனின் ? ''வதிஷ்யாமி ஏவ அஹமிதி'' வாக்கு – நான் பேசிக்கொண்டே யிருப்பேன் என்று சூளுரையுரைத்தது. இதனால் இவைகளை யமன் வளைந்து கொண்டது என்பது வேத வாக்கு. ஆனால் முக்கிய பிராணன் யமனால் பிடிபடவில்லை. என்று சுருதி அமுக்கியப் பிராணங்களை யமனால் வளைக்கப் பட்டதாகவும், முக்கியப் பிராணன் வளைபடவில்லையென்றும் வேறுபடுத்தி விளம்பி யிருக்கிறது. அமுக்கியப் பிராணன் இந்திரியங்கள். '' அயம் வை ந : ஸ்ரேஷ்ட்ட :'' இந்தப் பிராணன், எங்களுக்குத் தலைவன் என்று பொறிகள் கூறுகின்றன. வை — உறுதி. வாக்காதி பொறிகளின் வியாபாரம் அப்பிராணனுக்கு அதீனமாக இருப்பதால் பிராணனே! நாங்கள் உனது வடிவமாயிருக்கிறோம் என்று உரைத்தது. தவறு ஒன்றுமில்லை. இதனால் இரண்டும் ஒன்றென்பதில்லை.

அன்பின் மிகுதியாலும், ஆதரவு நினைவாலும், உதவியின் உறுதுணையாலும் நாம் இருவரும் ஒருவர் என்று உரைப்பது உலக வழக்கு. அதனால் ஒன்று என்று அர்த்தமில்லை. இதனால் வாக்காதி இந்திரியங்கள் பிராணனுக்கு வேறு தத்துவம் என்பது தெற்றெனத் தெளிவாகின்றது.

## சமக்ஞாமூர்த்திக்லுருப்தி அதிகரணம்

### அவதாரிகை

சத்தைப் பற்றி விசாரிக்குமிடத்து நெருப்பு, நீர், அன்னம், இவை மூன்றையும் படைத்த பிறகு, '' இயம் தேவதாஐக்ஷத '' அந்த சத்ரூப தேவதையாகிய நான் இஜ்ஜீவரூபமாக அம்மூன்றனுள் நுழைந்து நாமரூப இவ்வுலகை படைப்பேன் என்றும், ஒவ்வொன்றையும் (திரிவிருத்) மும் மூன்றாக செய்வேனென்றும் எண்ணியது என்று சுருதி கூறுகின்றது. இவ்வாறு எண்ணுவது ஜீவனா அல்லது ஈசனா என்பது எதிரியின் சங்கை. இதற்கு சூத்திரம்—

## ௫. சம்க்ஞா மூர்த்திக்லுருப்திஸ்து திரிவிருத்குர்வத உபதேசாத் 20

சம்ஞா மூர்த்திக்லுருப்தி, து, திரிவிருத் குர்வத, உபதேசாத் என்று பிரிக்கவும்.

ப. உ. து = என்னுஞ் சொல் எதிரியின் துர்மதியை சுமதியாக்கு வதற்காக. திரிவிருத் குர்வத : = முத்தொழிலைச் செய்வது ஈசன் ஒருவனே. சம்க்ஞா மூர்த்தி க்லுருப்தி = சம்க்ஞா — பெயர், மூர்த்தி: — உருவம். உருவத்தை ஆக்குபவன் ஈசன் ஜீவன் அன்று. உபதேசாத் = ஈசன் ஜகத்திற்குக் காரணன் என்று மொழியப் பட்டிருக்கிறது.

வி. உ. சத்வடிவ தேவதை நான் ஜீவவடிவமாக நெருப்பு முதலிய மூன்று பூதங்களில் நுழைந்து நாம ரூப வடிவ உலகத்தை யுண்டு பண்ணுவேன் என்று நினைத்தது என்று மறைகளில் மலர்ந்திருக் கிறது. மலர்வது — மகிழ்ச்சியோடுக் கூறுவது.

இவண் நாம ரூப வடிவ இவ்வுலகை வெளிப்படுத்துபவன் ஜீவனு அல்லது ஈசனு என்பது ஐயம். உனது மதம் என்னை? ஜீவன் என்பது என்மதம். காரணம் யாது என்பாயாகில்? அநேக ஜீவன் என்னும் பதம் இருக்கிறது. இந்த ஜீவ வடிவமாக என்பது பொருள். உலகில் அன்னிய துருப்புக்களில் நான் நுழைந்து அங் குள்ளவர்களை யெண்ணுவேன் என்று அரசன் சொன்னல் அச்சொல் அவனைக் குறிப்பதுபோல தன்மையைக் குறிப்பதால் இங்கும் ஜீவனைத் தான் குறிக்கிறதென்பது எதிரியின் வழக்கு.

வாதி இங்ஙனம் எதிரி கூறும்போது சமாதானம் - சம்க்ஞா மூர்த்திகிலுருப்திஸ்து — ஒரு பொருளுக்கு உருவமும் நாமமும் உண்டு. உருவம் — வடிவம், நாமம் — பெயர். இவையிரண்டுக்கும் வியாகரணம் — விவிதாகரணம். பல்வேறு உருவங்களையும், பல்வேறு நாமங்களையும் செய்வதென்பது கருத்து. 'திரிவிருத்குர்வத' என்பது இறைவனைக் குறிக்கிறது. ஏனெனின்? பரந்து, படர்ந்து, விரிந்து கிடக்கும் பார் முழுவதையும் அவனுல்தான் படைக்க முடியும் என்பது நிர்விவாதம். அவன் — ஈசன். நிர்விவாதம் — மறுக்க முடியாத விஷயம். அக்னி, ஆதித்யன், மின்னல், நக்ஷத்ரம், நதி, நாலம், — குட்டை, மலை, செடி, மரம், தேவர், அசுரர், மனிதன், விலங்கு, பறவை, நீர் வாழ்வன, ஊர்வன, ஸ்த்தாவரம், கூபம், குளம், கடல், நிலம், புலம், இவைகளின் வேறுபாடு, கூறுபாடு, மாறுபாடு, இவைகளின் ஏற்றம், தோற்றம், மாற்றம், உயர்வு, தாழ்வு, குறைவு, நிறைவு என்பனவெல்லாம் இவ்வுலகில் காணப்படுகின்றன. இவையெல்லாம்

சகல வலிமையுடைய இறைவன் வேலையேயன்றி ஜீவன் வேலையாகாது. வேலை—காரியம். உபதேசத்தால் இதை நன்கு உணரலாம். 'ஆக்குவாய்க்காப்பாயழிப்பாய் அருள் தருவாய்' என்பது மணிவாசகம். பொருள் வெளி. ''ஜன்மாத்யஸ்யயத :'' என்னும்சூத்திரம் ஜகத்க் காரணம் பிரஹ்ம என்பதை விளக்குகிறது என்பது சங்கரபாஷ்யம். பொருள்-வெளி. இவ்வுலகத்தை ஆக்கிக் காத்து அழிக்கும் தன்மை ஜீவனுக்குஇன்மையால் அவன் உலகிற்குக்காரணன் ஆகான். அவன்—ஜீவன். சில விசிஷ்ட மக்களிடத்தில் வலிமை காணப்பட்டாலும் அதுவும் இறைவன் அதீனமாகும். எங்ஙனம் தூதன் முற்றிலும் அரசனுக்கு வேறு அதுபோல் ஜீவன் ஈசுவரனுக்கு முற்றிலும் வேறு.

விசாரிக்குமிடத்து வேதாந்தத்தில் ஜீவதத்வமும் ஈசுவரதத்வமும் ஒன்றேயாம். பேதம் உபாதியாய் வந்தது. அங்ஙனமாயின் ஜீவ-காரியமும் இறைவன் காரியமேயாம். இருவரும் ஒருவர் என்னும் உணர்வினுல் ஆகாச ரூபி யான்மா நாம ரூபமென்னும் ஜகத்திற்கு நிர்வாகஞ் செய்கிறது என்று சுருதி கூறுகின்றது. நிர்வாகம்—நடத்துவது. இதனுல் உலகத்தை நடத்துபவன் இறைவன் என்பது தெளிவு. இவண் வியாகரணம் திரிவிருத்கரணம். எல்லாப்படைப்பும் நெருப்பு, நீர், நிலம் சம்பந்தப்பட்டவை. இவண்—இங்கு. திரி விருத்துக்கரணம் பஞ்சீகரணத்திற்கும் உபலக்ஷணம் என்று சேர்த்துக் கொள்ளவேண்டும் என்பது பொருள்.

ஒவ்வொரு பூதத்திலும் மும்மூன்று கலந்திருப்பது எங்ஙனந் தெரிகிறதெனின்? நெருப்பிலிருக்கும் சென்னிறம் அக்னியின் கூறு. வெண்ணிறம் நீரின்கூறு, கருநிறம் அது அன்னத்தின்கூறு என்று உணர்க. இம்மாதிரி ஆதித்யன். சந்திரன், மின்னல் இவைகளிலும் அக்னி முதலிய உதாரண மூலமாக மண்ணின் விகாரத்திலும், நீரின் விகாரத்திலும், நெருப்பின் விகாரத்திலும் திரிவிருத்துக்கரணம் கலந் திருக்கிறதென்று தெரிந்து கொள்ளவும். அடியிலும் முடிவிலும் ஒன்று போல் உரைக்கப்பட்டிருக்கிறது. ஆகையால் எல்லா இடங்களிலும் திரிவிருத்துக் கரணங்கலந்திருக்கிறதென்பது தெளிவு. இதனுல் இந் நாம ரூப பிரபஞ்சத்தை யிறைவன் செய்வதேயன்றி ஜீவன் செய் வதல்ல என்பது நன்கு புலனும்.

## அவதாரிகை

இம்மூன்று தேவதையும் புருஷவடிவ ஆன்மாவை அடைந்து ஒவ்வொன்றும் திரிவிருத்துக் கரணத்தைப் பெறுகின்றது. புறத்திலுள்ள பொருள்களில் திரிவிருத்துக் கரணத்தைக் கூறி அகத்தில் உள்ள பொருள்களிலும் திரிவிருத்துக் கரணத்தைக் கூறத் தொடங்குகின்றார் -

## ஸூ மாம்ஸாதி[3] பௌமம்[4] யதாசப்தம் இதரயோஸ்ச 21

மாம்சாதி, பௌமம், யதாசப்தம், இதரயோ: ச என்று பிரிக்கவும்.

ப.உ. மாம்சாதி = மாம்சம், மலம் முதலியவை. பௌமம் = திரிவிருத்துக்கிருத-மூன்று கரணங்களும் கலந்த அன்னவடிவ பூமியின் காரியம். ச = இம்மாதிரி. யதாசப்தம் = இந்தமாதிரி சுருதிக்கிணங்க. இதரயோ: = நீர் நெருப்பு இவைகளிலும் திரிவிருத்துக்கரணத்தை சேர்த்துக் கொள்ளவும்.

வி.உ. மனிதனால் திரிவிருத்துக் கரணங்கலந்து அன்ன முதலிய நவதான்யங்கள் நுகரப்பட்டு மலம் மாம்சம் மனம் முதலிய உருவத்தைத் தரிக்கின்றன. அன்னமஸீதம் = உண்டற்ற அன்னம். த்ரேதா விதீயதே = மூன்று கூறுக ஆகின்றன. தஸ்ய = அன்னத்தின் ய:ஸ்தவிஷ்ட்டோதாது: = எந்த தூலபாகமுண்டோ தத்புரீஷம் பவதி = அது மலமாகிறது. யோமத்யம = எது மத்யமம்-சூக்குமம். தன்மாம்சம். யோஅணிஷ்ட்ட: = காரணபாகம். தன்மன: = அதுமனம் சா.உ. (6-5-1) என்பது மறையின் மொழி. இவ்வாறு ஏனைய இரண்டிலும் நீர், நெருப்பிலும் அதன் அதன் காரியங்களைக்கண்டு கொள்ளவும். நீரின் காரியம் மூத்திரம், உதிரம், பிராணன். (உதிரம் — ரக்தம்) எலும்பு, மஜ்ஜை, வாக்கு இவை மூன்றும் நெருப்பின் காரியம். அந்தந்த மறையின் வாக்கியத்தால் உணர்க.

ஒரு கூறு மலமாகும் ஒரு கூறுடம்பாகும் ஒரு கூறு மநமாகும் உண்டற்ற வன்னம். என்பது (சசிவன்னபோதம்) பொருள் வெளி.

இதன் மூலமாக திரிவிருத்துக்கரணம் தெளிவாகின்றது.

**அவதாரிகை**

எல்லாம்; பூதம், பௌதிகம், முதலிய திரிவிருத்கிருதம் - மூன்று பூதங்களால் ஆக்கப்பெற்றது என்று மொழிந்த சுருதிவாக்கியம் - "தாஸாம் திரிவிருதம் திரிவிருதம் ஏகைகாம்அகரோத்" சா.உ. தாஸாம் = நெருப்பு, நீர், நிலம் இவைகளில். ஏகாம் ஏகாம் = ஒவ்வொன்றும். திரிவிருதம் திரிவிருதம் = மும்மூன்று பூதங்களோடு கலந்து. அகரோத் செய்யப்பட்டிருக்கிறது. இங்ஙனமிருக்க, இதுஅன்னத்தின் காரியம், இது நீரின்காரியம், இது நிலத்தின்காரியம் என்று விசேடமாக கூறுவானேன் என்பதற்கு சூத்திரம்வருமாறு —

## சூ. வைஸேஷ்யாத்து தத்வாதஸ்தத்வாத:22

வைஸேஷ்யாத், து, தத்வாத:, தத்வாத:, என்று பிரிக்கவும்.

ப.உ. து - சப்தம் எதிரியின் ஐயத்தை யகற்றும் பொருட்டு. மூன்று பூதங்களும் முறையாக திரிவிருத்துக் கரணம் பொதுவாக இருந்தாலும், வைசேஷ்யாத் = பூமி, நீர் இவைகளில் மிகுதியாக இருப்பதால். தத்வாத: இது நிலம், இதுஜலம் - நீர். இம்மாதிரி வியவகாரமுண்டாகிறது. இரண்டாவது தத்வாதம் பாதமும் அத்யாயமும் முற்றுப்பெறுகிற தென்பதைக் குறிக்கிறது.

வி.உ. மூன்று பூதங்களும் முறையாக திரிவிருத்துக் கரணமாயிருக்க, பின்னே இதுநிலம், இதுநீர், இதுஅன்னம், அத்யாத்மம் - இவ்வுடலில் மாம்சாதிகள் உண்ட அன்னத்தின் காரியம், இந்த உதிரங்கள் பருகிய்நீரின் காரியம், இந்த எலும்பு முதலியவை (எண்ணெய், நெய்) நெருப்பின் காரியம் என்று சுருதியின் விசேடமாக ஏன் மொழியப்பட்டிருக்கிறது? என்பது எதிரியின் வழக்கு. இந்த எதிரியின் எதிர்ப்பையிடித்து நொறுக்குவதற்கு து, என்னும்சொல் துணைபுரிகிறது. விசேஷத்தின் தன்மை வைசேஷ்யம். இங்குதன்மையென்பது மிகுதியைக் குறிப்பது. திரிவிருத்துக் கரணம் பொதுவாக இருந்தாலும் நெருப்பில் அக்னி மிகுதியாகவும் ஏனையயிரண்டும் குறைவாகவும் இருக்கின்றன. நீரில் தண்ணீர் மிகுதியாகவும் ஏனையஇரண்டும் குறைவாகவும், நிலத்தில் அன்னம் மிகுதியாகவும் மற்றைய இரண்டும் குறைவாகவும் இருக்கும். வியவகாரத்தின் பொருட்டு திரிவிருத்துக்கரணம். மும்முரிக்கயிறுபோல - ஆதாவது

மூன்று பின்னலாகச் சேர்க்கப்பட்ட கயிறுபோல இம்மூன்றும் ஒன்று பட்டால் உலகில் வியவகாரம் உண்டாகும். தனித்தனியாக இருந்தால் மூன்று பூதங்களைப் பற்றிய வியவகாரம் நிகழாது. எனவே திரிவிருத்துக்கரணம் சுருதிகளில் சொல்லப்பட்டது. தத்வாதம் என இருமுறை இசைத்தது. நான்காவது பாதமும் இ ர ண் டா வ து அத்யாயமும் முற்றுப்பெற்றது என்பதை முறையாய் உணர்த்துவதற்கு.

ஸ்ரீசுவாமி யோகானந்தகிரி வேதாந்த ஆசாரியாள் அவர்களால் ஸ்ரீபகவத்பாதாள் இயற்றிய சங்கர பாஷ்யத்தின் தமிழ் வியாக்யானமென்னும் நான்காவது பாதம் இரண்டாவது அ த் ய ா ய ம் முற்றுப் பெற்றது.

**பவசங்கர தேசிகமே சரணம்.**





மதுரை ஸ்ரீ பிரஹ்மானந்த சுவாமிகள் மடத்தின் வெளியீட்டின் புத்தக விபரங்கள்

| | | |
|---|---|---|
| 1) | பிரம்மானந்த யுக்திரத்னகரம் | ரூ. 15-00 |
| 2) | ஞானவாசிட்டம் | ரூ. 15-00 |
| 3) | பக்தி ஞானமிர்தம். | ரூ. 4-00 |
| 4) | ஈசாவாஸ்ய பிரவசனம். | ரூ. 2-00 |
| 5) | பிரமசூத்திரம் முதல் அத்யாயம். | ரூ. 5-50 |
| 6) | குருபரக்கண்ணி. | ரூ. 1-00 |
| 7) | வேதாந்த ரத்னம். | ரூ. 1-50 |

ஸ்ரீ மீனம்பிகை பிரஸ், மதுரை. போன் ; 32869.